








# லைப்பாய் சோப்

தினசரித் தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமிகளி
லிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது. L. 250-50 TM

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 14
இதழ் 21

ஜய ௵
மார்கழி 4உ

1954 டிசம்பர் 19




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 14



இதழ் 21

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# நீடித்து வாழ நியாயம் வழங்குக !

சென்ற சில மாதங்களாக, திருவாங்கூர் கொச்சி ராஜ்யம் திடீர் சம்பவங்களுக்கும் திடுக்கிடத்தக்க காரியங்களுக்கும் நிலைக்களமாக இருந்து வருகிறது.

சென்ற வாரம் அங்கு நடந்த தி. கொ. ராஜ்ய சட்ட சபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில், அங்கு அதிகாரத்தில் உள்ள பிரஜா சோஷலிஸ்ட் சர்க்காருக்கு காங்கிரஸ் கட்சி அளித்து வந்த ஆதரவை வாபஸ் செய்து கொள்வது என்று முடிவாகி யிருக்கிறது.

இனி பி. சோ. சர்க்காருடன் ஒத்துழைப்பதில்லை என்றும் காங்கிரஸ் கட்சியினர் அக் கூட்டத்தில் தீர்மானித்திருக்கிறார்கள்.

பிரஜா சோஷலிஸ்ட் கட்சி சர்க்காரின் ஆட்சி சென்ற ஒன்பது மாதங்களாக அந்த ராஜ்யத்தில் நடந்து வருவது யாவரும் அறிந்த விஷயம்.

இந்த ஒன்பது மாத காலத்தில் அதன் ஆட்சியிலே கண்ட பலன் என்ன ?

1. பி. சோ. சர்க்காரின் ஆட்சி முற்றிலும் தோல்வி அடைந்து விட்டது.

2. தி. கொ. ராஜ்யத்தின் தென் பகுதியில் உள்ள தாலுக்காக்களில் வாழும் தமிழர்களுக்கும், மற்ற மலையாளிகளுக்கும் இருந்து வந்த வேற்றுமையும் விரோதமும் பி. சோ. சர்க்காரின் ஆட்சியில் உச்சஸ்தானத்தை அடைந்து விட்டன.

3. தி. கொ. ராஜ்யத்தைச் சேர்ந்த மக்களிடையே குறுகிய உணர்ச்சிகள் அளவசிய மாகத் தூண்டிவிடப் பட்டுள்ளன.

4. மேற்படி சர்க்காருக்குக் காங்கிரஸின் ஆதரவு இருக்கிறது என்ற எண்ணம் மக்கள் மனத்தில் பதிந்து விட்டது. ஆனால், உண்மை அப்படியல்ல. எந்த முக்கிய விஷயத்தை ஒட்டியும் பி. சோ. சர்க்கார் காங்கிரஸ் கட்சியைக் கலந்து கொண்டதில்லை.

இவைதான் திருவாங்கூர் கொச்சி ராஜ்ய காங்கிரஸ் கட்சி நிறைவேற்றியுள்ள தீர்மானத்தின் சாரம் ஆகும்.

இந்த ஒன்பது மாதங்களுக்குப் பிறகாவது தி. கொ. காங்கிரஸ் கட்சிக்கு ஞானோதயம் ஏற்பட்டதைக் குறித்து மகிழ்ச்சி அடைகிறோம்.

ஆனால், தி. கொ. ராஜ்யத்தில் பி. சோ. சர்க்கார் ஏற்பட்டதற்குக் காங்கிரஸ் கட்சி செய்த தவறே காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

திருவாங்கூர் தமிழர்களின் தர்ம நியாயமான கோரிக்கைகளுக்கு காங்கிரஸ் கட்சி ஆரம்பத்திலேயே இணங்கி யிருந்தால், அங்கு அவசரம் அவசரமாகத் தேர்தல் நடந்திருக்க வேண்டிய அவசியமில்லை.

மொத்தம் 118 அங்கத்தினர்கள் கொண்ட சபையில் 19 அங்கத்தினர்களே உள்ள பி. சோ. கட்சிக்குக் காங்கிரஸ் கட்சியினர் ஆதரவளித்து அற்பாயுள் சர்க்காரை அமைக்க வேண்டிய அவசியமும் இராமற் போயிருக்கும்.

தி. கொ. சட்டசபையில் காங்கிரஸ் கட்சி வேறு ஏதாவது ஒரு கட்சியின் ஆதரவின்றி இயங்குவது முடியாத காரியம்.

காங்கிரஸ் கட்சியினர் வேறு யாருடைய ஆதரவைப் பெற்றாலும், அந்த ராஜ்யத்தில் எழுந்துள்ள தமிழர் பிரச்னை சுமுகமாகத் தீர்ந்தாலன்றி, அங்கு திடீர் நிகழ்ச்சிகளும் நெருக்கடிகளும் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கும்.

தவிர, திருவாங்கூர் தமிழர்களுக்கு நியாயம் வழங்காத எந்த சர்க்காரும் அங்கு அதிகாரத்தில் நீடித்து இருக்க முடியாது என்பதையே, இப்போது ஏற்பட்டுள்ள நெருக்கடி சந்தேகத்துக்கு இடமின்றிக் காட்டுகிறது.

எனவே, இனிமேலாவது திருவாங்கூர் தமிழர்களின் கோரிக்கைக்கு இணங்கி, அவர்களுடைய ஆதரவு பெற்று அங்கு ஸ்திரமான சர்க்கார் அமைவதற்குக் காங்கிரஸ் கட்சியினர் முயற்சி எடுத்துக் கொள்வார்கள் என எதிர்பார்க்கிறோம்

# சுபிட்ச வாழ்வின் ஜீவ நாடி

சில தினங்களுக்கு முன் அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்த அமெரிக்க விவசாயிகளில் ஒருவர் மாயூரத்துக்குச் சென்றிருந்தார். தாழஞ்சேரி கிராமத்தைச் சேர்ந்த விவசாயி ஒருவரைச் சந்தித்துப் பேசினார்.

“எங்கள் நாட்டிலே உங்களைப் போன்ற விவசாயிகள் ஒற்றை சிலிண்டர் மோட்டார் வண்டியும் இரட்டை சிலிண்டர் மோட்டார் வண்டியும் வைத்துக் கொண்டிருக்கிறார்களே.”

இவ்வாறு பெருமையுடன் கூறிய சார்லஸ் கெஸ்ட்ரிங் என்ற அந்த அமெரிக்கருக்குத் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த தாழஞ்சேரி விவசாயி சளைக்கவில்லை.

“எங்களிடம் ஒற்றை மாட்டு வண்டியும் இரட்டை மாட்டு வண்டியும் இருக்கின்றனவே” என்று ஒரு போடு போட்டு அமெரிக்க விவசாயியைத் திகைக்க வைத்து விட்டார்.

கரடு முரடான காட்டுப் பாதை வழியாகச் சிரமமின்றி இந்திய விவசாயி மாட்டு வண்டியை ஓட்டிச் சென்றதை நேரில் பார்த்தபோதுதான், இந்தியாவில் விவசாய அபிவிருத்திக்கு மாட்டு வண்டியின் அவசியத்தை அவர் உணர முடிந்தது.

அந்த அமெரிக்கர் இந்திய விவசாயியைப் போலவே வேஷ்டி உடுத்திக் கொண்டார்; சாம்பாரும் ரசமும் சாப்பிடக் கற்றுக் கொண்டார்; வயலுக்குச் சென்றார்; மண் தோண்டினார்; ஏர் பிடித்து உழுதார்; பயிர் நட்டார் என்று நமக்கு ஒரு நிருபர் எழுதியுள்ளார்.

அந்த அமெரிக்கருக்கு அமெரிக்காவிலே சொந்தத்தில் பெரிய பண்ணை இருக்கிறது; அப்படியிருந்தும் அவர் எத்தகைய வேலையையும் செய்யத் தயங்கவில்லை; எத்தகைய உழைப்பையும் தமது கௌரவத்துக்குக் குறைவாகக் கருதவில்லை என்று அந்த நிருபர் தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

இதிலிருந்து அமெரிக்காவில் உள்ள பெரும் பண்ணைச் சொந்தக்காரர்களும் உடல் உழைப்பை இன்றியமையாததாகக் கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிகிறது அல்லவா!

இதை யெல்லாம் மனத்திற் கொண்டுதான், சாம்பல்பூரில் சென்ற வாரம் நடந்த அரசியல் மகாநாட்டில், தேச மக்களின் இடைவிடாத உழைப்பின் மூலம்தான் சுபிட்ச இந்தியாவை உருவாக்க முடியும் என்று ஜவாஹர்லால்ஜி அழுத்தந் திருத்தமாகக் கூறியுள்ளார்.

* * *

நாகரிக நகர வாழ்வில் பங்கு கொள்ளாமல் கிராமங்களில் உழுதுண்டு வாழும் இந்திய விவசாயிகள் எவ்வளவு அறிவாளிகள் என்பதை தாழஞ்சேரி விவசாயி அமெரிக்கருக்கு அளித்துள்ள பதில் நன்கு நிரூபணம் செய்கிறது.

டிராக்டர்கள், புல் டோஸர்கள் முதலிய பல்வேறு நவீன யந்திர வகைகளைக் கொண்டு அமெரிக்காவில் வேளாண்மை செய்கிறார்கள். ஆனால், அந்த நாட்டில் உள்ள சூழ்நிலைக்கும் இந்தியாவில் உள்ள சூழ்நிலைக்கும் எவ்வளவோ வேற்றுமை உண்டு.

வெளி நாடுகளிலிருந்து பெரிய பெரிய யந்திரங்களை இறக்குமதி செய்வதால் இந்தியாவின் பொருளாதார நிலைக்குக் குந்தகம் ஏற்படுவதுடன், அதனால் வேலையற்றோரின் தொகையும் அதிகமாகி விடும் என்பதில் சந்தேகமில்லை.

அதனால்தான், ஆக்கத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கு இன்றியமையாத யந்திர சாதனங்களைத் தவிர, மற்றவைகளை இறக்குமதி செய்வது கூடாது என்று சில தினங்களுக்கு முன் பண்டித ஜவாஹர்லால் நேரு கண்டிப்பாகக் கூறினார்.

யந்திர சாதனங்களைக் காட்டிலும் மக்களின் ஒற்றுமையும் உறுதியும் உடல் உழைப்பும் ஊக்கமுமே முக்கியமானவை என்று நேருஜி கூறுவதற்கு உலக சரித்திரங்களில் எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன.

# தஞ்சை விவசாயி கண்ட உண்மை!

இங்கிலாந்திலே பதினெட்டாம் நூற்றாண்டில் கைத் தொழில் புரட்சி ஏற்பட்ட போது, அத் தேசத்தினர் பெரிய பெரிய யந்திரங்களை உற்பத்தி செய்வதிலும் தொழிற்சாலைகளை நிறுவுவதிலும் கவனம் செலுத்தினர்.

பெரிய தொழிற்சாலைகளை ஆரம்பிக்க ஏராளமான மூலதனம் வேண்டும் அல்லவா! அச்சமயம் இங்கிலாந்தின் அதிர்ஷ்டம், அதற்கு இந்தியா தேவையான மூலதனத்தைக் கொடுக்கும் பொக்கிஷமாக அமைந்தது. எனவே, கடன் வாங்காமலும் வேறு விதமான கஷ்ட நஷ்டங்களுக்கு இலக்காகாமலும் இங்கிலாந்து, பல்வேறு சாதனங்களையும் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளைப் பெருக்கத் தொடங்கியது. எனினும், அதன் காரணமாக இங்கிலாந்து சமாளிக்க வேண்டிய சங்கடமான பல புதிய பிரச்னைகளும் எழுந்தன.

இங்கிலாந்துக்கு, பெரிய தொழிற் சாலைகளை அமைப்பதற்கு இந்தியாவிலிருந்தே பெரும் தொகை வர வேண்டியிருந்தது. இந்தியாவிலிருந்தே தொழிற் சாலைகளுக்குத் தேவையான மூலப் பொருள்களும் வரவேண்டி யிருந்தன.

இந்தியாவின் மூலப் பொருள்களைக் கொண்டு இங்கிலாந்தில் உற்பத்தியான சாதனங்களை ஒன்றுக்கு மூன்று விலை கொடுத்து இந்தியாவே வாங்கவும் வேண்டி யிருந்தது.

எனவே அவசரப்பட்டு யந்திர வகைகளை இறக்குமதி செய்வதிலோ, உற்பத்தி செய்வதிலோ எவ்வளவு விபரீதங்கள் ஏற்படுகின்றன என்பது தெரிகிறது அல்லவா!

இந்தியாவில் உள்ள லட்சக்கணக்கான கிராமங்களிலும் ஏற்கனவேயே விவசாயிகள் வருஷத்தில் ஆறு மாதம் வேலையில்லாமல் உள்ளமும் உடலும் சோர்ந்து உட்கார்ந்திருக்கிறார்கள்.

இந்நிலையில் டிராக்டர், புல்டோஸர் போன்ற யந்திர வகைகளும் வந்து விட்டால், வேறு வினையே வேண்டியதில்லை.

எனவே, வேளாண்மை சம்பந்தப்பட்ட வரையில் இன்று இந்தியாவின் முன்னுள்ள பிரச்னை, ஆறு மாதம் வேலையில்லாமல் இருக்கும் விவசாயிகளை எப்படி உபயோகித்துக் கொள்வது என்பது தான்; எத்தனை டிராக்டர்கள், எத்தனை சிலிண்டர் மோட்டார் வண்டிகள் இறக்குமதி செய்வது என்பதல்ல. இந்தத் தத்துவத்தை, இந்த உண்மையை, தஞ்சை விவசாயி அமெரிக்க விவசாயிக்கும், இந்தியாவில் உள்ள நிபுணர்களுக்கும் ஒரே வாக்கியத்தில் தெளிவு படுத்தி விட்டார் எனலாம்.

# ஏந்த நாளும் காப்போம்!





# நீங்கள் இன்று
# உங்கள் பற்களை
# மக்ளீன்
# செய்தீர்களா?



**ஆம், அதன் இரகசியம் இதுதான் . . .**

பற்களைத் தவறாமல் சுத்தம் செய்து வருவதால் அவை நெடு நாளைக்கு ஆரோக்யமாக இருக்கின்றன என்பதைத் தெளிவாக்கி விடுவோம். பிரதி தினமும், இருவேளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உபயோகிப்பதால், அதிக வெண்மையான பற்களும், உறுதியான ஈறுகளும் நறுமணமுள்ள சுவாசமும் நிச்சயமாக உண்டாகின்றன. இவ்வித்தியாசத்தை நீங்களே காணலாம். மக்ளீனிலுள்ள ஒரு ப்ரத்யேகமான பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை மாற்றி பற்களின் மேல் இயற்கையாக ஒளிரும் வெண்மையை வெளிக்கொணர்கிறது.

"... என்னைப்
போலவே உங்
களது பற்களை
ப் பற்றிப் பெரு
மைப் படுபவர்
களுக்கு மக்ளீன்
ஸ் பற்பசையை
யே சிபார்சு
செய்கிறேன்"




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்.

MTY-38-TAM.

# அன்பார்ந்த நேயர்களுக்கு

என்னுடைய இணைபிரியா நண்பரும், தமிழ் நாட்டின் ஆயிரக்கணக்கான கல்கி நேயர்களின் பூரண அன்புக்குப் பாத்திரமான ஆசிரியரும், இந்த ஸ்தாபனத்தின் வளர்ச்சியிலே அல்லும் பகலும் அக்கறை கொண்டு உழைத்தவருமான பேராசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இறைவன் திருவடி யடைந்து இந்த ஞாயிறோடு பதினைந்து நாட்கள் ஆகின்றன. நேயர்களுடன் உரையாடுவதற்குரிய மன நிம்மதி எனக்கு இன்னும் பூரணமாக உண்டாகவில்லை. எனினும் இந்த ஸ்தாபனத்தின் வளர்ச்சியைக் குறித்து ஆவலும் ஆர்வமும் கொண்டுள்ள எண்ணற்ற நேயர்களுக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் சில விவரங்களைக் கூறுவது என் கடமை.

கடந்த முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக, ஸ்ரீ ரா. கி. அவர்களும் நானும் பல துறைகளில் ஒன்றாக இருந்து பணி செய்யும் வாய்ப்பு ஏற்பட்டிருந்தது. ஆரம்பத்தில் இருவரும் விடுதலைப் போராட்டத்தில் சேர்ந்தோம். நாட்டின் விடுதலையும், நாட்டு மக்களின் நலமுமே இலட்சியமாகக் கொண்டிருந்த ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியோடு இணை பிரியாமல் நின்று நாட்டுக்குச் சேவை செய்யும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. விடுதலைப் போராட்டத்தின் அநுபவங்களையும், பொதுக் கூட்டங்களையும், சர்க்கார் நடவடிக்கைகளையும் சிறை வாசத்தையும் இன்று எண்ணிப் பார்க்கும் போது, கல்கி அவர்களுடைய அந்த அநுபவங்களில் எல்லாம் என்னுடைய வாழ்வும் எப்படிப் பின்னி யிருந்திருக்கிறது என்று தெரிந்து, அந்த வாய்ப்பை எண்ணி மனம் நெகிழ்கிறது! ஒன்றாகப் போரிட்டோம். ஒன்றாகப் பொதுக் கூட்டங்களிலே பணி புரிந்தோம். ஒன்றாகச் சிறை சென்றோம். சுகம் துக்கம் இரண்டையும் ஒன்றாகவே, சமமாகவே, இருவரும் அநுபவித்தோம்.

1941-ம் ஆண்டில் தனியாக ஒரு பத்திரிகை ஆரம்பிக்க வேண்டும் என்று இருவரும் ஒன்றாய் இருந்து யோசித்தோம். பின்னர், பத்திரிகைக்கு என்ன தலைப்பு வைப்பது என்பது பற்றி எங்களுக்குள் சர்ச்சை நடந்தது. கடைசியில் "கல்கி" என்ற அவருடைய புனை பெயரையே பத்திரிகைக்கும் வைப்பதுதான் சரி என்று நான் கருதினேன். நீண்ட யோசனைக்குப் பின் இந்தக் கருத்தையே ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும் ஒத்துக் கொண்டார்.

1941-ஆண்டு ஆகஸ்ட் 1-ந் தேதி யன்று மாதம் இருமுறைப் பத்திரிகையாகத் தொடங்கி, பின்னர் மும்முறையாக்கி, பிறகு நேயர்களின் பேராதரவினால் இந்தப் பத்திரிகை ஒரு வார இதழாகவே வளர்ந்து வந்திருக்கிறது.

இன்று என் நண்பர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை எண்ணியதும், இத்தனை அநுபவங்களும் நினைவு வருகின்றன. இவற்றை யெல்லாம் நேயர்களிடம் பகிர்ந்து கொள்ளலாம் என்று கருதியே இங்கே குறிப்பிடுகிறேன்.

இனி மரணத்தைப் பற்றியே எண்ணி மனம் வருந்துவதில் பயனில்லை. அன்னாருடைய ஆத்ம சாந்திக்குப் பிரார்த்திப்பதோடு, அவருடைய ஜீவனை இன்று நம்மிடையே நிற்கும் இந்தப் பத்திரிகையை மேலும் மேலும் வளர்ப்பதே அவருடைய இணைபிரியா நண்பன் என்ற முறையில் நான் செய்யக்கூடிய சேவை என்று கருதுகிறேன். இந்த சேவையில் நேயர்கள் அனைவருடைய நல்லெண்ணமும், பூரண ஆதரவும் எனக்கு மேலும் மேலும் கிட்டும் என்று எதிர்பார்ப்பதோடு, அந்த ஆதரவை என் சார்பிலும் மறைந்து சென்ற என் நண்பரின் சார்பிலும் வேண்டிக் கொள்கிறேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நண்பர் கிருஷ்ணமூர்த்தி எழுதிவிட்டுப்போன 'அமரதாரா' என்ற தொடர் கதையைப் பற்றி ஒரு வார்த்தை.

மதுரையிலிருந்து ஒரு நேயர் இந்தக் கதையை மீண்டும் தொடர்ந்து வெளியிடுவது குறித்து யோசனை தெரிவித்திருக்கிறார். அந்தக் கடிதம் இன்னொரு பக்கத்தில் பிரசுரமாகிறது. இதைப் போன்றே இன்னும் பல நேயர்களும் எழுதியிருக்கிறார்கள். இவர்கள் அனைவருக்கும் இந்த துக்கத்திடையே மகிழ்ச்சிக்குரிய ஒரு செய்தியையும் தெரிவிக்க விரும்புகிறேன்.

கல்கி அவர்கள் 'அமரதாரா' என்ற கதையைத் திரைப்பட நோக்கத்துடன் முதலில் எழுதினார். இந்த எண்ணத்தில் என்னுடைய யோசனையும் கலந்திருந்தது. எனவே கதையின் குறிப்புக்களும் அங்கங்கே சம்பாஷணைகளும்கூட எழுதி முடித்து வைத்திருக்கிறார். இந்தக் குறிப்புக்களை வைத்துக் கொண்டே வாரந்தோறும் விரிவுபடுத்தி எழுதி வந்தார். இப்பொழுது இந்தக் காரியத்தை அன்னாருடைய புதல்வி ஸ்ரீமதி ஆனந்தி தொடர்ந்து செய்வார் என்பதை மகிழ்ச்சியோடு அறிவிக்கிறேன். ஆனந்தி ஒரு பேராசிரியரின் புதல்வி என்பதோடு, ஏற்கெனவே பல கதைகளும் கட்டுரைகளும் எழுதி அநுபவம் அடைந்தவர். தந்தையின் பூரண ஆசியையும் பெற்றவர். அவர் தமது தந்தைக்குச் செய்யும் ஒரு சேவையாகக் கருதி இந்தப் பணியை நிறைவேற்ற முன் வந்துள்ளதை ஊக்கமூட்டி வளர்ப்பது என்னுடைய கடமை. நேயர்களும் இந்த முயற்சிக்கு உற்சாகமூட்டி ஆதரிப்பார்கள் என்று எதிர்பார்க்கிறேன். 26—12—54 கல்கி இதழிலிருந்து ஸ்ரீமதி ஆனந்தி "அமரதாரா" கதையைத் தொடர்ந்து எழுதுவார்.

* * *

இன்னொரு புதிய அம்சத்தையும் இங்கே குறிப்பிட வேண்டும். சென்னை சர்வகலாசாலைத் தமிழ்த் துறைத் தலைவர், பேராசிரியர் ஸ்ரீ ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள், ஜனவரி மாதம் "கல்கி" பொங்கல் இதழிலிருந்து "ஆற்றங் கரையினிலே" என்ற தலைப்பில் தமிழ் இலக்கியத்திலிருந்து அருமையான கவிதைகளுக்குத் தொடர்ந்து வாரந்தோறும் விளக்கம் எழுதி வருவார்கள். இந்தப் புதிய தொடரும் நேயர்களுக்கு உவகை தரும் ஒரு அம்சம் என்று கருதுகிறேன்.

துக்கத்தின் மத்தியில் ஆறுதல் பெறுவதிலும், எதிர் காலத்துக்கு உரிய திட்டங்களைச் செய்வதிலுமே மனித முயற்சிகள் அடங்கி யிருக்கின்றன. இவ்வகையில் கல்கிப் பத்திரிகையின் புதிய அமைப்புக்களில் நேயர்களின் ஆதரவு மேலும் மேலும் வளர வேண்டும் என்பதே என் வேண்டுகோள்.

வணக்கம்.

கல்கி காரியாலயம்
சென்னை
17—12—54

சதாசிவம்
மானேஜிங் டைரக்டர்



# பரிசல்

காவேரி நதியின் பரிசல் துறையில் அரச மரம் ஒன்று செழிப்பாக வளர்ந்து கப்பும் கிளையுமாகப் படர்ந்து நிழல் தந்து கொண்டிருந்தது. இளங்காற்று வீசியபோது அதனுடைய இலைகள் ஒன்றோடொன்று உராய்வதில் ஏற்பட்ட 'சலசல' சப்தம் மிகவும் மனோகரமா யிருந்தது. அரசமரத்துடன் ஒரு வேப்ப மரமும் அண்டி வளர்ந்தது. இவற்றின் அடியில் இருந்த மேடையில்ஒரு கல்லுப் பிள்ளையார் எழுந்தருளி யிருந்தார்.

பிள்ளையார் சதா சர்வதா, இருபத்தி நாலுமணி நேரமும், அவருக்கெதிரே கொஞ்ச தூரத்தில் இருந்த ஒரு காப்பி ஹோட்டலைப் பார்த்தவண்ண மிருந்தார். ஆனால் அவருக்கு ஒரு அரை கப் காப்பி யாராவது கொடுத்ததுண்டோ என்றால், கிடையாது. சில சமயங்களில் காப்பிக் கொட்டை வறுக்கும்போது வரும் வாசனையை அநுபவிப்பதுடன் அவர் திருப்தி யடைய வேண்டி யிருந்தது.

வேலம் பாளையம் ஒரு சின்னஞ் சிறு கிராமம். அதற்குச் சமீபத்திலுள்ள ரயில்வே ஸ்டேஷன் பதின்மூன்று மைல் தூரத்திலிருப்பது. கிராம வாசிகள் ரொம்பவும் சாமானியமான ஜனங்கள். குடியானவர்களும், கைக்கோளர்களும், ஹரிஜனங்களும்தான் அங்கே வசித்தவர்கள்; காவேரிக் கரையில் இருந்தும் ஜலக் கஷ்டம். அவ்விடம், காவேரி ஆற்றின் தண்ணீர் சாகுபடிக்குப் பயன் படுவதில்லை. பூமி அவ்வளவு மேட்டுப் பாங்கா யிருந்தது. சாதாரணமாய், கரையிலிருந்து வெகு ஆழத்தில் ஜலம் போய்க் கொண்டிருக்கும். பெரும் பிரவாகம் வருங்காலத்தில் அரசமரத்தின் அடி வேரைத் தொட்டுக்கொண்டு போகும்.

இப்படிப்பட்ட பட்டிக் காட்டிலே கொண்டு வந்து காப்பி ஹோட்டல் வைத்திருந்தார் ஒரு பாலக்காட்டு ஐயர். அவர் வட துருவத்துக்குப் போய்ப் பார்த்து, அங்கே கூட ஹோட்டல்கள் அதிகமாகி வியாபாரம் கம்மியாய்ப் போனதைத் தெரிந்து கொண்டுதான், இந்தப் பட்டிக் காட்டுக்கு வந்து சேர்ந்திருக்க வேண்டும்.

பரிசல் துறையிலிருந்து கிராமம் கொஞ்ச தூரத்திலிருந்தது. பரிசல் துறைக்கருகில் இரண்டே இரண்டு கூரைக் குடிசைகள். அவற்றில் ஒன்றிலே தான் ஹோட்டல். அதன் வாசலில் இங்கிலீஷிலே "டிரிப்ளிகேன் வாட்ஜ்" என்றும், தமிழிலே "பிராமணாள் காப்பி—டீ கிளப்" என்றும் எழுதிய போர்டு ஒன்று தொங்கிற்று. அன்று சந்தை நாள். ஆகையால் ஹோட்டலில் வியாபாரம் அதிகம். உள்ளே ஐந்தாறு பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் இரண்டொருவர் தையல் இலையில் வைத்திருந்த இட்டிலியை—கல்லுப் பிள்ளையாரைவிட அதிக கெட்டியாயிருந்த இட்டிலியை—வெகு சிரமத்துடன் விண்டு விண்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தனர்.

"ஐயரே! எங்கே, ஒரு கப் காப்பி கொண்டாருங்கோ, பார்க்கலாம்" என்றார் அவர்களில் ஒருவர்.

"எஞ்சாமி! நீங்க காப்பியிலே தண்ணி ஊத்தற வழக்கமா! தண்ணியிலே காப்பி ஊத்தற வழக்கமா!" என்றார் ஹாஸ்யப் பிரியர் ஒருவர்.

இப்போது உள்ளே யிருந்து, "இந்தா கவுண்டரே! இப்படி யெல்லாம் பேசினுக்கே, இங்கே உனக்கு ஒண்ணும் கிடைக்காது. காப்பி வாயிலே மண்ணைப் போட்டுடுவேன்" என்று கோபமான குரல் ஒன்று கேட்டது.

---

* சுமார் பதினாறு ஆண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்ட கதை. By courtesy 'Ananda Vikatan'.

"சாமி, சாமி! கோவிச்சுக்காதிங்க, சாமி! இனிமே நான் அப்படி உங்க காது கேக்கச் சொல்லலே, சாமி!" என்றார் கவுண்டர்.

இப்போது பரிசல் துறையிலிருந்து, "ஏ, ஓடக்காரத் தம்பி! எத்தனை நேரம் நாங்கள் காத்திருக்கிறது!" என்று ஒரு கூக்குரல் கேட்டது.

மேற் சொன்ன ரஸமான சம்பாஷணையில் கலந்து கொள்ளாமல் உட்கார்ந்திருந்த ஒரு வாலி பன், "ஐயரே! இட்லி கிட்லி ஏதாவது கொடுக்கப் போகிறயா, நான் போகட்டுமா!" என்றான்.

அப்போது அங்கிருந்தவர்களில் ஒருவன் "அதோ பார்த்தயா, சுப்பண்ணு! பத்ரகாளி போகிறாள்!" என்றான் பக்கத்தி லிருந்தவனிடம். ஓடக்காரத் தம்பி உடனே எட்டிப் பார்த்தான். இளம் பெண் ஒருத்தி தலையில் கத்திரிக்காய்க் கூடையுடன் பரிசல் துறைக்குப் போய்க் கொண்டிருந்தாள். அவ்விடம் அரசமரத்துப் பிள்ளையார் இருந்த இடத்துக்குக் கீழே சுமார் முப்பது, நாற்பது அடி ஆழம் இறங்கித்தான் தண்ணீர்த் துறைக்குப் போக வேண்டும். ஒரு கையால் தலைக் கூடையைப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கை ஊச லாட, இடுப்பு நெளிந்து நெளிந்து அசைய, அந்த இளம் பெண் ஓடத் துறைக்கு இறங்கிக் கொண் டிருந்த காட்சியை அசைப்பிலே பார்த்தால், உயர் தரச் சித்திரக்காரன் எழுதிய சித்திரக் காட்சி யைப் போல் தோன்றியது.

ஓடக்காரத் தம்பி அவளைப் பார்த்த உடன், "சரி, சரி, இந்த ஐயர் இட்லி கொடுப்பார் என்று காத்திருந்தால், அடுத்த வெள்ளிக்கிழமைச் சந்தைக் குத்தான் போகலாம்" என்று சொல்லிக் கொண்டு எழுந்து விர்ரென்று வெளியே சென்றான்.

அவன் போனவுடன் ஹோட்டலில் பின்வரும் சம்பாஷணை நடந்தது :—

"என்ன, பழனிசாமி திடுதிப்பென்று கிளம்பி ஓடி விட்டான்!"

"காரணமாகத்தான். அந்தப் பொண்ணைக் கட்டிக்க வேணுமென்று இவனுக்கு ரொம்ப ஆசை. அவள் அப்பன் காளிக்கவுண்டன் கூடாது என்கிறான். கள்ளுக்கடை வீரய்யக் கவுண்ட னுக்கு இரண்டாந் தாரமாகத்தான் கட்டிக் கொடுப்பேனென்கிறான். காளிக்கவுண்டன் பெரிய மொடாக் குடியன், தெரியாதா உனக்கு!"

"அதேன், பத்ரகாளி என்று அவளுக்குப் பேரு! அவள் அப்பன் வைச்சதுதானா!"

"அவள் நிஜப்பேர் குமரி நங்கை. ரொம்ப முரட்டுப் பெண். அப்பனுக்கு அடங்க மாட் டாள். ஊரிலே ஒருத்தருக்குமே பயப்பட மாட் டாள். அதனால்தான் 'காளி மவள் பத்ரகாளி' என்று அவளுக்குப் பெயர் வந்தது."

"அவளைக் கட்டிக்க வேணுமென்று இந்தப் பையனுக்கு ஆசை உண்டாச்சு, பாரேன்! என்ன அதிசயத்தைச் சொல்ல!"

* * *

குமரிநங்கை பரிசலின் சமீபம் வந்ததும், அதில் ஏற்கெனவே ஏறியிருந்தவர்களைப் பார்த்து, "ஏன், ஓடக்காரர் இல்லையா, என்ன!" என்றாள்.

"அதோ பார் பின்னலே!" என்றான் பரிசலில் இருந்தவர்களில் ஒருவன்.

குமரிநங்கை திரும்பிப் பார்த்தாள். பழனிசாமி அவளுக்கு வெகு சமீபமாய் வந்து கொண்டிருந்த தைப் பார்த்துக் காரணமில்லாமல் திடுக்கிட் டாள். பரிசலில் இருந்தவர்கள் சிலர் சிரித்தார்கள்.

ஆனால், பழனிசாமி இதை யெல்லாம் சற்றும் கவனிக்காதவன் போல் விரைவாகச் சென்று பரிசலில் ஏறினான். குமரிநங்கை ஏறினாளோ இல்லையோ, பரிசல் இரண்டு தடவை நின்ற இடத்திலேயே வட்டமிட்டு விட்டு, விர்ரென்று போகத் தொடங்கியது. படகி லிருந்தவர்கள் ஏதேதோ ஊர் வம்பு பேசிக் கொண்டிருந்தார்கள் ஆனால் பழனிசாமியாவது குமரி நங்கையாவது வாயைத் திறக்க வில்லை.

அக்கரை நெருங்கியதும், பழனிசாமி பரிசலைச் சிறிது நிறுத்தி, "துட்டு எடுங்க!" என்றான். எல்லாரும் இரண்டு இரண்டு அணு கொடுத் தார்கள். ஒருவன் மட்டும் ஒரு அணு பத்து தம்பிடி கொடுத்துவிட்டு, "இரண்டு தம்பிடி குறைகிறது, தம்பி! வரும்போது தருகிறேன்" என்றான். குமரி நங்கையும் கையில் இரண்டணுவை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். அதைப் பழனிசாமி கவனிக்கவுமில்லை; வாங்கிக் கொள்ளவுமில்லை. பரிசலைக் கரையிலே கொண்டு சேர்த்து விட்டுக் கீழே குதித்தான். எல்லாரும் இறங்கினார்கள். குமரி நங்கை கடைசியாக இறங்கி, இரண்ட ணுவை நீட்டினாள். பழனிசாமி அதைப் பாராத வன் போல் இருக்கவே, அவன் பரிசலின் விளிம் பில் அதை வைத்து விட்டுப் போய் விட்டாள்.

## 2

சூரியன் மேற்குத் திக்கில் வெகு தூரத்தி லிருந்த மலைத் தொடருக்குப் பின்னல் மறைந்து கொண் டிருந்தான். அங்கே சிதறிக் கிடந்த மேகங்கள் தங்க நிறங் கொண்டு பிரகாசித்தன.

பரிசல் துறையின் அந்தண்டைக் கரையில் ஒரு சில்லறை மளிகைக் கடை இருந்தது. உப்பு, புளி, சாமான்கள் அதில் வைத்திருந்தன. வாழைப்பழக் குலைகளும், கயிற்றில் கோத்த முறுக்குகளும் தொங்கின. பழனிசாமி அந்தக் கடை வாசலில் உட்கார்ந்து கொண்டு கடைக்காரச் செட்டியா ருடன் பேசிக் கொண்டிருந்தான். ஆனால் அவ னுடைய கவனம் பேச்சில் இல்லையென்று நன் ருய்த் தெரிந்தது. ஏனெனில், அடிக்கடி அவன் சாலையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். யாருடைய வரவையோ எதிர்பார்த்துத் தவித்துக் கொண்டிருப்பவன் போல் காணப்பட்டான்.

கடைசியாக, தூரத்தில் சாலையில் வளைவு திரும்பு கிற இடத்தில் குமரி நங்கை வருவதை அவன் கண்டான். உடனே துள்ளிக் குதித்து எழுந்து, "செட்டியாரே, போய் வாரேன்!" என்று சொல்லிவிட்டு நதிக் கரைக்குப் போனான். அங்கே அப்போது வேறு யாரும் இல்லை. பரிசல் காலியாக இருந்தது. சந்தைக்கு வந்தவர்கள் எல்லாரும் திரும்பிப் போய்விட்டார்கள்.

குமரி நங்கை தண்ணீர்த் துறைக்குக் கிட்டத் தட்ட வந்தபோது, பழனி பரிசலைக் கரையிலிருந்து அவிழ்த்து விட்டு அதில் ஏறிக் கொண்டான். குமரி தயங்கி நின்றாள். வேறு யாராவது வரு கிறார்களா வென்று பின்னல் திரும்பிப் பார்த்தாள். கண்ணுக்கெட்டின தூரத்துக்கு ஒருவரும் காணப் படவில்லை.

"நீ வரவில்லையா? நான் போகட்டுமா! இனி மேல் திரும்பி வரமாட்டேன்; இதுதான் கடைசித் தடவை" என்றான்.

குமரி இன்னமும் தயங்கினாள். மறுபடியும் சாலைப்பக்கம் திரும்பி யாராவது வருகிறார்களா என்று பார்த்தாள்.

"இதோ பார் சந்தைக்கு வந்தவர்கள் எல்லா ரும் போய்விட்டார்கள். நீ இப்போது உடனே

வராவிட்டால், இராத்திரி இங்கேயே தங்க வேண்டியதுதான் " என்றான்.

குமரி ஒரு வார்த்தைகூடப் பேசாமல் தலை கீழே குனிந்தபடி சென்று பரிசலில் ஏறினாள்.

பரிசல் போக ஆரம்பித்துக் கொஞ்ச தூரம் வரை வேகமாய்ப் போயிற்று. பிறகு, ரொம்பத் தாமதமாய்ப் போகத் தொடங்கியது.

குமரி நங்கை மேற்குத் திக்கைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சூரியன் மலைவாயில் இறங்கி விட்டது. அவ்விடம் சற்று முன் காணப்பட்ட ஜோதி நிறம் விரைவாக மங்கி வந்தது. இன்னும் கொஞ்ச நேரத்துக் கெல்லாம் இருட்டிப் போய் விடும். அதற்குள் படகு கரை சேராதா என்ன!

பழனிசாமி அவளுடைய முகத்தைப் பார்த்த வண்ணமிருந்தான். அந்த முகத்தில் அவன் என்னத்தைத்தான் கண்டானோ, தெரியாது. தினம் பார்க்கிற முகந்தானே ! அப்படிப் பார்ப்பதற்கு அதில் என்னதான் இருக்கும் ! சற்று நேரத்துக் கெல்லாம் இருட்டிப் போய்விடும், அப்புறம் அந்த முகத்தை நன்றாய்ப் பார்க்க முடியாது என்ற எண்ணத்தினால்தானோ என்னமோ, கண்ணை எடுக்காமல் பார்த்த வண்ணமிருந்தான்.

குமரி நங்கைக்கு உள்ளுணர்வினாலேயே இது தெரிந்திருக்க வேண்டும். அவள் சட்டெனத் திரும்பிப் பார்த்தாள். " ஏன் என்னை இப்படிப் பார்க்கிறாய் !" என்றாள்.

" நீ ஏன் என்னைப் பார்க்கிறாய் !"

" நான் எங்கே பார்த்தேன் !"

" நீ பார்க்கா விட்டால் நான் உன்னைப் பார்த்தது எப்படித் தெரிந்தது !"

குமரி சற்றுப் பேசாமல் இருந்தாள். பிறகு, " பரிசல் ஏன் இவ்வளவு தாமதமாய்ப் போகிறது !" என்று கேட்டாள்.

" காரணமாய்த்தான். இரண்டு வருஷமாய் நான் உன்னை ஒரு கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறேன். அதற்கு நீ பதில் சொல்லவில்லை. இன்றைக்குப் பதில் சொன்னால்தான் பரிசலை அக்கரைக்குக் கொண்டு போவேன் " என்றான்.

குமரி பேசவில்லை. பழனி மறுபடியும், " இதோ பார், குமரி ! உன் முகத்தை எதற்காகப் பார்க்கிறேன் என்று கேட்டாயல்லவா ! சொல்லுகிறேன். இன்று காலையில் நான் உன் முகத்தில் விழித்தேன். முதல் பரிசலில் நீ வந்தாய். அதனால் இன்றைக்கு எனக்கு நல்ல அதிர்ஷ்டம். ஏழு ரூபாய் வருவாயிற்று. இன்னொரு பரிசல் வாங்குவதற்குப் பணம் சேர்த்துக் கொண்டிருக்கிறேன். இன்றோடு ரூபாய் ஐம்பது சேர்ந்து விட்டது" என்று சொல்லி, பரிசலின் அடியில் கிடந்த பணப் பையை எடுத்து ஒரு குலுக்குக் குலுக்கி விட்டு மறுபடி கீழே வைத்தான்.

" நீ மட்டும் என்னைக் கல்யாணம் செய்து கொண்டால், தினமும் உன் முகத்தில் விழிக்கலாமே, தினமும் எனக்கு அதிர்ஷ்டம் வந்து கொண்டிருக்குமே என்று பார்க்கிறேன்" என்றான்.

" இப்படி ஏதாவது சொல்லுவாய் என்றுதான் உன் பரிசலில் தனியாய் ஏறப்படாது என்று பார்த்தேன்......"

" பின் ஏன் இவ்வளவு நேரங்கழித்து வந்தாய்!"

" சீக்கிரம் போனால், கத்திரிக்காய்ப் பணம் அவ்வளவையும் அப்பன் கள்ளுக் கடைக்குக் கொண்டு போய் விடும். 'அது' கடைக்குப் போன பிறகு நான் வீட்டுக்குப் போனால் தேவலை என்று மெதுவாய் வந்தேன். இருக்கட்டும் ; நீ இப்போது சீக்கிரம் பரிசலை விடப் போகிறாயா இல்லையா !"

## சந்தேகம் இல்லை!

அன்புள்ள சதாசிவம் அவர்களுக்கு,

செய்தி கேட்டு நாங்கள் கல்லாய்ச் சமைந்து விட்டோம். ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி அவர்களின் அகால மறைவை எதிர்பார்க்கவே இல்லை. மனித புத்தி சாலியும் பெரிய எழுத்தாளருமான ஒரு நண்பரை நாம் இழந்த துரதிர்ஷ்ட சாலிகளாகி விட்டோம். நம் தமிழகத்திற்கு இது ஒரு பெரிய நஷ்டம் என்பதை நான் சொல்லத் தேவையில்லை.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் பிரிவான சோதனையிலிருந்து தாங்கள் சமாளித்துத் தேறத் தங்களுக்கு ஆண்டவன் அருள் புரிவார் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. இந்த நம்பிக்கையுடன் இனிமேல் ஆக வேண்டியவைகளைத் தைரியமாகச் செய்ய வேண்டுகிறேன்.

திருவனந்தபுரம்.
5—12—54

செம்மங்குடி
சீனிவாசய்யர்

" முடியாது, அம்மா ! முடியாது !" என்று பழனி கையை விரித்தான். பரிசல் தள்ளும் கோலைக் கீழே வைத்து விட்டு, குமரியின் சமீபமாக வந்தான். " இன்றைக்கு நீ என்னிடம் அகப்பட்டுக் கொண்டாய், சுவாமி கிருபையினால். உன்னை நான் விடப் போவதில்லை. நீ என்னைக் கட்டிக் கொள்கிறதாக சத்தியம் செய்து கொடு. கொடுத்தால் பரிசலை விடுகிறேன். இல்லாவிட்டால் மாட்டேன் " என்றான்.

குமரி இதற்குப் பதில் சொல்ல வில்லை. அவள் முகத்தில் கோபம் ஜொலித்தது.

" கிட்ட வராதே ! ஜாக்கிரதை !" என்றாள்.

" கிட்ட வந்தால் என்ன பண்ணுவாய்! சத்தியம் செய்து கொடுப்பாயா ! மாட்டாயா !"

" மாட்டேன் !"

" பின்னே, அந்தக் கள்ளுக்கடைக்காரனையா கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய் !"

" சீ ! வாயை மூடு !"

" அதெல்லாம் முடியாது. உன்னை நான் விட மாட்டேன். நீ என்னைக் கட்டிக் கொள்ள மாட்டே னென்றால், நான் இப்போதே உன்னைக் கட்டிக் கொள்ளப் போகிறேன் " என்று சொல்லி, பழனி இன்னும் அருகில் நெருங்கினான்.

"என் பெயர் என்ன தெரியுமா ! பத்ர காளி !" என்றாள் குமரி.

" நீ பத்ரகாளியா யிருந்தால், நான் ரண பத்ர காளி " என்று பழனி சொல்லி, அவளுடைய தோளில் கையைப் போட்டான்.

உடனே, குமரி அந்தக் கையை வெடுக்கென்று ஒரு கடி கடித்தாள். " ஐயோ !" என்று அலறிக் கொண்டு அவன் கையை எடுத்ததும், 'தொப்' பென்று தண்ணீரில் குதித்தாள்.

அவள் குதித்த போது பரிசல் ஒரு பெரிய ஆட்டம் ஆடி ஒருபுறமாய்ப் புரண்டது. அப்போது குமரியின் கூடை, பழனியின் மேல்துணி, பணப் பை எல்லாம் ஆற்றிலே விழுந்தன.

பழனிக்கு ஒரு நிமிஷம் வரையில் இன்னது நடந்த தென்றே தெரிய வில்லை. பரிசல் புரண்ட

போது பரிசல் தள்ளும் கோல் ஆற்றில் போய் விடாதபடி இயற்கை உணர்ச்சியினால் சட்டென்று அதை எடுத்துக் கொண்டான். பிறகு, குமரி நங்கை அந்தப் பிரவாகத்தில் நீந்துவதற்கு முயன்று திண்டாடுவதைப் பார்த்ததுந்தான் அவனுக்குப் புத்தி தெளிந்தது. "ஐயோ! குடிமுழுகிப் போச்சே!" என்று அவன் உள்ளம் அலறிற்று.

அவசரமாய்ப் படகைச் சமாளித்துக் கொண்டு, பிரவாகத்துடன் குமரி போராடிக் கொண்டிருந்த இடத்துக்குப் போய், "குமரி, குமரி! நான் செய்தது தப்பிதந்தான். ஏதோ வெறியினால் அப்படிச் செய்து விட்டேன். மன்னித்துக் கொள். இனிமேல் உன்னைத் தொந்தரவே செய்வதில்லை: சத்தியமாய்ச் சொல்கிறேன். இப்போது இந்தக் கழியைப் பிடித்துக் கொண்டு மெதுவாய்ப் பரிசலில் ஏறிக் கொள்" என்று கதறினான்.

குமரி அவனை ஒரு பார்வை பார்த்தாள். பழனி, "என் தலை மேல் ஆணை! உன்னை இனிமேல் தொந்தரவு செய்ய மாட்டேன். ஏறிக் கொள்" என்றான். குமரி அவன் நீட்டிய கழியைப் பிடித்துக் கொண்டு, பரிசலின் அருகில் வந்தாள். ஒரு கையால் கழியைப் பிடித்துக் கொண்டு, இன்னொரு கையை உயர நீட்டினாள். பழனி அதைப் பிடிப்பதற்குத் தயங்கினான்.

"கையைக் கொடு!" என்றாள். அவன் கொடுத்ததும் ஒரு எம்பு எம்பி, பரிசலுக்குள் ஏறினாள். பரிசல் ஒரு ஆட்டம் ஆடி விட்டு மறுபடி சரியான நிலைமைக்கு வந்தது.

அவள் ஏறியவுடனே பழனிசாமி அவள் முகத்தைக் கூட ஏறிட்டுப் பாராமல் பரிசலின் இன்னொரு பக்கத்துக்குப் போனான். வெகு வேகமாகப் பரிசலைத் தள்ள ஆரம்பித்தான். குமரி இருந்த பக்கம் பார்க்கவே யில்லை.

ஆனால், குமரி இப்போது அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவனுடைய துணியில் இரத்தக் கறை மாதிரி இருந்ததைப் பார்த்ததும் அவளுக்குத் துணுக்கென்றது. அவன் அருகில் போய்ப் பார்த்தாள், கையில் அவள் கடித்த இடத்தில் இன்னமும் இரத்தம் பெருகிச் சொட்டிக் கொண்டிருந்தது.

குமரியின் உள்ளத்தில் சொல்ல முடியாத வேதனை உண்டாயிற்று. கொஞ்சம் துணி யிருந்தால் காயத்தைக் கட்டலாம். பழனியின் மேல் துண்டு கிடந்த இடத்தைப் பார்த்தாள். அந்தத் துண்டைக் காண வில்லை. அங்கிருந்த பணப் பையையும் காணவில்லை! குமரியின் நெஞ்சு மீண்டும் ஒரு முறை திடுக்கிட்டது. திடீரென்று தான் நதியில் குதித்த போது பரிசல் புரண்டதில், பணப் பையும் மேல் துண்டும் வெள்ளத்தில் விழுந்திருக்க வேண்டும்!

ஒரு நிமிஷம் திகைத்து நின்று விட்டு, குமரி தன்னுடைய சேலைத் தலைப்பில் ஒரு சாண் அகலம் கிழித்தாள். அதைத் தண்ணீரில் நனைத்து, பழனியின் கையில் கடிபட்ட இடத்தில் கட்டி விட்டாள். பிறகு, பரிசலின் இன்னொரு பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

அப்புறமுங்கூடப் பழனி அவள் பக்கம் திரும்பிப் பார்க்கவே யில்லை. கீழ்வானத்தின் அடியில் உதயமாகிக் கொண்டிருந்த பூரணசந்திரனைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு பெரிய 'கண்டத்'திலிருந்து தப்பிப் பிழைத்த பிறகு உள்ளத்தில் ஏற்படக்கூடிய சாந்தி அவன் மனத்தில் இப்போது ஏற்பட்டிருந்தது. கடவுளே! தப்பிதம் செய்து விட்டேன்! அதனுடைய பலன் இந்த மட்டோடு போயிற்றே! எல்லாம் உன் அருள்தான்!

கையில் குமரி பல்லால் கடித்த இடத்தில் விண் விண் என்று தெறித்துக் கொண்டிருந்தது. அதை அவன் இலட்சியம் செய்ய வில்லை. கோலுக்குப் பதிலாகத் துடுப்பை உபயோகித்து முழு பலத்துடனும் தள்ளினான். சிறிது நேரத்துக்கெல்லாம் பரிசல் கரையை அடைந்தது.

இருட்டுகிற சமயம். ஆற்றங்கரையோடு இரண்டு வாலிபர்கள் போய்க் கொண்டிருந்தார்கள். பழனியும் குமரியும் மட்டும் பரிசலில் வந்து கரை சேர்ந்ததைக் கண்டு, அவர்களில் ஒருவன் வாயில் விரலை வைத்துச் சீட்டி அடித்தான். இன்னொருவன் தெம்மாங்கு பாடத் தொடங்கினான்.

கரை சேர்ந்ததும், குமரி பரிசலிலிருந்து குதித்தாள். பழனியுடன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் அவசரமாய்க் கரையேறிச் சென்றாள்.

பழனி சற்று நேரம் பரிசலிலேயே இருந்தான். பிறகு அதைக் கரையின் வழக்கமான இடத்தில் கட்டிப் போட்டு விட்டு வீடு நோக்கி நடந்தான். நடக்கும் போதே அவனுக்குத் தலை சுற்றியது; அவனுடைய கால்கள் தள்ளாடின. தேகம் நடுங்கிற்று. ஆனால் வீட்டுக்குப் போய்ப் படுத்துக் கொண்ட பிறகுதான், தனக்குக் கடும் ஜுரம் அடிக்கிறது என்பது அவனுக்குத் தெரிய வந்தது.

## 3

நதிக் கரையில், காப்பி ஹோட்டலுக்குப் பக்கத்திலிருந்த இன்னொரு கூரை வீடுதான் பழனியின் வீடு. அதில் அவனும் அவன் தாயாரும் வசித்து வந்தனர். ஆனால் இச்சமயம் பழனியின் தாயார் வீட்டில் இல்லை. அவளுடைய மூத்த மகளின் பிரசவ காலத்தை முன்னிட்டு மகளைக் கட்டிக் கொடுத்திருந்த ஊருக்குப் போயிருந்தாள். பழனி காலையும் மத்தியானமும் காப்பி ஹோட்டலில் சாப்பிடுவான்; இராத்திரியில் சமையல் செய்து சாப்பிடுவான்.

இப்போது ஜுரமாய்ப் படுத்ததும், அவன் பாடு ரொம்ப சங்கடமாய்ப் போயிற்று. பக்கத்தில் வேறு வீடு கிடையாது. காப்பி ஹோட்டல் ஐயர் கொண்டு வந்து கொடுத்த காப்பித் தண்ணீரைக் குடித்து விட்டுக் கிடந்தான். ஐயரும் பகலில்தான் காப்பி ஹோட்டலில் இருப்பார். இருட்டியதும், ஹோட்டல் கதவை இழுத்துப் பூட்டிக் கொண்டு பக்கத்து ஊரில் இருந்த தம்முடைய வீட்டுக்குப் போய் விடுவார்.

சுரமாய்ப் படுத்து மூன்று நாள் ஆகி விட்டது. இந்த நாட்களில் ஆற்றில் பரிசல் போக வில்லை. ஆகையால் ஊரெல்லாம் ஓடக்காரத் தம்பிக்கு 'உடம்பு காயலா என்ற' சமாசாரம்பரவியிருந்தது.

பழனிசாமி முதல் நாளே அம்மாவுக்குக் கடுதாசி எழுதிப் போட்டு விட்டான். நாளை அல்லது நாளன்று அவள் வந்து விடுவாள் என்று எதிர்பார்த்தான். அதுவரை ஒரு நிமிஷம் ஒரு யுகமாகத்தான் கழித்தாக வேண்டும். மூன்று நாள் சுரத்தில் பழனி மிகவும் மெலிந்து போயிருந்தான். கை வீக்கம் ஒரு பக்கம் சங்கடம் அளித்தது. அன்று சாயங்காலம் எழுந்து விளக்கேற்றுவதற்குக் கூட அவனுக்குச் சக்தி யில்லை. "விளக்கு ஏற்றாமல் போனால்தான் என்ன!" என்று எண்ணிப் பேசாமல் படுத்திருந்தான்.

உள்ளே நன்றாய் இருண்டு விட்டது. திறந்திருந்த வாசற்படி வழியாக மட்டும் சிறிது மங்கலான வெளிச்சம் தெரிந்தது.

பழனி அந்த வெளிச்சத்தைப் பார்த்துக் கொண்டிருந்தவன், திடீரென்று தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். ஏனெனில்





# பரம்பரை குணமேன்மை



இந்த இணையில்லா கூந்தல் சிங்காரம் அஜந்தா சிற்பம் செய்த நாட்களில் செய்து வந்ததைப் போலவே, இன்றும் திறமையுடன் செய்து கொள்ள முடிகிறது. இருபதாண்டுகளாய் அதன் சிறந்த குணங்களால் டாம்கோ பரிமள கூந்தல் தேங்காய் எண்ணெ இந்தியக் குடும்பங்களில் ஒரு பரம்பரையை வளர்த்திருக்கிறது.




## டாம்கோ

## பரிமள கூந்தல் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்

இந்திய மூலதனத்தைக் கொண்டு, இந்திய நிர்வாகத்தில், இந்தியாவிலேயே தயாரிக்கப்படுவது

அந்த வாசற்படியில் ஒரு பெண்ணுருவம் தெரிந்தது! அந்த வேளையில் யார் அங்கே வரக்கூடும்?

"யார் அது!" என்று கேட்டான்.

"நான்தான்" என்று குமரி கங்கையின் குரலில் பதில் வந்தது.

பழனி சற்று நேரம் ஸ்தம்பித்துப் போய் விட்டான்.

"விளக்கு இல்லையா!" என்று குமரி கேட்டாள்.

"மாடத்தில் இருக்கிறது. இதோ ஏற்றுகிறேன்" என்றான் பழனி.

"வேண்டாம். நீ படுத்திரு. நான் ஏற்றுகிறேன்" என்று சொல்லி, குமரி சுவரில் மாடம் இருக்கும் இடத்தைத் தடவிக் கண்டு பிடித்து விளக்கு ஏற்றினாள்.

"உனக்குக் காயலா என்று சொன்னார்கள். பார்த்துப் போகலாமென்று வந்தேன். என்னால் தான் உனக்கு இந்தக் கஷ்டம் வந்தது. என்னால் எல்லாருக்கும் கஷ்டந்தான்......"

"ரொம்ப நன்றாயிருக்கிறது. நீ என்ன பண்ணுவாய்? நான் பண்ணினதுதான் அநியாயம். அதை நினைக்க எனக்கு வேதனை பொறுக்கவில்லை. என்னமோ அப்படிப் புத்தி கெட்டுப் போய் விட்டது. நீ மன்னித்துக்கொள்ள வேண்டும்."

"நான் மன்னிக்கவாவது! என்னால்தான் உனக்கு எவ்வளவோ கஷ்டம். பரிசலில் வைத்திருந்த பணம் ஆற்றோடு போய்விட்டதல்லவா! அதற்குப் பதில் பணம் கொண்டுவந்திருக்கிறேன்" என்று சொல்லி, ஒரு துணிப் பையை எடுத்து, அதற்குள்ளிருந்த பழைய பத்து ரூபாய் நோட்டு ஐந்து நோட்டுகளை எண்ணிப் பார்த்துவிட்டு, பையைப் பழனிசாமியின் பக்கத்தில் வைத்தாள்.

பழனி ரொம்பக் கோபமாய்ச் சொன்னான்;—"குமரி, பேசாமல் இதை எடுத்துக்கொண்டு போ. அப்படி இல்லையானால், நான் நாளைக்கே உன் அப்பனிடம் எல்லாவற்றையும் சொல்லி விடுவேன்" என்றான்.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்! நீ பரிசல் வாங்குவதற்குச் சேர்த்துவைத்த பணம் போய்விட்டதே! அதற்கு என்ன செய்வாய்!"

"போனால் போகட்டும்; இந்தப் பரிசலும் போனாலும் போகட்டும். நான் செய்த தப்புக்கு இதெல்லாம் போதாது.—குமரி, நான் இந்த ஊரை விட்டே போய்விடத் தீர்மானித்து விட்டேன். அப்படிப் போனால்தான் உன்னை என்னால் மறக்க முடியும்" என்றான்.

அப்போது குமரி கங்கையின் கண்களிலிருந்து பொல பொலவென்று ஜலம் உதிர்ந்தது.

பழனி அதைப் பார்த்து விட்டு, "இது என்ன குமரி, நான் ஊரை விட்டுப் போவதில் உனக்கு வருத்தமா!" என்றான்.

"நீ ஆண் பிள்ளை, ஊரை விட்டுப் போவாய்; என்னை மறந்தும் போய்விடுவாய். ஆனால் என்னால் உன்னை மறக்க முடியாது" என்று விம்மிக் கொண்டே கூறினாள்.

"நிஜமாகவா, குமரி! நான் என்ன கனாக் காண்கிறேனா!" என்றான் பழனி.

பிறகு, "அப்படி யென்றால், என்மேல் இத்தனை நாளும் ஏன் அவ்வளவு கோபமாயிருந்தாய்! என்னைக் கட்டிக் கொள்ள ஏன் மறுத்தாய்! கள்ளுக்கடை வீரய்யக் கவுண்டனைக் கல்யாணம் கட்டிக்கொள்ளப் போகிறாய் என்கிறார்களே, அது என்ன சமாசாரம்!" என்று கேட்டான்.

"அது பொய். நான் கள்ளுக் கடைக்காரனைக் கட்டிக்கப் போகிறதில்லை. எங்க அப்பன் அப்படி வற்புறுத்தியது நிஜந்தான். நான் முடியவே முடியாது என்று சொல்லி விட்டேன். அப்பன் கள்ளுக் குடிக்கிறவரையில் நான் கல்யாணமே கட்டிக்கிறதில்லை யென்று ஆணை வைத்திருக்கிறேன்......"

"என்ன? என்ன!" என்று பழனிசாமி வியப்புடன் கேட்டான்.

"சத்தியமாய்ச் சொல்றேன்; அதுதான் நிஜம்."

"அப்படின்னால், உங்க அப்பன் குடிக்கிறதை விட்டுட்டா, அப்புறம்!......"

"நடக்காததைப் பற்றி இப்போது யோசித்து என்ன பிரயோஜனம்!......" என்றாள் குமரி. கண்களிலிருந்து மறுபடி பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

அப்போது தண்ணீர்த் துறையில் யாரோ பேசும் குரல் கேட்டது.

குமரி, திடுக்கிட்டு, "நான் போகிறேன். என்னால் உனக்கு எவ்வளவோ கஷ்டம். எல்லாவற்றையும் மன்னிச்சுக் கொள்" என்று கூறிவிட்டு, போகத் தொடங்கினாள்.

பழனி, "குமரி, குமரி, இந்தப் பணத்தை நீ எடுத்துக்கொண்டு போக வேண்டும். என்னிடம் பரிசல் வாங்கப் பணம் இருக்கிறது. நீ எடுத்துக் கொண்டு போகா விட்டால், உங்க அப்பனிடம் கொடுத்து விடுவேன்" என்றான்.

"ஐயோ! அவ்வளவும் கள்ளுக் கடைக்குப் போய் விடுமே!" என்று சொல்லிக் கொண்டு குமரி அவன் அருகில் வந்தாள். பழனி பணப் பையை நீட்டினான். குமரி அதை எடுத்துக் கொண்டாள். அவளுக்கு அப்போது என்ன தோன்றிற்றோ என்னவோ, சட்டென்று அவனுடைய உள்ளங்கையைத் தூக்கித் தன் முகத்தில் ஒற்றிக் கொண்டாள். பிறகு வெளியில் சென்றாள்.

## 4

குமரி போனதும் கொஞ்ச நேரம் பழனி பரவச நிலையிலிருந்தான். அவனுடைய உடம்பிலும் உள்ளத்திலும் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டிருந்தது. ஆனால் மறுபடியும் வாசலில் காலடிச் சத்தம் கேட்கவே, பழனி பரவச நிலையிலிருந்து கீழிறங்கினான். "யாரா யிருக்கலாம்!" என்று யோசிப்பதற்குள்ளே, காளிக் கவுண்டன் உள்ளே வருவதைக் கண்டதும், அவனுக்குச் சொரேல் என்றது. ஒரு கணத்தில் என்ன வெல்லாமோ தோன்றி விட்டது. குமரி அங்கு வந்துவிட்டுப் போனதைப் பார்த்துக் கொண்டுதான் வந்திருக்கிறான் என்றும், தன்னைக் கொன்றாலும் கொன்று போடுவான் என்றும் எண்ணினான். தன் கதி எப்படியானாலும், குமரிக்கு என்ன நேருமோ என்று எண்ணியபோது அவனுடைய கள்ளமற்ற நெஞ்சு பதை பதைத்தது.

"தம்பி! இரண்டு நாளாய் உனக்குக் காயலாவாமே! உன் ஆயா கூட இல்லையாமே! பார்த்து விட்டுப் போக வந்தேன்" என்று காளிக் கவுண்டன் பரிவான குரலில் சொன்னபோது, பழனிக்கு எவ்வளவு ஆச்சரியமா யிருந்திருக்கும்! முதலில், அவனால் இதை நம்பவே முடியவில்லை. பரிகாசம் செய்கிறான், சீக்கிரம் தன் உண்மை சொரூபத்தைக் காட்டுவான் என்று பழனி நினைத்தான்.

அப்படி யொன்றும் நேரவில்லை, காளிக் கவுண்டன் கடைசி வரையில் ரொம்பப் பிரியமாகப் பேசினான், கிட்ட வந்து உட்கார்ந்து உடம்பைத் தொட்டுப் பார்த்தான். வீட்டிலிருந்து கஞ்சி காய்ச்சிக் கொண்டு வரட்டுமா என்று கேட்டான். "ஆயா நாளைக்குக் கட்டாயம் வந்து விடுவாளா!" என்று விசாரித்தான். உடம்பை

ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளும்படி திரும்பத் திரும்பப் புத்திமதி கூறினான்.

"தம்பி! நான் சொல்றதைக் கேளு. நீ இப்படி இன்னமும் கல்யாணம் கட்டாமலிருக்கிறது நன்றாயில்லே. ஒரு பெண்ணைக் கட்டிப் போட்டிருந்தால், இப்படித் தனியாய்த் திண்டாட வேணுமல்லவா! உன் ஆயாதான் இன்னும் எத்தனை நாளைக்கு இருப்பாள்! அவளுக்கும் வயசாச்சா, இல்லையா!" என்றான்.

பிறகு, "எது எது எந்த எந்தக் காலத்தில் நடக்கணுமோ, அது அது அந்தக் காலத்தில் நடந்துட்டால்தான் நல்லது. அதுதான் நான்கூட நம்ம குமரியை இந்த ஐப்பசியில் கட்டிக் கொடுத்துடணும்னு பார்க்கிறேன். அவளும்தான் எத்தனை நாளைக்கு அப்பனுக்கும் சீக்காளி ஆயாவுக்கும் உழைச்சுப் போட்டுட்டே இருக்கிறது!" என்று சொல்லி நிறுத்தினான்.

மறுபடியும் அவன் கோபம் வந்தவனைப்போல், "இந்த அதிசயத்தைக் கேளு, தம்பி! நம்ம கள்ளுக்கடை வீரய்யக் கவுண்டன் இருக்கான் அல்லவா, அவனுக்கு இப்போ மூணாந்தரம் பெண் கட்டிக்க வேணும்னு ஆசை பிறந்திருக்கு. அவன் பாரு. நாக்கு மேலே பல்லைப் போட்டு, என்னிடம் பெண் கேட்டான். நான் கொடு கொடு என்று கொடுத்துட்டேன். 'அடே குடி கெடுக்கிற கள்ளுக் கடைக் கவுண்டா! உனக்கு இனிமேல் கட்டை யோடேதான் கல்யாணம்!' என்று சொல்லி விட்டேன்" என்றான்.

கடைசியில் "சரி, தம்பி, நாளைக்கு வந்து பார்க்கிறேன். உடம்பை நல்லாப் பார்த்துக்கோ!" என்று சொல்லி விட்டுப் போனான்.

அவன் பேசப் பேசப் பழனிக்கு ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியமாய் இருந்தது. பேசும்போதெல்லாம் கவுண்டனிடமிருந்து கள்ளு நாற்றம் குப்குப் என்று வந்துகொண்டிருந்த படியால், அவன் குடி வெறியில்தான் அப்படிப் பேசி யிருக்க வேண்டுமென்று பழனிக்குத் தோன்றிற்று. மதுபானத்தின்' எத்தனையோ சேஷ்டைகளில் இப்படித் திடீரென்று உறவு கொண்டாடிக் குலாவுவதும் ஒன்றா யிருக்கலா மல்லவா!

மறுநாள் பழனியின் தாயார் வந்து விட்டாள். பிறகு இரண்டு மூன்று தினங்களில் பழனிக்கும் உடம்பு சரியாய்ப் போய் விட்டது. கை வீக்கமும் வடிந்தது. அடுத்த வெள்ளிக்கிழமை சந்தைக்கு அவன் பரிசல் தள்ளத் தொடங்கி விட்டான்.

ஆனால் அவன் காளிக்கவுண்டனைப் பற்றி எண்ணியது தவறாய்ப் போய் விட்டது. அவன் பழனியிடம் கொண்ட அபிமானம் குடி வெறியில் ஏற்பட்டதல்ல வென்று தெரிந்தது. அடிக்கடி அவன் பழனிசாமியின் வீட்டுக்கு வந்து பேசத் தொடங்கினான். பழனியின் தாயாரிடம் பழனியின் கல்யாணத்தைப் பற்றிக்கூடப் பேசலானான்.

"அவன் அப்பனில்லாத பிள்ளை; ஊரிலே உங்களைப் போல நாலு பெரிய மனுசங்க பார்த்துக் கல்யாணம் பண்ணி வைச்சால்தான் உண்டு" என்றாள் பழனியின் தாயார்.

"அதற்கென்ன, நாணுச்சு! கல்யாணம் நான் பண்ணி வைக்கிறேன்" என்று உற்சாகமாகச் சொன்னான் காளிக் கவுண்டன்.

காளிக் கவுண்டனிடம் ஏற்பட்டிருந்த இந்த அதிசயமான மாறுதலுக்குக் காரணம் பழனிக்குப் புலப்பட வில்லை.

இதில் ஏதாவது "சூது" இருக்குமோ என்று சந்தேகித்தான். அதனால், அவன் மனத்தில் அமைதி குலைந்து சாந்தி இல்லாமல் போயிற்று.

ஒரு நாள் காலையில் காப்பி ஹோட்டலில் காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது அவன் காதில் விழுந்த சில வார்த்தைகள் பளிச்சென்று அவனுக்கு உண்மையை உணர்த்தின.

"அடுத்த வெள்ளியிலிருந்து பரிசல்காரத் தம்பிக்குக் கொண்டாட்டந்தான். ஒரு பரிசல் போதாது; மூன்று பரிசல்கள் விடலாம்" என்றான் ஒருவன்.

"அது என்ன அப்படி!" என்று இன்னொருவன் கேட்டான்.

"ஆமாம்; அக்டோபர் முதல் தேதிதான் இங்கே கள்ளுக்கடை மூடப் போகிறார்களே! அப்புறம் இந்த ஊர்க் குடிகாரன்களெல்லாம் அக்கரைக்குப் போய்த்தானே குடிக்க வேணும்!"

"அப்படி யாரடா இரண்டும் இரண்டும் நாலணா பரிசல் காசு கொடுத்துக் கொண்டு குடிக்கப் போறவனுக!"

"எல்லாம் போவானுக, பாரு! போகாதே இருப்பானுகளா! நாலணா கொடுத்தாத்தானா! பரிசல்காரத் தம்பிக்கிட்டே சிநேகம் பண்ணிக் கிட்டா சும்மா கொண்டு விட்டுடறாரு!"

இந்தப் பேச்சு பழனியின் காதில் விழுந்ததும் "ஓஹோ!" என்ற சப்தம் அவன் வாயிலிருந்து அவனை அறியாமலே வந்தது. பிறகு அவர்கள் பேசியது ஒன்றும் அவன் காதில் படவில்லை. அப்படிப் பெரிய யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

## 5

செப்டம்பர் 30உ வேலம்பாளையம் ஒரே அல்லோல கல்லோலமா யிருந்தது. அன்றுதான் கள்ளுக்கடை மூடும் நாள்; அன்றுதான் குடிகாரர்களுக்குக் கடைசி நாள்.

பெருங் குடிகாரர்களில் சிலர் அன்றெல்லாம் தென்னை மரத்தையும் பனைமரத்தையும் கட்டிக் கொண்டு காலங் கழித்தார்கள். சிலர் நடு வீதியில் கள்ளுப் பானையை வைத்துச் சுற்றிச் சுற்றி வந்து வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு அழுதார்கள்! உண்மையில் அவர்களுடைய நிலைமை பார்க்கப் பரிதாபகரமாய்த்தான் இருந்தது. ஆனால், காளிக்கவுண்டன் மட்டும் அதிகம் கவலைப்பட்டதாகத் தெரிய வில்லை. இது அநேகம் பேருக்கு ஆச்சரியம் அளித்தது.

காளி அன்று சாயங்காலம் பழனிசாமியிடம் போய், "தம்பி! நாளைக்குப் பொழுது சாய எனக்கு அக்கரையில் கொஞ்சம் அவசரமான வேலை யிருக்கிறது. என்னைப் பரிசலில் இட்டுப் போகவேணும்" என்றான்.

"அதற்கென்ன, மாமா! என்னுடைய பரிசல் இருந்தால் அதில் முதல் இடம் உங்களுக்குத் தான்" என்றான் பழனி.

அக்டோபர் முதல் தேதி பிறந்தது. ஊரிலுள்ள ஸ்திரீ, புருஷர், குழந்தைகள் எல்லாரும் அன்று எழுந்திருக்கும் போது ஒரே எண்ணத்துடன்தான் எழுந்தார்கள், "இன்று முதல் கள்ளுச் சாராயக் கடை கிடையாது" என்று. அநேகர் எழுந்ததும் முதல் காரியமாகக் கள்ளுக் கடையைப் பார்த்தார்கள். அங்கே கள்ளுப் பானைகள் இல்லாததைக் கண்டு அவர்கள் "இப்பேர்ப்பட்ட அற்புதமும் நிஜமாகவே நடந்து விட்டதா!" என்று பிரமித்துப் போய் நின்றார்கள்.

இந்தப் பரபரப்புக் கிடையில், இன்னொரு செய்தி பரவிற்று: "பரிசல் துறையில் பரிசலைக் காண வில்லையாம்!" என்று. இது காளிக் கவுண்டன் காதில் விழுந்ததும், அவன் விரைந்து நதிக்கரைக்குப் போனான். அங்கே, பழனிசாமி

முகத்தைக் கையினால் மூடிக் கொண்டு அழுது கொண்டிருப்பதையும், நாலைந்து பேர் அவனைச் சுற்றி நின்று தேறுதல்சொல்லிக் கொண்டிருப்பதையும் கண்டான். சமீபத்தில் போய் விசாரித்ததில், நேற்று ராத்திரி வழக்கம் போல் பழனி பரிசலைக் கரையிலேற்றி கட்டிவிட்டுப் போனதாகவும், காலையில் பார்த்தால் காணோம் என்றும் சொன்னார்கள்.

காளிக் கவுண்டன், பழனியிடம் போய், "தம்பி! இதற்காகவா அழுவார்கள்! சீ, எழுந்திரு. ஆற்றோரமாய்ப் போய்த் தேடிப் பார்க்கலாம். அகப்பட்டால் போச்சு; அகப்படாமற் போனால், இன்னான்தான் போக்கிரித்தனம் பண்ணியிருக்க வேணுமென்று எனக்குத் தெரியும். கள்ளுக்கடைக் கவுண்டன்தான் செய்திருக்க வேணும், உனக்கு வரும்படி வரக்கூடாதென்று. அவனைக் கண்ட துண்டம் பண்ணிப் போட்டு விடுகிறேன். வா, போய்ப் பார்க்கலாம்" என்றான்.

அன்றெல்லாம் பரிசலைத் தேடிக் கொண்டிருந்தார்கள்; பரிசல் அகப்படவில்லை.

சாயங்காலம், நேற்றுக் கள்ளுக்கடை இருந்த இடத்தில் இன்று பஜனை நடந்தது. காளிக் கவுண்டனும் போயிருந்தான். பஜனையில் பாதி கவனமும், பரிசல் மட்டும் கெட்டுப் போகாமலிருந்தால் அக்கரைக் கள்ளுக்கடைக்குப் போயிருக்கலாமே என்பதில் பாதி கவனமுமாயிருந்தான்.

* * *

கள்ளுக்கடை மூடி ஏழெட்டு தினங்கள் ஆயின. அந்த ஏழெட்டு நாளில் ஊரே புதிதாய் மாறியிருந்தது. அந்தக் கிராமத்தின் ஆண் மக்களில் கிட்டத்தட்டப் பாதிப் பேருக்கு மேல் குடித்தவர்கள். ஆகவே, கள்ளுக்கடை மூடிய சில நாளைக்கெல்லாம் ஒவ்வொரு வீட்டிலும் காசு மிஞ்சியிருந்தது. கடை சாமான்கள் முன்னைவிடத் தாராளமாய் வாங்க முடிந்தது. மனுஷ்யர்களுடைய புத்தியும் அதற்குள் நன்றாய் மாறி ஸ்திரப்பட்டு விட்டது. முன்னெல்லாம் குடித்துக் கெட்டலைந்ததை எண்ணிய போது அவர்களுக்கே வெட்கமாயிருந்தது. இப்படி மாறியவர்களில் ஒருவன் காளிக் கவுண்டன். அவன் ஒரு நாள் பழனியிடம், "தம்பி! பரிசலை எந்தப் பயலோதான் ஆற்றில் இழுத்து விட்டிருக்கிறான். உனக்கு அதனால் எவ்வளவோ நஷ்டம். அவனைக் கண்டால் நான் என்ன வேணாலும் செய்து விடுவேன். ஆனாலும் பரிசல் கெட்டுப் போனதும், நல்லதாய்ப் போயிற்று......"

"அது என்ன மாமா, அப்படிச் சொல்றீங்க! பரிசல் கெட்டுப் போனதில் நல்லது என்ன!" என்று பழனி கேட்டான்.

காளி சிரித்துக் கொண்டு பழனியின் முதுகில் தட்டிக் கொடுத்தான். "தம்பி, நீ குழந்தைப் பிள்ளை. உனக்கு ஒன்றும் தெரியாது. நான் என்னத்துக்காகப் பரிசலில் அக்கரைக்கு வரேன்னு சொன்னேன், தெரியுமா! இந்த ஊரிலே கள்ளுக்கடை மூடிவிட்டதினாலே, அக்கரைக் கடைக்குப் போகலா மின்னுதான்......"

"அக்கரையிலே மட்டும் ஏன் கடையை வச்சிருக்காங்க!" என்று பழனி கேட்டான்.

"அது திருச்சினாப்பள்ளி ஜில்லா. அந்த ஜில்லாவிலே இன்னும் கடை மூடலை. அடுத்த வருஷம் தான் மூடப் போறாங்களாம்."

"ஏன், மாமா! அடுத்த வருஷம் அங்கேயும் கடை மூடிவிட்டால், அப்புறம் எங்கே போறது!"

"நல்ல கேள்வி கேக்கறே, அப்புறம் எங்கே போறது! பேசாமல் இருக்கவேண்டியதுதான்."

"அப்படி இப்பவே இருந்துட்டா என்ன, மாமா!"

"அதற்குத்தான் குடிகாரன் புத்தி பிடரியிலே என்கிறது. எப்படியோ, பரிசல் கெட்டுப் போனாலும் போச்சு, எனக்கும் கள்ளுக்கடை மறந்து போச்சு" என்றான் காளி.

பிறகு, எதையோ நினைத்துக் கொண்டவன் போல், "ஒரு சமாசாரம் கேளு, தம்பி...குமரி இருக்காள் அல்ல, அவள் நான் குடிக்கிறவரையில் கல்யாணம் கட்டிக்கிறதில்லை என்று ஆணை வைச்சிருந்தாள். சுவாமி புண்ணியத்திலே குடிதான் இப்போ போச்சே; இந்த ஐப்பசி பிறந்ததும் முகூர்த்தம் வச்சுடறேன். பேசாம அவளை நீ கட்டிக்கோ. ரொம்ப கெட்டிக்காரி; அந்த மாதிரி பெண் உனக்கு அகப்பட மாட்டாள்" என்றான்.

* *

ஐப்பசி மாதம் முதல் வாரத்தில் பழனிசாமிக்கும் குமரி நங்கைக்கும் கல்யாணம் நடந்தது. ரொம்பக் கொண்டாட்டமாய் நடந்தது.

கல்யாணம் ஆனதும் பழனிசாமி வடக்கே போய்ப் புதுப் பரிசல் வாங்கிக்கொண்டு வந்தான். வழக்கம்போல் பரிசல் துறையில் பரிசல் ஓடத் தொடங்கியது. ஆனால் சாயங்கால வேளைகளில் மட்டும் பழனி குறிப்பிட்ட சில பேரைப் பரிசலில் ஏற்றிக் கொண்டு போக மறுத்து விடுவான்.

பழைய பரிசல் என்ன ஆயிற்று என்பது தெரியவே யில்லை. அதை எப்படிக் கண்டுபிடிக்க முடியும்! பரிசலின் சொந்தக்காரனே நடுநிசியில் எழுந்து வந்து, பரிசலைத் துண்டு துண்டாக வெட்டி ஆற்றில் எறிந்துவிட்டிருக்கும் போது அந்த இரகசியத்தை அவனாகச் சொன்னாலன்றிப் பிறரால் எப்படிக் கண்டு பிடிக்க முடியும்!

## வாசகர்கள் சார்பில்

கல்கி அவர்களின் "கள்வனின் காதலி"யில் நான் பைத்தியமானேன். "பொன்னியின் செல்வன்" மூலம் எங்கள் குடும்பத்தார்க்கு அறிமுகமானார் கல்கி. அவர் கற்பனையில், அவர் காட்டும் காலத்திற்கு இழுத்துச் செல்லும் மாய சக்தி அவருக்கு இருந்தது. பாத்திரங்களும் உண்மையில் உயிர் வாழ்ந்தவர்களே என்ற பிரமையை உண்டுபண்ணும் அவருடைய சிருஷ்டிகள். அதனால்தான் நமக்கு "இந்துமதியின் கதி என்ன?" "காசிலிங்கம் என்ன வானார்?" "அமரதாரா தொடர்ந்து சுடர் விட்டுப் பிரகாசிக்குமா?" என்று கேட்கத் தோன்றுகிறது. கல்கி அவர்கள் அமரதாராவின் குறிப்புகளை எழுதி வைத்திருந்தால் அதற்கு உருவம் கொடுத்து நல்லதொரு ஆசிரியரால் தொடர்ந்து வெளியிடும்படி ஆயிரக்கணக்கான வாசகர்கள் சார்பில் கேட்டுக் கொள்கிறேன். இதுவே அவருடைய ஆன்மாவிற்கும் சாந்தியை அளிக்கும் என்பது என் நம்பிக்கை.

மதுரை
7—12—54

மல்லி. சு. சபாபதி

# சந்தர்ப்பம் எதுவாயினும் கோடக் ஸ்னாப்ஷாட்டுக்கு அரிய வாய்ப்ப கிடைக்கும்

எவ்வளவு க்ஷணம் வருடங்கள் பறந்தோடுகின்றன! இன்னும் சில ஆண்டுகளில், நீங்கள் பார்த்திருக்கவே, உங்கள் சின்னப்பையன் வளர்ந்து பெரியவனாகிவிடுவான். இருந்தாலும், என்ன ஆச்சரியம், 'கோடக்' ஸ்னாப்ஷாட்டுகள்மட்டும் எடுத்துவைத்திருந்தால் அவை அவனது குழந்தைப் பருவத்தின் அருமையான க்ஷணங்கள் ஒவ்வொன்றையும் உங்களுக்கு நினைப்பூட்டும் ....தவிர, 'கோடக்' பிலிம்களைக் கொண்டு சிறந்த படங்கள் எடுப்பதும் மிகச்சுலபமே.






வெரிக்ரோம்: வெளிக்காட்சிகளை, சகஜமான வெளிச்சத்தில் எந்த காமிராவைக் கொண்டும் எடுப்பதற்கு உகந்த பிலிம் இது.




ப்ளஸ் – X : விளக்கமான பெரிய என்லார்ஜ்மெண்டுகள் தரவல்ல தெளிவான படங்கள் எடுப்பதற்கு மிகச்சிறந்தது.




சூப்பர் – X X : துரிதமான செயல் காட்சிகளுக்கும், மங்கிய வெளிச்சத்தில் அல்லது வீட்டினுள் படம்பிடிக்கவும் இணையற்றது.

## ஒவ்வொரு வகைப் படத்திற்கும் உகந்த ஒரு 'கோடக்' பிலிம் கிடைக்கும்

கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் – கல்கத்தா – டில்லி
மதராஸ்

K. 9030




# பெர்டுஸின் "டெஷ்னர்"

சென்ற 60 வருஷ காலத்தில் கக்குவான் இருமல் உட்பட சகல வித மான இருமல்களினின்று அவதிப்படு பவர்களுக்கு பெர்டுஸின் துரித நிவா' ரணம் அளித்திருக்கிறது. ஆகவே நீங்களும் பெர்டுஸின் வாங்குங்கள்.

infa

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான், லிஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய் - 1 இவர்க ளால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILT.7.TAM

# சித்திரத்தில் காண்போம்!






● கல்கி ஆசிரியர் ஈடுபட்டு உழைக்காத தொண்டே தமிழ்நாட்டில் இல்லை. அவர் ஈடுபட்டு உழைத்த பொது நலப் பணிகளில் சிலவற்றை இப் பக்கங்களில் காணலாம். 1. அன்னதான சிவன்சங்கத்தின் தலைமைப் பதவி வகித்து அரும்பணியாற்றினார். அந்தச் சங்கத்தின் பெயரில் அன்னதான சிவன் மாணவர் இல்லம் ஒன்றை அம்மா சத்திரத்தில் சென்ற ஆண்டு ஆரம்பித்து வைத்தார். 2. திரு வி. க. அவர்களை அன்புடன் ஐந்தாவது தமிழ்விழாவுக்கு அழைத்து வருகிறார் ஆசிரியர் கல்கி. 3. திரு வி. க. மணிமண்டபத்துக்குத் தலைவர் ராஜாஜி அவர்களைக்கொண்டு அஸ்திவாரக் கல் இடச்செய்தார்.



1. கிண்டி ராஜ பவனத் தோட்டத்தில் வளர்ந்து வரும் காந்தி மகான் ஞாபகார்த்த மணி மண்டபத்துக்குக் கல்கி ஆசிரியர், கனம் ஸ்ரீ பிரகாசா அவர்களைக் கொண்டு மங்களத் தொடக்கம் செய்து வைத்தார். 2. ஆண்டு தோறும் பாரதி விழாவைச் சிறப்பாக நடத்தி வர ஏற்பாடு செய்த ஆசிரியர் கல்கி அவர்கள் 1952-ம் ஆண்டு சென்னைக் கபாலீஸ்வரர் கோயிலில் நடந்த பாரதி விழாவில் பாரதி படத்தைத் திறந்து வைத்தார். 3. தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள குறிஞ்சிப்பாடி கிராமத்தார் கல்கி அவர்களிடம் காந்தி ஞாபகார்த்த பிரார்த்தனை மண்டபநிதிக்குப் பண முடிப்பு வழங்குகிறார்கள்.







● ○ ● ○ ● ○ ●

1. இந்த ஆண்டு ஆரம்பத்தில் கோயமுத்தூர் பஞ்சாலைச் சங்கத்தில் ஸ்ரீ என். ஜி. ஆர். ஞாபகார்த்தக் கட்டடத்தைத் திறந்து வைத்தார். 2. தமிழ் நாட்டில் ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண் பூமிதான யாத்திரை செய்த போது கல்கி ஆசிரியர் தமது இல்லத்துக்கு ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணன் தம்பதிகளை அழைத்து உபசரித்தார். 3. 1953-ஆண்டுக் கடைசியில் தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்திருந்த ஸ்ரீ நரேந்திர தேவுக்குக் கல்கி ஆசிரியர் தேனீர் விருந்தளித்தார்.

● ○ ● ○ ● ○ ●

3

1. நாமக்கல் கவிஞர் சென்னை ராஜ்ய ஆஸ்தான கவியாக நியமிக்கப் பட்டபொழுது தமிழ் மக்கள் சார்பில் ஆசிரியர் கல்கி அவருக்குப் பொன்னுடை போர்த்திப் பாராட்டுக் கூட்டம் நடத்தினர். 2. இந்தியா சுதந்திரம் பெற்ற புண்ணிய தினத்தன்று வங்க ராஜ்ய கவர்னர் மாளிகையில் ரஸிகமணியும் கல்கி ஆசிரியரும். 3. கல்கி ஆசிரியர், ரஸிகமணி அவர்களுடன் ரவீந்திரரின் சாந்திநிகேதனத்துக்குச் சென்று அங்கு தமிழ்ப் புத்தகாலயத்தை ஆரம்பித்து வைத்தார்.



1



2

3




# காளையும் கன்னியும்

சுகி

ஆடாதோடை வேலிக்கு அப்பால் காலடியோசையைக் கேட்டதைச் செவிமடுத்த பில்லைக் காளை, செவியை உயர்த்திப் பார்த்தது; வேலிக்குள் நுழைய முயற்சித்த இரு இளங்காளைகளைச் செல்லம் பார்த்தாள். கூச்சமும் நாணமும் அவள் முகத்தில் புன்முறுவலைத் திரையிட்டன.

வேலனும் அவன் தோழன் ராமனும், தோட்டத்துள் வந்தனர். இருவர் கண்களிலும் இது வரை அனுபவித்திராத இன்ப உணர்ச்சி மிதந்தது. வெறித்துப் பார்த்த காளையை விடக் கொடி போலத் துவண்ட செல்லம் தலையைக் குனிந்து கொண்டாள். தன்னருகே நிற்பவளின் உத்தரவை எதிர்பார்த்து நின்றது காளை 'முருகு'.

"என்னடா மாடு முறைக்குது!"

"இளங்காளைதான், ஆனாலும் நம்ம கிட்ட வாலையாட்ட முடியாது!"

இருவர் பேச்சையும் கேட்ட செல்லம் தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

வேலனின் கண், பெண்மான் அருகே நிற்கும் ரிஷபத்தின்மீதும், மானின் மேனிச் சுடர்மீதும் நோட்டம் விடுத்தது. "ஏம்மா இந்தக் கிணத்திலே தண்ணீர் குடிக்கலாமா!" என்று குறும்பாகக் கேட்டான்.

"இது எங்கள் இறவைக் கிணறு..." என்று கோபத்துடன் கூறி இரண்டடி முன்னே நகர்ந்தாள் செல்லம். அவள் அருகே நின்ற மாடும் இரண்டடி எடுத்து வைத்தது.

"தாக மெடுத்து வந்தவர்களிடம் சண்டை போடுகிற பெண்ணை இப்போதுதான் கண்டேன்."

"தனியாக இருக்கிற பெண்ணோடு வம்பு பேசும் ஆண்பிள்ளைச் சிங்கங்களை இப்போதுதான் பார்த்தேன். போனாப் போவுதுன்னு விட்டேன்."

செல்லத்தின் குரலில் கண்டிப்பும் கண்களில் சிறு கோபமும் நிழலாடின.

"நீ என்னம்மா செய்து போடுவே!" என்று விளையாட்டாகக் கேட்டான் வேலன்.

"பார்த்திட்டாப் போவுது" என்று குறுநகை புரிந்தவள், "இந்தாப்பா முருகா, ஒரு கை பார்; விளையாட்டாக நிற்காதே, உம், பார் ஒரு கை!" என்று தன் அருகே நின்ற ரிஷபத்தின் முதுகில் தட்டினாள். மொழு மொழுவென இருந்த இடத்தில் கழி விழுந்தது. பட்டுக்கட்டு மேனியில் நரம்புகள் புடைத்து விம்மின. மறுகணம் இளங்காளை வேலனும், நாலு பல் காளை முருகும் மல்லுக்கு நின்றார்கள்.

கிணற்றோரம் நின்ற கீரைத்தண்டுகள், வெண்டைச் செடிகள், கத்திரிப் பாத்திகள் சேறுசகதியாயின. மாட்டின் கோபமும் சீற்றமும் உடல் முறுக்கும் வர வர அதிகமாயின. "ஆஹா! சரியான ஜோடி அகப்பட்டுக் கொண்டாயா!" என்று கச்சை கட்டிக் கொண்டு கைலாகுப் பாய்ச்சல் வகுத்தான் வேலன். பாய்ச்சலும் மோதலும், பம்மலும் உறுமலும் செந்தூள் பறந்தன.

"வேலா! விடாதே!" என்றான் ராமன்.

"வெகு பேஷ். முருகு விடாதே!" என்று சொன்னாள் செல்லம்.

மாடும் மனிதனும், மனிதனும் மாடும் தத்தம் ரோசத்தைக் காட்டப் பாய்ந்து கொண்டிருந்தார்கள். யாராவது ஒருவர் செத்து விடுவார்கள் என்ற எண்ணம் ராமன் செல்லம் இருவர் நெஞ்சிலும் அலை மோதின.

செல்லம், "ஏய், முருகு! போதும், வா, வா" என்றதும் முருகு அவள் சொல்லுக்கு அடங்கி

செல்லத்தை ஏமாற்றத்தோடு விரைத்துப் பார்க்கவே, "ஏம்மா, உன் மாடு பிழைக்க நல்லவழி செய்தே!" என்று சொல்லிச் சிரித்தான் ராமன்.

"நான் கூப்பிடா விட்டால் என்ன ஆகும், தெரியுமா!" என்று கேட்டாள் செல்லம்.

"வேலன் தோற்ருல் அவனோடு நிற்காது. இந்த ராமனும் இறங்கி நிற்பான். என்னுடன் அது மோதியாக வேண்டும்."

"அப்படியா!" என்று பெண்மையின் மமதை தொனிக்கச் சிரித்தாள் செல்லம்.

ராமனுக்கு அது சிரிப்பாகப் பட்டது வேலனுக்கு நெருப்பாகத் தகித்தது.

"பார்த்தாயா ராமா, இந்த மாட்டுக்கும் மனுஷிக்கும் இருக்கும் வீரப் பார்வையை! நம்மை ஆண் பிள்ளையாகவே நினைக்க வில்லை. அதோ வருதே சோளத் தட்டை, அதுவாகத்தான் நம்மை எண்ணிப் போட்டுது, இந்தப் பொண்ணு!"

மீண்டும் ராமனும்—ஆளை விழுங்கும் விழிச் செல்லமும் பார்த்துக் கொண்டார்கள்; மாடும் மனிதனும் பார்த்துக் கொண்டன.

ராமன், "போனுப் போவுது பொம்பிள்ளை விட்டுவிடு, வேலா. தண்ணீரைக் குடி, போகலாம்" என்ருன். ஆனல் அவன் உள்ளம் யௌவனப் பருவம் குமிழிவிடும் செல்லத்தை வட்ட மிட்டது. வேலனின் நெஞ்சு மட்டும் என்ன! மணமாகாத வாலிப உள்ளத்தின் கனவிலே சுழன்றது.

"அந்தப் பொண்ணுக்கு அடிமையாகி விட்டாய். சுயநலத்தோடு பேசறே" என்ருன் வேலன்.

"நீ உன்னையே மறந்திட்டே" என்ருன் ராமன்.

"நானு! நீதான். இந்தக் காளையைத் தோற்கடித்தால் இவளைப் பெறலாம் என்பதுதானே உன் நினைப்பு!"

"சேச்சே, நிறுத்தடா!" என்ற டகாரப் பிரயோகம் 'டபார்' என்று விழுந்தது.

"யார் நிறுத்திப் பேசணும்! முன் பின் தெரியாத பெண் பக்கமாகச் சாய்ந்து விட்டது உன் மனம். உயிருக்குயிரான சேக்காளியை மறந்திட்டே......" என்று பேசிய வேலன் 'சட்' டென்று ஏதோ நினைப்பு வந்தவன் போல நாக்கைக் கடித்துக் கொண்டான்.

வீரத் திருப் பார்வையில் முறுக்கேறிய கரத்தோடு நின்ற ராமனின் உடம்பு குழைந்தது.

"என்னைப் பெற்ற தாயை, அவள் வார்த்தையை நான் மறந்தேன். வார்த்தையை நீ மறக்கவில்லை" என்று ராமன் ஓடியே போய் வேலன் உடலைக் கட்டிக் கொண்டான். ஆஹா, அந்தக் காட்சி மலை நெருங்குவதாகச் செல்லம் நினைப்பில் பதிந்தது. அவர்கள் மனச்சீற்றம், மனமாற்றம் இவற்றின் தரத்தை ஆராயத் தொடங்கிய சமயம், "யாரம்மா இறவைத் தோட்டத்திலே!" என்று குரல் கொடுத்தபடி வந்து சேர்ந்தார் தோட்டத்தின் சொந்தக்கார ஜமீந்தார் சொக்கையாத்தேவர்.

கடசல் பிடித்த கருங்காலி உருவங்கள் இரண்டு நிற்பதும், இளம் ரிஷபம் 'முருகு' கோபமாகத் தலையாட்டி நிற்பதும், மகளின் மோன நிலையும் அவருக்குப் புரியாத புதிராக இருந்தன.

* * *

நிலவைப் பிரியாத இரவு போல, இரண்டு நாள் ராமனுக்கும் வேலனுக்கும் தமாஷாகப் பொழுது போயிற்று. ஒவ்வொருவர் மனவானிலும், ஒவ்வொரு லட்சியம் நட்சத்திரமாக மின்னியது.

ராமன் இளம் உள்ளத்தை, நெருப்பில்லாமலே ஏதோ ஒன்று எரிக்கத் தொடங்கிற்று. வேலனுக்குத் துரோகம் செய்யலாமா என்று எண்ணமிட ஆரம்பித்தான்.

சொக்கையாத்தேவர் பூரித்துப் போனர். எடுத்தெறிந்து பேசும், அடக்கமற்ற தமது மகள் ஆணவத்துக்கு என்றும் கன்னியாகவே வாழ்வாள் என்று அவர் மனசில் குளுமை தட்டிற்று. அவர் தவிப்புக்கு விடிவு ஏற்பட்டு மருமகன் கிடைத்து விட்டதில் சந்தோஷம்.

"ஏம்மா செல்லம், நீ விளையாட்டுப் பிள்ளையில்லே. யாராவது ஒரு பையனை மணந்து கொள்வதாகச் சொல். அவர்கள் என்றைக்கும் அன்போடு வாழ வழி அதுதான்" என்ருர்.

ஜன்னல் வழியாக வெளிப் பக்கத்துத் தோட்டத்தைப் பார்த்தாள். ஒரு கிளையில் மலர்ந்த இரு ரோஜாப் பூக்கள் கண்ணில் தெரிந்தன. மனசுக்குள் எந்தப் பூ அதிக அழகு என்ற போராட்டம். வீரம்காட்டிய வேலனின் திருவுருவம் அவள்மனத்துள் உலாவ ஆரம்பித்தது. "சொல்லம்மா, ராமனைத் தானே!" என்று ஜமீன்தார் சொக்கையாத்தேவர் முடித்து விட்டார்.

இந்தவேளையில், ராமனும் வேலனும் அறைக்குள் வரவே, வந்தவர்கள் முகத்திலே கவலை நீங்



## வீடு தோறும் கல்கி!

'கல்கி'யின் பெயர் தமிழகத்தில் ஒவ்வொருவர் வீட்டிலுமே வழங்குகிற குடும்பச் சொல்லாகி விட்டது. அவர் பிரிவைக் கேட்டுத் தமிழகம் பெருந் துயர முற்றிருக்கிறது. கல்கி அன்பர்களுக்கு என் மனப் பூர்வமான அனுதாபங்கள்.

புதுடில்லி 6-12-54

மரகதம் - சந்திரசேகரன் (இந்திய உதவி சுகாதார மந்திரி)

லிய தெளிவு கண்டார் சொக்கையாத் தேவர். வந்தவர்கள் முகத்திலே மலர்ச்சி.

"நாங்களே தீர்மானம் செய்து விட்டோம்."

"எப்படி உங்கள் தீர்மானம்!" என்று கேட்டார் ஜமீன்தார்.

"சொல்லு, வேலா" என்றான் ராமன்.

வேலன், "நான் சொல்லி விடுகிறேன். நான் அநாதை; அண்ணன் அம்மாதான் தாயாக வந்து வளர்த்துக் காற்பாற்றிச்சுது. சிறு பிள்ளையிலே எங்களுக்குள் எப்போதும் சண்டை வரும்; குத்துப்பழி வெட்டுப்பழிதான். அம்மா தினம் சமாதானம் செய்யும். ஒரு நாள் ஆற்றிலே, குளிக்கப் போன இடத்திலே வார்த்தை தடிக்கப் போச்சு. ஒருவனை ஒருவன் தண்ணீரிலே அமுக்கிக் கொன்று விடறது என்று தீர்மானம் செய்தோம். இரண்டு பேரும் சம பலம் உள்ளவங்க. போராட்டம் மணிக்கணக்கா நடந்தது. அம்மா வந்துட்டுது. எங்களை வீட்டுக்குக் கூட்டிப் போய்ச் சோறு போட்டுது; அது ஒரு வாரம் அன்னம் தண்ணியில்லாமல் மெலிய ஆரம்பிச்சுது; நாங்க சண்டை போடறது இல்லை என்று தினம் வாக்குத்தத்தம் செய்தோம், அழுதோம், விழுந்தோம். கரும்பாயிரம் பிள்ளையார் முன்னாலே, நூறு தோப்புக் கரணம் போட்டோம், சத்தியம் செய்தோம்" என்று சொல்லி வரும்போது கண்ணீர் திரையிட்டது.

"சரி, இப்போது உங்கள் முடிவு என்ன!"

"ராமனை செல்வத்தை மணந்து கொள்ள வேண்டும். ஆனால், ஒரே ஒரு வேண்டுகோள்..." என்று வேலன் சொல்லி நிறுத்தினான்.

"என்ன!" என்று கேட்டார் தேவர்.

ராமன், "உங்கள் ரிஷபம் முருகை வேலனுக்குக் கொடுத்துவிட வேண்டுமாம். அதைக் கிராமத்துக்குக் கொண்டுபோய் விடுவானாம். இதுதான் அவன் விருப்பம்" என்று விளக்கம் செய்தான்.

மகுடி கேட்ட நாகம்போல், "அப்பா, முருகைக் கொடுக்க முடியாது" என்று சீறினாள்.

மகள்சீற்றத்தை மதியாமல், பெற்றோருள்ள ராமனையே அவர் மருமகனாக்க நினைத்தார். அவர் விருப்பம் போலவே, காளைகள் இரண்டும் தீர்மானம் கொண்டு வந்து விட்டதில் மகிழ்ந்து போய், மகள் பேச்சின் பொருளை அலட்சியம் செய்துவிட்டார். அநாதைக்கு மாடும், அந்தஸ்து உள்ளவனுக்கு மகளும் என்று முடிவு கட்டி விட்டார் தேவர்.

செல்வத்தின் கரம்பிடித்து கணவனானான் ராமன். கல்யாணம் முடிந்த பின்னர் 'முருகை' ஓட்டிக் கொண்டு போனான் வேலன்.

ஜமீன்தார் சொக்கையாத்தேவரின் மருமகனைப் பற்றி அவ்வூர்க்காரர்கள் பேசிக் கொண்டார்கள். வேலன் கொண்டு வந்த முருகைப் பற்றிச் சிறப்பாகப் பேசிக் கொண்டார்கள்.

* * *

**கா**லம் நகர்ந்து கொண்டிருந்தது. புது மணத் தம்பதிகளின் உல்லாச வாழ்வு ஒரு வாரத்துக்கு மேல் நீடிக்கவில்லை. செல்வத்தின் அழகையும் ஆனந்தப் பேச்சையும் விட, அருவருப்புத் தரும் பிடிவாத குணத்தைத்தான் கண்டான். பிடிவாதத்தோடு முரட்டுத் தனமும் ஒட்டுக்கட்டி வளருகிறது என்று அறிந்தான். தான் செய்தது தவறோ என்று கூட இரண்டொரு மாதங்களில் எண்ண ஆரம்பித்தான் ராமன்.

காதலர்கள் சண்டைக்குப் பொய்க் காரணம் போதும் அல்லவா! ஒரு நாள்...

"வாய் திறந்து பேசினால் என்ன முத்து உதிர்ந்து விடுமா!" என்றான் ராமன்.

"பேச வேண்டியதில்லை" என்றாள் லக்ஷ்மி.

"எதற்காக நீ என்னைக் கல்யாணம் செய்து கொண்டாய்! என்னை அவமதித்தால் என்ன ஆகும் தெரியுமா!"

"ஆவதென்ன!" என்றாள்.

அப்பப்பா! கண்களில்தான் எவ்வளவு கொடூரம்; பயங்கரமான சீற்றம்! அந்தப் பார்வையைக் கண்டு விஷப் பாம்பின் மூன் சீற்பதாக

## சிறந்த தேச பக்தர்!

அன்புள்ள ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி அவர்களின் அகால மறைவைப் பற்றி ரேடியோவில் கேட்டுத் திடுக்கிட்டேன். 'கல்கி'யில் சில தினங்களுக்கு முன்புதான் அவரின் உடல் நலனைப் பற்றி ஒரு குறிப்பு கண்டிருந்தது. இப்பொழுது அவர் காலமாகிவிட்டது பற்றி நான் பெரிதும் வருந்துகிறேன். அவர், தமிழ் இலக்கியத்துக்கும் நாட்டின் கலை வளர்ச்சிக்கும் தம் வாழ்நாட்களை அர்ப்பணித்து வந்ததோடு, தற்சமயம் எழுப்பப்பட்டுவரும் காந்தி ஞாபகார்த்த மண்டபமென்ன, எட்டயபுரத்திலுள்ள பாரதி மண்டபமென்ன, இவைபோன்ற பொது முயற்சிகளிலும் மிக்க ஆர்வத்துடன் ஈடுபட்டு, சிறந்த தேச பக்தராக விளங்கி வந்தார். அவருடைய மறைவு நமக்குப் பெருநஷ்டம்.

ராஜபவனம், கட்டாக்
6—12—54

பி. எஸ். குமாரசாமி ராஜா
(ஒரிஸா, கவர்னர்)



## ஜாம்-பெக்கினால் அந்த எக்ஸிமா, மண்டை சருமநோய், மற்றும் சிரங்கை ஒழித்து விடுங்கள்

# Zam-Buk



ஜாம்-பெக் உலகிலேயே மகோன்னதமான சருமக்களிம்பு. ஜாம்-பெக் புண்ணை ஆற்றி அரிப்பை நிறுத்தும். ஜாம்-பெக் சருமத்தினுள் புகுந்து, நோயுற்ற தசை நார்களை சுத்தம் செய்து விரைவில் சருமத்திற்கு அழகும் தசைக்கு ஆரோக்கியமும் ஊட்டும். விஷகாயங்கள், கொப்புளங்கள் சீப்பிடித்த புண்கள் முதலியவற்றை குணப்படுத்துவதிலும், பூச்சிக்கடிகளை பரிசுத்தமாக்குவதிலும், கால்வலி மற்றும் ரணங்களை ஆற்றி சமனமூட்டுவதிலும், ஜாம் - பெக்கின் சக்தி அற்புதமானது. அநேக மதிப்பு வாய்ந்த ஔஷதப் பொருள்களடங்கிய ஜாம்-பெக்கில் க்ளோரோபில்லும் சேர்ந்திருப்பதால் அதன் சமன குணமும் தசைநார் புஷ்டி மற்றும் இதர பயன்களும் கிடைக்கின்றன.

மிருகக் கொழுப்பு சேரவில்லை என்பதற்கு உத்திரவாதம்.

ஜாம் - பெக்கினால் குணம் பெறுவீர்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FZT-35 TAM.

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்



## இன்பம் தரும்

# 31

# 301

# 3001



## ஜவ்வாது பத்திகள்

**S.V. முருகேசன் & பிரதர்ஸ் ★ மதுரை·மதராஸ்·பெங்களூர்.**

**S.V. MURUGESAN & BROS. 19, GOVINDAPPA NAICKEN ST, MADRAS, 1.**

தபால் பெட்டி நெ. 1897 டெலிபோன் : 4890

# மலேரியாவை ஒழியுங்கள்

## நிச்சயமாக – ஆபத்தில்லாமல் – குறைந்த செலவில்

## ‘பாலுட்ரின்’

மலேரியாவை வீழ்த்துகிறது

**மலேரியாவின் சின்னங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கமுண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். பிறகு உடம்பு முழுவதும் வியர்த்து வலி உண்டாகும். இந்த அறிகுறிகள் ஏற்பட்டால் உடனேயே டாக்டரைப் பாருங்கள்.

எப்பொழுதும் ‘பாலுட்ரின்’ சாப்பாட்டிற்குப் பிறகு ஒரு டம்ளர் தண்ணீருடன் உட்கொள்ளுங்கள்.

வயதுவந்தவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும்: ஒரு மாத்திரை (0.3 Gm.)
6 லிருந்து 12 வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு: அரை மாத்திரை
6 வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு: கால் மாத்திரை

தினந்தோறும் ஜுரம் குணம் அடையும் வரை கொடுக்கவும்.




ICP 287

எண்ணினன் ராமன். 'நீ புருஷன், அவன் பெண்' என்றது அவன் விவேகம்.

"என்னை இன்னாரென்று தெரியாமல் விளையாடாதே! நீ கடமையைச் செய்ய வேண்டியவன்."

"உபதேசம் போதும்."

மறுகணம் நெருப்புத் தாம்பாளம் வந்து பதிந்த மாதிரி இருந்தது. செல்லத்தின் கன்னத்தில் ராமன் மற்றொரு அறை கொடுக்கத் துடித்தான்.

"பயங் கொள்ளி" என்று கேலி செய்தாள் அடிபட்ட ரோசத்தில் செல்லம்.

"நானா பயங்கொள்ளி!" என்று மற்றொரு அறை கொடுத்தான் ராமன்.

"சீ, நிறுத்து! அடிக்குப் பயந்தவள் நானல்ல" என்றவள் எம்பிக் குதித்து மேலே யிருந்த பிச்சுவாவைக் கையில் எடுத்துக் கொண்டாள். ராமன் உயிருக்குப் பயப்பட வில்லை. உலகத்திற்காக, ஊராரின் பழிச் சொல்லுக்காகத் தணிந்து போய்க் கோழையாகி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். அதில் ஒரு ஷரத்து, "என் முருகு இங்கே வர வேண்டும்" என்று சொல்லி முடித்தாள் செல்லம்.

* * *

ராமன் சற்று நிம்மதியாக வாழத் தன் கிராமத்தை நோக்கி மூன்று மைல் நடந்து வந்தான். அவன் வாழ்வில் புயல் வீசி ஓய்ந்த மாதிரி இருந்தது. ஊருக்கு வந்தால் வேலன் குய்யோ முறையோ வென ஓலமிட்டான். "நீ சொல்கிறதெல்லாம் உண்மையா! இந்த மாட்டுக்கு இத்தனை குரோதம் இருக்குதா!" என்று ஆச்சரியப்பட்டான் ராமன்.

"இதனால் ஊரில் வம்பு. அக்கம் பக்கத்துச் சண்டை என் பொறுமையைச் சோதித்துவிட்டது. தன்னை அவமானப் படுத்தி விட்டதாக முருகு நினைக்கிறது; பழி வாங்கச் சந்தர்ப்பம் பார்க்கிறது" என்று வேலன் அழுத்துக் கொண்டான்.

"போய்! மாட்டுக்கு இத்தனை குரோதம் இருக்காது, நீயாகக் கற்பனை செய்வது. அது தங்கமான குணமுள்ளது" என்றான் ராமன்.

"சே, சே, மனிதர்களைப் பழக்கி விடலாம். அன்பு காட்டி விடலாம். நானும் எத்தனையோ மாடு கன்றுகளைப் பார்த்திருக்கிறேன். இதற்குள்ள ரோசம் தனி. அசைந்தால் ஆளைக் குத்திப் பந்தாடும்" என்றான் வேலன்.

ராமன் சிரித்துக் கொண்டான். மாட்டின் மனத் தத்துவப் போக்கு வேலன் சொல்லச் சிரிப்பாகப் பட்டது. செல்லத்தின் கோபத்தையும் அகங்காரத்தையும் வேலன் அறிந்தால் என்று எண்ணிய அவன், என்ன சொல்லுகிறோம் என்று நினையாமல் சொன்னான்:

"ஆயிரத்தைச் சொல்லு, அந்த ராணி செல்லம் இருக்கிறாளே அவள் பெரிய விஷப் பாம்பு."

"சே, சே! அவள் ரொம்ப நல்லவள். இதனுடைய வஞ்சம் உனக்குத் தெரியாது. இரண்டு மாதத்தில் நான் பட்டபாடு...இனி என்ன பாடு படப் போகிறேனோ! மேலும் இதுக்கு வல்லரைச் சுழி; உயிருக்கே ஆபத்து."

"செல்லத்தைப் பற்றி நீ ஒன்றும் அறியாதவன். அவளை எனக்குத் தெரியும். இது அப்பாவி மாடு" என்று எழுந்து போய் அன்போடு அதைத் தட்டிக் கொடுத்தான். 'முருகு' நன்றியுடன் ராமனைப் பார்த்துத் தலை தூக்கிக் கொடுத்தது; சொரிந்து கொடுக்கத் தாடையை உயர்த்தி நின்றது.

"பார்த்தாயா, முருகு மிகவும் நல்லது! இதைக் குறை சொல்லாதே."

"உனக்கு நல்லதாகப் படுகிறது. அதன் குணத்தை உன்னால் அறிய முடியாது" என்ற வேலன் அதன் அருகாக வரவே மாட்டின் மூச்சும் பார்வையும் விம்மத் தொடங்கிற்று. வேலன் சொல்வது கூட உண்மையாக இருக்குமோ என்ற நினைப்பு எழவே, 'நீ முருகை மிகவும் இம்சை செய்திருப்பாய்' என்று கூறினான் ராமன்.

## நிலையான தொண்டு!

அவர் பலவகையிலும் இணையற்ற மனிதராகத் திகழ்ந்தார். நமது ராஜ்யத்தின் அரசியல், கலாச்சாரம், இலக்கியம் முதலியவற்றில் அவருடைய சக்தி அபாரமானதாக இருந்து வந்தது. பின் வரும் பலப் பல தலைமுறைகளில் வருபவர்கள் அவர் பெயரை நினைவு கூர்வார்கள். 'கல்கி' பத்திரிகைக்கு அவர் செய்துள்ள தொண்டும், கல்கி பத்திரிகையும் என்றும் அவர் பெயரைப் பசுமையாகவே வைத்திருக்கும். அவர் புனித ஆத்மா சாந்தி யடைவதாக.

சென்னை 7—12—54 ஏ. எஸ். பீ. அய்யர் (நீதிபதி)

## இலக்கியத்துக்கு நஷ்டம்!

நண்பர் ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி மறைந்தார் என்று ரேடியோச் செய்தி மூலம் கேள்விப்பட்டு ரொம்பவும் துயருற்றேன். இது அகால மரணம். அவருடைய நண்பர்களும், அவருடைய இலக்கியங்களைப் படித்து ரஸித்தவர்களும் பெருந் துயரத்தில் ஆழ்ந்திருப்பார்கள். தமிழிலக்கியத்துக்குப் பெருநஷ்டம் ஏற்பட்டு விட்டது.

கல்கியின் பிரிவால் வாடும் நண்பர்களின் துயரில் நானும் பங்கு கொள்கிறேன். என் அனுதாபங்கள் அவர் குடும்பத்தினருக்கு உரித்தாகுக!

ராஜ்பவன், பட்னா 6—12—54 ஆர். ஆர். திவாகர் (பிஹார் கவர்னர்)

● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

## தமிழகத்தின் நஷ்டம்!

தமிழ்த் தாயின் செல்வப் புதல்வர் ஸ்ரீமான் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஞாயிற்றுக் கிழமை காலை இறைவன் திருவடியை அடைந்தார் என்ற செய்தி மிகுந்த அதிர்ச்சியையும் துக்கத்தையும் கொடுக்கிறது. அவருடைய மறைவினால் தமிழகம் அடைந்த மாபெரும் நஷ்டமும் துக்கமும் சொல்லிற்கு அடங்காதவை. எனது துக்கத்தையும், ஆழ்ந்த அனுதாபத்தையும், கல்கி மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கும் 'கல்கி' பத்திரிகையில் சம்பந்தப்பட்டோருக்கும், 'கல்கி' அவர்களின் குடும்பத்தாருக்கும் தெரிவித்துக் கொள்ளுவதுடன், கல்கியின் பிரிவைத் தாங்கும் சக்தியை அவர்கள் அனைவருக்கும் கொடுக்கும் படிக்கும், அன்னாரின் ஆன்மா சாந்தி அடையும் படியும், இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

*சென்னை*
*6—12—54*

டி. கே. பழனியப்பன் ஐ. ஏ. எஸ்.

● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○ ● ○

"அதை நான் அடித்ததுகூட இல்லை. என்னவோ அதற்கு என்னைக் கண்டாலே ஆகவில்லை."

"செல்லத்துக்கும் என்னைக் கண்டால் அப்படித்தான்" என்று பளிச்சென்று பதில் சொன்னான்.

"உனக்குப் பழகும் நாசுக்குத் தெரியாது. செல்லத்தை ஏன் நீ அழைத்து வரக்கூடாது! நம்முடைய ஊரைப் பார்க்கலாமே!"

"அந்த ஜமீன்தாரணியைப் பற்றிப் பேசாதே" என்றவன் பரிவோடு பச்சைப் புல்லை எடுத்து மாட்டுக்குக் கொடுத்தான். முருகு தலையாட்டியாட்டி நாக்கைச் சுழற்றி வாங்கிற்று.

"உன்னைப் பிடித்திருக்கிறது முருகுக்கு. இதோடு அன்று சண்டை போட்டதால் என்னை வெறுக்கிறதோ என்னமோ!" என்று வேலன் வாய் மூடு முன் ராமன் "அப்படித்தான் இருக்க வேண்டும். ஆஹா, என்னைக் கோழை பயங்கொள்ளி என்றான். இன்றுதான் அர்த்தம் தெரிந்தது" என்று உளறிக் கொட்டினான்.

"ராமா, இப்படிப் பேசாதே. நான் அநாதை; அம்மா சொன்ன வார்த்தைக்காக இங்கே நிற்கிறேன். செல்லத்தைக் குறை கூறாதே! என்மீது கோபமிருந்தால் மன்னித்துவிடு!" என்று தழுதழுத்த குரலில் கதறினான்.

"ஐயோ, உன்னைக் குறை சொல்லவில்லை, வேலன். அவள் மனம் அப்படி இருக்குமோ!"

"அதைக் கூடச் சொல்லாதே. மகா பாவம். முருகை நீ கூட்டிக்கொண்டு போய்விடு. எனக்கு வைத்துக்கொள்ளப் பயமாக இருக்கிறது."

"நானும் சொல்ல முடியவில்லையே, உன்னைப் போல" என்று கேவிக் கேவி அழுதான். மனைவியின் முரட்டுக் குணம் பற்றியே சொல்லிச் சொல்லி ஓய்ந்தான். முருகை ஓட்டிப் போக வந்தவன் அதைக் கேட்பது தவறு என்ற தீர்மானத்தில் கேட்காமல் மறைத்து விட்டான்.

இரண்டு நாள் சென்று வேலனும் ராமனோடு செல்லத்தின் ஊர்ப் பக்கம் புறப்பட்டான்.

எவ்வளவு பெரிய பொய்யன் இந்த ராமன்.

ராமன் சொல்லிய கோபம் தாபம் எதுவுமே காணவில்லை; செல்லம்மாவின் கலகலப்பான பேச்சு முரட்டுக் குணம் இல்லாத பரிகாசச் சிரிப்பு, அன்பான உபசாரம் இவையே கண்டான்.

"ராமா, நீ சொன்னதெல்லாம் பொய்."

"பொய்யில்லை. நீ இருப்பதால் இப்படி இருக்கிறாள். நீ போன பின்பு எங்களுக்குள் போர்தான்."

"பொய். ஏன் மதனியாரே, அப்படியா!"

"அவர் சொல்வதை நீங்கள் நம்பலாம்" என்று இரண்டர்த்தத்தோடு சொல்லி நிறுத்தினாள்.

ராமன், செல்லம்மாவின் மனப் போக்கையும் சந்தோஷத்தையும் கண்காணித்துக் கொண்டிருந்தான். கவலையின்றிச் சந்தோஷமாகப் பொழுது ஓடிக்கொண்டிருந்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு வேலன் விடை பெற்றுப் போய்விட்டான்.

அவன் போன அரை மணி நேரத்துக்குள் செல்லமும் ராமனும், கீரியும் பாம்புமாக வாக்குவாதம் செய்யவும், குரோதமாகப் பார்க்கவும் ஆரம்பித்து விட்டார்கள்.

ராமன் உள்ளத்திலே தான் கோழையல்ல, கொடிய உள்ளம் கொண்ட ராட்சதன் என்று காட்டச் சந்தர்ப்பங்கள் உருவாகி வந்தன.

* * *

செல்லம் இரவும் பகலும் மனவேதனைப் பட்டுக் கொண்டிருந்தாள். வேலனின் இனிய சுபாவமும் எளிய பேச்சும் திறமையும் தோள் வலிமையும், அவன் செய்த தியாகமும் அவள் மனவானில் மின்னும். அவள் நெஞ்சம் பாறையாகிக் கொண்டு வந்தது. இரக்கம் இறந்து கொண்டும், அன்பு வற்றிக் கொண்டும், கடமை தூர்ந்து கொண்டும் வந்தன.

ராமனுக்கு உணவு கிடைக்கும்; நல்லுறக்கம் கிடையாது. பணம் கிடைக்கும், பாசம்கிடையாது. தன் பலம் எது, தன் பலவீனம் எது என்ற ஆராய்ச்சியில் இறங்கி இறங்கிச் செல்லம் காட்டும் மரியாதைபோலி, அன்பு போலி, அவள் மனத்திலே தன் பிம்பம் இல்லையென முடிவு செய்தான்.

இருவர் உள்ளங்களிலும் குரோதம் வளர்ந்தது; உதடுகளில் அன்பு மொழிகள் எப்போதாவது வரும். தன் சுதந்திரத்திலும் அதிகாரத்திலும் தலையிடுவதைக் கண்டித்தாள். கர்வமாக நடந்து கொண்டாள். மாமன் சொக்கையாத் தேவரிடம் மோதினான் ராமன். அவர் தமது தவற்றுக்குக் கண்ணை மூடி மௌனம் சாதித்தார்.

"இந்த வீட்டில் என்றாவது பழி விழும்" என்று கத்தினான் ராமன். பெண்சாதி அவமானம் செய்வது மிகையாகத் தோன்றியது. அவள் உள்ளத்தில் வேலன் இருக்கிறான் என்ற நினைப்பு வர வர ஊர்ஜிதம் ஆயிற்று. அவளுக்குப் புத்தி புகட்டத் தன் கைவரிசையைக் காட்டினான். அது அன்புக்குப் பதில் அவள் உள்ளத்தில் ஆத்திரத்தைத்தான் வளர்த்தது.

கோபத்தில், "உன் தாலியை நீ வாங்கிக் கொண்டு போ!" என்று கத்தி விட்டாள். அவர்கள் குல மரபுப்படி பேசி விட்டாள். ராமன் இரத்தம் கொதித்தது. மகளையும் மருமகனையும் ஆறுதல் செய்து வைத்தார் தேவர். ஒருவரையொருவர் கொல்லும் பார்வையில் பிரிந்தனர்.

"வஞ்சகன். கோழை. அன்பற்றவன். பழகத் தெரியாதவன்" — இந்த ரீதியில் அவள் மனம்

P. 994

# உங்கள் வதனத்தை மென்மையாக, புதுமை எழிலோங்க வைத்திருப்பது மிகச் சுலபமே!

## உங்கள் சருமத்திற்கு பாண்ட்ஸ் சௌந்தரிய பராமரிப்பு அளித்து வந்தால் போதும்

பிரசித்தி பெற்ற பாண்ட்ஸ் க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகச் சிறந்தவை; சீதோஷ்ணச் சூழ்நிலையின் கெட்ட விளைவுகளைத் தடுத்து சருமத்தைப் பாதுகாக்கும். உலக முழுவதிலுமுள்ள அழகு நங்கையரைப் பின்பற்றி நீங்களும் உங்கள் வதனத்திற்கு இந்தக்க்ரீம்களின் சௌமியமான பராமரிப்பு அளித்து, அதை மிருதுவாகவும் புதுமலர் சோபையுடனும் வைத்திருக்கக்கூடும்.



வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப் பொலிவைப் பாழ்படுத்தினால் நீங்கள் உபயோகிக்கவேண்டியது பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம். அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமனூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.



உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய்ப் பசையுடையதானால் அல்லது உஷ்ணமும் ஈரசப்பும் மிகுந்த சூழ்நிலையில் பிசுக்கடையும் பட்சத்தில், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மெல்லிய க்ரீம் சருமத்துவாரங்களில் படியும் பிசுக்கையும் செத்த ஜீவாணுக்களையும் அகற்றி உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்

பாண்ட்ஸ் க்ரீம்களை பிரதி தினமும் உபயோகித்து சருமத்தில் ஏற்படும் வித்தியாசத்தை கவனியுங்கள். சொற்ப நாட்களில் உங்கள் வதனம் அதிக தெளிவுடனும் மென்மையுடனும் விளங்குவதைக் காண்பீர்கள்—உணரவும் செய்வீர்கள்!

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்



ஓட்டம் கண்டது. வர வர அவன் இரத்தத்தில் பம்மிக் கிடந்த வீரம் துடிக்க ஆரம்பிக்கவே, "வாழ்ந்தால் சுக வாழ்வு; இல்லை வீர வாழ்வு" என்ற நிட்டத்திற்கு வந்தது. அதற்குத் துணையாகப் பெண்ணுக்குரிய ஒரே சொத்து, சாகஸம் கை கொடுத்து உதவியது.

இரவு வந்தது; இனிமையும் வளர்ந்தது. ராமனின் வைராக்கிய சித்தம் தவிடு பொடியாயிற்று. செல்லத்தின் மன மாற்றத்தில் மூழ்கி விட்டான். தன்னை எப்படிப்பட்ட மூட்டாள் என்று கற்பனை செய்து கொண்டிருந்தான். ஆம், அவன் மூட்டாள் தான் என்பதைச் சற்று முன் அருந்திய விஷ பானம் சொல்ல ஆரம்பித்தது. சோர்வு, தூக்கத்தில் ஆழ்த்திற்று. ஒரே நிம்மதியான தூக்கம்.

ராமன் கண்ணை மூடி விட்டான்.

செல்லம் தன்னறைக் கதவைத் தட்டும் ஓசை கேட்டுப் பயந்தாள். ஆனாலும் தைரியமாகப் போய் திறந்தாள். "யார், நீங்களா! வேலனு!" என்று திடுக்கிட்டுக் கேட்டாள்.

"ஆமாம், நான் தான்."

"உங்களைத் தான் இனி நம்பி யிருக்கிறேன்" என்று கையை எட்டிப் பிடித்தாள். அந்த இருளில் நகர்ந்தது உருவம். அவள் கைப்பிடிக்கு எட்டாத தூரத்தில் போய் நின்றது. அவள், மனப் பிரமையில் கண்ட உருவத்தை நோக்கி நடந்தாள். கைப்பொருள் அல்ல; கனவுப் பொருள் என்று தெளிவடையச் சில நிமிஷங்கள் சென்றன.

என்றோ ஒருநாள், முருகும் வேலனும் போசிட்ட கிணற்றங்கரைப் பக்கம் வந்தாள். அவள் கண்டது கனவா, நனவா! வியர்க்க விருவிருக்க நின்று கொண்டிருந்தது 'முருகு'...!

வேலனைப் போல அதுவும் பிரமையா! எழுந்து தொடப் போனாள். கனவின் உருவம் அன்று; எதிரே தளதள வென இருக்க வேண்டிய முருகு சற்று இளைத்து நின்று கொண்டிருந்தது.

செல்லத்தைக் கண்ட ஆனந்தத்தால் இருமுறை துள்ளிக் குதித்தது. ஆடாதோடை வேலிக்கு அப்பால் மாட்டின் சொந்தக்காரன் வேலன் துரத்தி வருவான்; வரலாகாதா, வரவேண்டுமே யென்ற ஆதங்கத்தோடு பார்த்தாள். பார்த்துக் கொண்டே யிருந்தாள்.

'முருகு' கொம்பை அவள் பக்கம் ஆட்டிற்று. விளையாட்டாக உரசிற்று. விரலினால் தடவிக் கொடுத்தாள். இரத்தம் இரண்டு கொம்பிலும் பூசிவிட்ட மாதிரி ரத்தத்தின் சிவப்பு. தொட்ட இடத்தில் ரத்தம் குபுகுபு வெனக் கை விரல்கள் வழியே வழிந்தோடுவதாக எண்ணம்.

'முருகு' பார்த்த வெற்றி வெறியின் அர்த்தத்தை அவள் எங்கே கண்டாள்!

"ஏதுடா ரத்தம்!" என்று கலங்கிய உள்ளத்தோடு முருகைத் தொட்ட சமயம் வேலிக்கு அப்பால் மனிதக் குரல் கேட்டது.

"யாரது! வேலனு!"

"இல்லேம்மா."

"நீ யாரு."

"கேளுங்க, ரேக்ளா வண்டியிலே முருகைப் பூட்டிப் பழக்க நானும் வேலனோடு ஒரு வாரமாகத் துணையாக இருக்கிறேன். இன்னைக்குக் காலையில் இது வண்டியில் பூட்டும்போது வேலனை என்ன பாடு படுத்திவிட்டது. உச்சிப் பாறை ரோட்டிலே ரேக்ளாவைக் கவிழ்த்து எறிந்து வேலனைத் தள்ளிச்சு. நான் எடுக்கப் போனேன். குப்புற விழுந்த அவனைப் பாஞ்சு பாஞ்சு குத்திட்டுது. காப்பாத்த வந்த என்னையும் அண்டவிடவில்லே. முடிவிலே உடம்பைக் குத்திக் குத்திச் சல்லடைக் கண்ணு ஆக்கிடுச்சு. பாவியை இப்படியா கொல்லும் இந்த மாடு" என்றான் எட்டி நின்றபடியே வந்த ஆள். வேலியைத் தாண்டி உள்ளே வர பயம்.

"கொன்னுட்டுதா! வேலன் போய் விட்டானு!" என்ற இதயக் குமுறல் அங்கே எதிரொலி செய்தது. முருகை ஓங்கியடித்து, "அட கொலைகாரப் பாவி" என்று கத்தினாள். முருகு "அடி, கொலைகாரி" என்று பதிலுக்குத் திருப்பிச் சொல்லத் தெரியாமல் திண்டாடி நின்றது.

அதேவேளையில் வானுலகை நோக்கி இணை பிரியாத இரு ஆவிகள் போய்க் கொண்டிருந்தவை, அந்தத் தோட்டத்துக்கு மேலாக வந்ததும், எம்பி வெகு உயரத்தில் எவ்விப் பறந்தன!



## கதை மணி கல்கி!

அன்பார்ந்த ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

காலதேவிக்குத் தமிழன்னைமேல் பொறுமை வந்துவிட்டதா! மூன்று ரசிகரையும் கொத்தோடு கொண்டு சென்றாரே! ரசிகமணி முன்பே சென்றார், கவிமணி தொடர்ந்தார், கதை மணி கல்கியும் நண்பர் கூடச் சென்றார்! இங்கே பிரிந்த மூவர் அங்கே தமிழரங்கு நடத்துவார்கள் போலும்.

கம்ப ரசிகமணி
  கண்ணுங் கவிதைமணி,
இன்பக் கதைமணியும்
  ஏகினரோ — உம்பரிலே
மூவர்க்கும் மூச்சான
  முத்தமிழின் பாயத்தைத்
தேவர்க்குஞ் சொல்லத்
  தெளிந்து!

கல்கிப் பத்திரிகையை இன்னும் மிகச் சிறப்பாக நடத்த வேண்டும். கல்கி மறுமலர்ச்சிச் சோலையின் கற்பக மலர்! 'கல்கி' வாழ்க!

வடலூர்
7—12—54

சுத்தானந்தபாரதி

# முதன்மை மற்றும் எப்பொழுதும் முதன்மை

மணிக்கு 394.19 மைல்கள் வேகத்தில் ஓடிய உலகில் மிக துரிதமான காரில் உபயோகிக்கப்பட்டது

மணிக்கு 178.49 மைல்கள் வேகத்தில் ஓடிய உலகில் மிக துரிதமான மோட்டார் போட்டு, "ஸ்லோ-மோ-ஷன்" iv-ல் உபயோகிக்கப்பட்டது

1954-ல் நடந்த இந்தியானா போலிஸ் 500 மைல் தூர மோட்டார் பந்தயத்தில் முதலாவதாக வந்த பத்து கார்களிலும் உபயோகிக்கப்பட்டது இதுவே

அதிகமான மோட்டார்க்காரர்கள் உலகில் வேறெந்த மோட்டார் ஆயிலைக்காட்டிலும் இதையே உபயோகிக்கின்றனர்

உயரிய விஸ்காஸிடி இன்டெக்ஸ் இருப்பதால் என்ஜினின் எல்லா சீதோஷ்ண நிலைகளிலும் பரிபூரணமான லூப்ரிகேஷன் கொடுக்கிறது.

உயர்ந்த சுத்திகரிப்பு குணம் இருப்பதால் உங்கள் என்ஜினில் நாசகரமான கரிப்புகை படிய விடுவதில்லை.

திராவக எதிர்ப்பு குணத்தினால் என்ஜினின் உலோக உறுப்புகள் அரிக்கப்படாமல் பாதுகாக்கப்படுகின்றன-மற்றும் பெட்ரோல் செலவு குறைகிறது.




போகவேண்டிய இடத்திற்கு தடங்கலின்றி போய்ச் சேர இத்தலை சிறந்த ஜதையை உபயோகியுங்கள்!

முச்செயல்-திறனுள்ள **மோபிலாயில்**



இரட்டை-சக்திவாய்ந்த **மோபில்காஸ்**

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

# சக்கரவர்த்தித் திருமகன்



## 43. பத்து ஆண்டுகள் கழிந்தன!

இப்போது ஆரம்பிப்பது அரண்ய காண்டம். சீதைக்கு ஏற்படப் போகும் விபத்துக்கு, கவி நம்மை ஆயத்தப் படுத்துகிறார். தண்டகாரண்யத்தில் சக்கரவர்த்தித் திருமகனுக்கு ஒரு புதுக்கடமை ஏற்பட்டு விட்டது: ரிஷிகளைத் துன்புறுத்தும் அரக்கர்களைக் கொல்லும் கடமை. வரப் போகும் கஷ்டத்தின் சூசனையாகச் சீதையின் மனத்தில் ஒரு பயம் தோன்றிற்று.

"வனவாசத்தில் இந்த க்ஷத்திரிய காரியத்தைத் தாபசிகளான நாம் ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்? நாம் வந்தது தந்தையின் ஆணையை நிறைவேற்ற. அவர் வாக்கைச் சத்திய வாக்காகச் செய்வதற்காக வனவாசம் வந்தோம். ரிஷிகளைக் காப்பாற்றும் கடமை நாட்டையாளும் அரசனுடையது. மக்களைத் தொந்தரவு படுத்தும் ராக்ஷசர்களைத் தண்டிப்பது பொதுவாக க்ஷத்திரிய தருமமானாலும், அது சிம்மாசனம் ஏறிய அரசனுடைய கடமை. நாமோ தவமிருக்க வந்திருக்கிறோம். அரக்கர்களைக் கொன்று ரிஷிகளைக் காப்பது நம்முடைய கடமை யாகாது. நம்மை எதிர்க்க வராதவர்களைக் கொல்லுவது வனவாச விரதத்துக்கும் விரோதமாகும். இங்குள்ள ரிஷிகளுக்கு நீங்கள் வாக்குறுதி கொடுத்து விட்டீர்கள். 'ரிஷிகளைத் தொந்தரவு செய்யும் அரக்கர்களை நான் வதம் செய்வேன்' என்று பிரதிக்ஞை செய்து விட்டீர்களே? இது நம்மை எங்கே கொண்டுபோய் விடுமோ, தெரியவில்லை."

இவ்வாறு சீதை ராமனுடன் பிரியமான மொழிகளில் வாதம் செய்தாள். சுதீக்ஷ்ண முனிவருடைய ஆசிரமத்திலிருந்து புறப்பட்டு தண்டகாரண்யத்திலுள்ள மற்ற ரிஷிகளுடைய ஆசிரமங்களுக்குப் போகும்போது இதைப் பற்றிப் பேசிக் கொண்டே சென்றார்கள்.

"என் நாதனே! எதிர்த்துப் பேசுகிறேனே என்று கோபிக்க வேண்டாம். பெண்ணாகிய எனக்குத் தோன்றுவதைச் சொல்கிறேன். எது தருமம் எது கடமை என்பது உங்களுக்குத் தெரியும். ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும். ஆசையினால் தூண்டப்பட்டு மக்கள் செய்யும் பெரும் பாவங்கள் மூன்று என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பொய் பேசுவது, பரஸ்திரீயைத் தீண்டுவது, நம்மை எதிர்த்துத் தீங்குசெய்யாதவர்களைத் துன்புறுத்துவது. இம்மூன்றில் பொய் என்பது உங்களிடம் அண்டாது. சத்தியத்தைக் காக்க ராஜ்யாதிகாரத்தையும் போகங்களையும் விட்டு விட்டு இங்கே வனவாசம் செய்கிறீர். என் பிரிய நாதனே! பரஸ்திரீயை மனத்தில்கூட நினைக்க மாட்டீர் என்பது எனக்குத் தெரியுமல்லவா? இப்போது நான் பயப்படுவது மூன்றாவது விஷயத்தைப் பற்றித்தான். அதாவது நம்மை எதிர்க்காத ஒருவனை நாம் வதம் செய்யலாமா என்பது. ராக்ஷசர்களாயினும் யாராயினும் நம்மை எதிர்க்க வராதவர்களை நாம் ஏன் கொல்ல வேண்டும்? அவசரப்பட்டு இந்த வனத்தில் வசிக்கும் முனிவர்களுக்கு வாக்குக் கொடுத்து விட்டீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. தீயவர்களை அழிப்பது க்ஷத்திரிய தர்மமே. ஆனால் நாம் வனவாசத்தில் அந்தத் தர்மத்தை அனுசரிப்பது சரியல்ல. அரச பதவியிலிருப்பவர்களுக்கல்லவா அந்தக் கடமை சேர்ந்தது? மரவுரி உடுத்தித் தலைமயிரை ஜடையாக்கி, விரத வேஷம் பூண்ட உங்களுக்கு இந்தக் கடமை எப்படி ஏற்படும்? இது வேண்

டாம் என்று எனக்குத் தோன்றுகிறது. உங்களுக்குத் தெரியாத விஷயம் ஒன்றில்லை. என் அபிப்பிராயத்தைச் சொன்னேன். யோசித்துச் செய்யவும்'' என்றாள் ஜானகி.

இவ்விதம் சந்தேகப்பட்டுப் பேசிய சீதையிடம் ராமனுக்குள்ள பிரியமும் மதிப்பும் முன்னை விட அதிகரித்தது என்றே சொல்ல வேண்டும்.

“காதலி! ஜனகர் மகள் அல்லவா நீ? ஆனபடியால் இத்தகைய உயர்ந்த லக்ஷ்யம் கொண்ட பேச்சைப் பேசினாய். சீதையே, நீயே சொன்னாயல்லவா, க்ஷத்திரியர்கள் தரிக்கும் ஆயுதம் பிறரை ரட்சிப்பதற்காக வென்று? கஷ்டப்பட்டு ஜனங்கள் அழுதால் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா ஒரு க்ஷத்திரியன் எப்படி இருக்கலாம்? இங்கே நாம் வந்தவுடன் என்ன கேட்டோம்? இந்த முனி சிரேஷ்டர்கள் தங்களுடைய கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டு, 'நாதனே, நீயும் உன் தம்பியும் எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று முறையிட்டார்கள். இந்த வனத்தில் தவம் செய்து கொண்டிருக்கிற ரிஷிகளைக் கொன்று தின்று வரும் இந்த ராக்ஷசர்களுடைய இம்சையைப் பொறுக்க முடியாமல் முறை யிட்டார்கள். 'எலும்புக் குவியலைப் பார்' என்று அவர்கள் எனக்குக் காட்டினார்கள்.

'எந்தை! மற்(று)யாருளர்
இடுக்கண் நீக்குவார்
வந்தனை யாம்செய்த
தவத்தின் மாட்சியால்
'உருளுடை நேமியால்
உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன்
புதல்வ! போக்கிலா
இருவினை வைகினோம்
இரவி தோன்றினாய்
அருளுடை வீரநின்
அபயம் யாம்'

“ஆயுதம் தரிக்கும் ராஜகுமாரர்களாகிய நாம் இந்தப் புலம்புதலைக் கேட்டுச் சும்மா இருக்க முடியுமா? அரசனுடைய கடமையாயினும் க்ஷத்திரிய குலத்தின் கடமையு மாகும். என்னுடைய நன்மையை உத்தேசித்து நீ சொன்னாய். நீ சொன்னது சரியே என்று வைத்துக் கொண்டாலும் நான் வாக்குக் கொடுத்து விட்டேன். 'நீயே சரணம்!' என்றார்கள். நானும் 'உங்களைக் காப்பேன்' என்று சொல்லி விட்டேன். இவ்வாறு பிரதிக்ஞை முடிந்து போயிற்று. இனி அதைப் பொய்யாக்க முடியுமா? நான் பொய்யனாகப் போனால் நீ பார்த்துச் சகிப்பாயா? என்ன 'கஷ்டம் வந்தாலும் நான் காப்பாற்றுகிறேன்' என்று சொல்ல வேண்டிய சொல் சொல்லியாகி விட்டது. அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவது என் கடமை. சக தரும சாரிணியான உன்னுடைய தருமமும் ஆகும். நீ வேறு நான் வேறு அல்லவே!'' என்றான் ராமன்.

ராஜாஜி

இப்படியாக அவர்கள் பேசிக் கொண்டே நடந்து சென்றார்கள்.

இவையெல்லாம் மழைக்கு முன் வரும் காற்றைப் போல் நடக்கப்போகும் அனர்த்தங்களுக்குச் சூசனையாகக் கவி அமைத்திருக்கிறார். வெறுமனே பக்கம் நிரப்புவதற்கல்ல.

தண்டகாரண்யத்தில் ரிஷிகளினிடையில் பத்து வருஷங்கள் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் யாதொரு கஷ்டமுமில்லாமல் கழித்தார்கள்.

தண்டகாரண்யப் பெருங் காட்டில் ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் ஒரு ரிஷி மண்டலம். அநேக ரிஷிகள் அங்கே ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு தவ வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தார்கள். ஒரு ஆசிரமத்தில் ஒரு மாதம், இன்னொரு ஆசிரமத்தில் மூன்று மாதம் இப்படிப் பல ஆசிரமங்களில் மாதக் கணக்கிலும் வருஷக் கணக்கிலும் ராம லக்ஷ்மணர்களும் சீதையும் சந்தோஷமாகக் காலங் கழித்தார்கள். வனத்தின் அழகு சொல்ல வேண்டியதில்லை. மான் கூட்டங்கள், காட்டு எருமைகள், வராகங்கள், யானைகள், பறவைகள், அழகிய மரங்கள், செடிகள் கொடிகள், கண்ணைக் கவரும் நீலோற்பல — தாமரைத் தடாகங்கள், நீர்ப் பறவைகள் இவற்றையெல்லாம் கவி வர்ணித்திருக்கிறார். இப்படி இயற்கை அழகுகளை அனுபவித்துப் பாடும் கவிகளில் வால்மீகி முதல் இடம் பெற்றவர். அதில் அவருக்கு அடங்காத ருசி. பாட்டின் நாதமும் அரண்யம் போலவே கம்பீரமாக இருக்கும்.

ரிஷிகளினிடையில் வாசம் செய்வதில் உண்டான சத்ஸங்க மகிழ்ச்சியைப் பத்



இடமிருந்து முதலில் இருப்பவர் கல்கி ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள். அவருக்கு அருகில் அமர்ந்திருப்பவர்கள்: காந்தி மகானின் அருமைக் குமாரர் தேவதாஸ் காந்தி; ராஜாஜி; கவர்னர் கனம் ஸ்ரீபிரகாசா.

தாண்டு ராமன் அனுபவித்தான். கூட லக்ஷ்மணனும் தேவியும் இருந்ததனால் ராமனுடைய ஆனந்தம் மும்மடங்காயிற்று.

பத்து ஆண்டுகளை ஒரு அத்தியாயத்தில் முடித்து விடுகிறேனே என்று குறைப்படலாகாது. சந்தோஷமாகவும் சுகமாகவும் கழியும் காலம் இலக்கியத்தில் சுருக்கமாகத்தான் முடியும்.

* * *

இப்படிப் பத்து ஆண்டுகள் கழிந்து, வனவாச விரதத்தின் காலவரை அனேகமாகத் தீர்ந்து போனதாக எண்ணும் சமயத்தில் அகஸ்திய முனிவரைத் தெரிசிக்க வேண்டுமென்ற ஆசை ராமனுக்கு உண்டாயிற்று.

அகஸ்தியர் விசுவாமித்திர முனிவரைப் போலவே மூவ்வுலகிலும் புகழ்பெற்ற முனிவர். இமயமலை முதல் விந்தியமலை வரையில் உள்ள அறிவும் தவ வன்மையும் ஒரு தட்டில் வைத்து, அகஸ்திய முனிவர் ஒருவர் தென் தட்டில் அமர்ந்தால் அவருடைய பாரத்தினால் தென் தட்டு கீழே இறங்கிவிடும் என்று சொல்வார்கள். பார்வதி—மகாதேவ விவாகத்தைப்பற்றிச் சொல்லப்படும் கதை அனைவருக்கும் தெரியும். எல்லா முனி சிரேஷ்டர்களும் கைலாசம் சென்று பூபாரம் அங்கே அதிகமாகப் போனபடியால் அகஸ்தியர் தெற்கே இருந்து கொண்டு பூமியின் நிலையைக் காத்தார் என்பது அகஸ்தியருடைய மகிமையைக் காட்டும்.

ஒரு காலத்தில் விந்தியமலை வளர்ந்து மிக உயர்ந்து கொண்டே போய், சூரியனுடைய தக்ஷிணாயன உத்தராயணப் போக்கைத் தடுப்பதாகப் பயந்து அகஸ்தியரைத் தேவர்கள் இறைஞ்சினார்கள் என்றும், முனிவர் விந்திய மலைக்கு எதிரில் நின்றபோது மலை தெண்டனிட்டு வணங்கிற்று என்றும், முனிவர், "நீ என்றென்றைக்கும் இவ்வாறே குறையாமல் இருப்பாய்!" என்று ஆசீர்வதித்தார் என்றும், அதனால் விந்திய மலை மிக நீண்ட மலையாய்ப் படுத்துக் கிடக்கிறது என்றும் சொல்லுவார்கள்.

வாதாபி, இல்வலன் என்ற இரண்டு அரக்கர்கள் ரிஷிகளை மிகவும் தொந்

# பினகா பற்பசை

## ஏன் உபயோகிக்க வேண்டும்?



வாய் ஓர் மலரும்

சோபையைப் பெற்று

பற்கள்  வெண்மையை அடைந்து

 போன்ற உறுதியைப்

பெறுவதற்காகத்தான்!

நீங்களும் உங்கள் குழந்தைமார்களும்

அதன்  நறுமணத்தையும்

பற்களுக்கு அளிக்கும் போஷாக்கையும்

பெரிதும் விரும்புவீர்கள்.

பினகா ரோஸ் அல்லது 'பினகா கிரீன்' க்ளோரோபில் சேர்ந்த பற்பசைகளை உபயோகியுங்கள்.

# BINACA

சிபாவின் உன்னத பற்பசை.

ஒவ்வொரு ட்யூப் பினகா பற்பசையுடனும், நாற்காலிகள். சோபாக்கள், கண்ணாடிகள், சுவர்கள் இவைகளை அலங்கரிப்பதற்கான மனோரம்யமான ஒரு ஒட்டும் கலர் சித்திரம் அடங்கியுள்ளது.



தரவு செய்து கொண்டிருந்தார்கள். வாதாபி ஒரு வரம் பெற்றிருந்தான். அவன் உடல் எவ்வளவு வெட்டித் துண்டு துண்டாகச் செய்யப் பட்டாலும் பிறகு ஒன்று சேர்ந்து உயிருடன் தோன்றும் என்கிற வரம் பெற்றிருந்தான். இல்வலன் ரிஷிகள் ஆசிரமத்துக்குப் பிராமண வேஷம் தரித்துப் போவான். "சுவாமி, என் இல்லத்துக்கு வந்து சிராத்த போஜனம் பெற்றுக் கொண்டு ஆசிர்வதிக்க வேண்டும்" என்று கேட்பான். சாஸ்திர விதிப்படி இத்தகைய விண்ணப்பத்தை எந்தக் காரணம் கொண்டும் மறுக்கக் கூடாது. ரிஷிகள் போய்ச்சிராத்தமும் போஜனமும் முடிந்த பிறகு, "திருப்தியா?" என்று இல்வலன் சிராத்த விதிப்படி கேட்பான். அவர்களும் வழக்கப்படி "திருப்தி" என்பார்கள். அப்போது இல்வலன் "வாதாபி! வெளியே வருவாய்" என்பான். வாதாபி வஞ்சகமாக ஆட்டு உடல் தரித்து வெட்டிச் சமைக்கப்பட்டு, சிராத்த போஜனத்துடன் பித்ருக்கள் திருப்திக்காக போஜனம் உண்டவர்களுடைய வயிற்றிலிருப்பான். இல்வலன் "வா!" என்றதும் வயிற்றிலிருந்த வாதாபி பிராமணருடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து விடுவான். இம் மாதிரி பல ரிஷிகள் மாண்டார்கள். வாதாபி தான் அடைந்த வரத்தின் நிபந்தனைப் படி ஆயுத மின்றியும் எதிர் நின்று எதிர்க்காமலும் ரிஷிகளை இவ்விதமாகக் கொன்று வந்தான்.

ஒருநாள் அகஸ்தியரை இந்த வஞ்சக முறையில் சிராத்தத்துக்கு இல்வலன் அழைத்தான். அவர்களுடைய சூழ்ச்சியின்படி வாதாபி அகஸ்தியருடைய வயிற்றுக்குள் சிராத்த போஜனத்துடன் மேஷ மாமிசமாகப் பிரவேசித்தான். அகஸ்தியருக்கு இது தெரியும். அவர் கணபதியை உபாசித்து அடைந்திருந்த சக்தியினால் அரக்கனை முற்றிலும் ஜீரணித்து விட்டார்.

"திருப்தியா?" என்று கேட்டான் இல்வலன்.

"ஆகா! திருப்தி!" என்றார் அகஸ்தியர்.

"வாதாபி, வெளியே வா!" என்றான் இல்வலன்.

அகஸ்தியர் சிரித்தார். "வாதாபி ஜீரணமாய்ப் போனானே" என்றார்.

இதைக் கேட்ட இல்வலன், "என் சகோதரனைக் கொன்றீரா?" என்று ரோஷத்துடன் அகஸ்தியர் பேரில் பாய்ந்தான். அகஸ்தியருடைய கோபப் பார்வையினால் அந்தக் கணமே இல்வலன் எரிக்கப் பட்டான்.

அகஸ்தியர் இருந்த இடத்தில் எந்த ராக்ஷசரும் வர மாட்டார்கள். அவர் மற்ற முனிவர்களுக்குப் பெருங் காப்பாக இருந்தார்.

* * *

இராமன் அகஸ்தியருடைய தம்பியின் ஆசிரமத்துக்குச் சென்று முனிவரைக் கண்டு ஆசி பெற்றுக் கொண்டு அகஸ்தியர் இருப்பிடம் சென்றான். தெற்கே சென்று அவர் ஆசிரமம் இருந்த இடத்தை அடைந்து தூரத்திலிருந்தே அந்தப் பிரதேசத்தின் காந்தியையும், மிருகங்களும் பறவைகளும் பயமின்றி விளையாடிக்கொண்டிருந்ததையும், பிராமணர்கள் பூஜைக்குப் புஷ்பம் கொய்து கொண்டிருப்பதையும் பார்த்து மகிழ்ச்சியடைந்தான்.

"லக்ஷ்மணா! நீ சென்று முனிவருக்குத் தெரியப் படுத்தி உத்தரவு பெறுவாய்" என்றான் ராமன்.

இளையவன் சென்று முனிவருடைய சீடன் ஒருவன் மூலம், "தசரதன் குமாரன் ராம சந்திரனும் தம்பியும் ஜானகியும் முனிவரின் ஆசியைப் பெற்று மேன்மையடைய வந்து காத்திருக்கிறார்கள்" என்று சொல்லி அனுப்பினான்.

அனுமதி பெற்றதுடன் முனிவரே எழுந்து அவசரமாகச் சக்கரவர்த்தித் திருமகனை வரவேற்றுக் கிரமப்படி உபசரித்து ஆலிங்கனம் செய்தார்.

"நீங்கள் சித்திர கூடம் வந்த போதே எனக்கு விஷயம் தெரிந்தது. எப்படியும் ஒரு நாள் நீங்கள் வருவீர்கள் என்று இவ்வளவு காலம் எதிர் பார்த்துக் கொண்டேயிருந்தேன். நீங்கள் எடுத்துக் கொண்ட விரதம் பூர்த்தியாகும் காலம் சமீபித்தது. இவ்விடம் நீங்கள் சுகமாக இருக்கலாம். இங்கே ராக்ஷசர்களுடைய தொந்தரவு இல்லை" என்றார்.

"முனிவருடைய ஆசி பெற்று நான் பாக்கியவான் ஆனேன்! ஆனால் நான் தண்டகாரண்ய ரிஷிகளுக்கு வாக்குத் தந்திருக்கிறேன். முனிவருடைய ஆசி பெற்றுக் கொண்டு நாம் தண்டகாரண்யம் திரும்ப வேண்டும்" என்றான் ராமன்.

"நீ சொல்லுவது சரியே!" என்று அகஸ்தியர் சொன்னார்.

பிறகு அகஸ்தியர் ராமசந்திரனுக்கு மகா விஷ்ணுவுக்காக விசுவகர்மா செய்த வில்லும், என்றும் குறையாத அம்புத் தூணியும், கத்தியும் தந்தார். "ராமனே, ராக்ஷசர்களை ஒழிப்பாயாக. முன் மகா விஷ்ணுவானவர் இந்த ஆயுதங்களைத் தந்தார். நீயும் இவற்றைத் தரித்து அவர்களை ஒழிப்பாயாக" என்று ஆசிர்வாதம் செய்தார்.

பிறகு அகஸ்தியரை யோசனை கேட்டுச் சக்கரவர்த்தித் திருமகன் பஞ்சவடியில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு அங்கே மிகுதியிருந்த வனவாச காலத்தைக் கழிப்பது என்று தீர்மானித்தான்.

"ராஜகுமாரர்களே, போய்வாருங்கள். சீதையை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அவள் காட்டில் வசிக்கத் தகாத ராஜகுமாரி. ராமனே, உன்னிடம் அவளுக்குள்ள பிரியால் கஷ்டங்களைப் பொருட்படுத்தாமல் வனவாசம் செய்து வருகிறாள். பெண்கள் சாதாரணமாக சுகத்தையே விரும்புவார்கள். கஷ்ட நிலையை விட்டு அகல்வார்கள். ஸ்திரீகளுடைய உள்ளம் மின்னலைப் போலச் சஞ்சல சுபாவமும் கத்தியைப் போன்ற கூர்மையும் கருடனையும் வாயுவையும் போன்ற விரைவும் பட படப்பும் கொண்டது. இவையெல்லாம் சாதாரணமாகப் பெண்களின் சுபாவத்திலுள்ள தோஷங்கள். இது ஈசுவர சிருஷ்டி. ஆயினும் சீதையினிடத்தில் இந்தத் தோஷங்கள் இல்லை. அருந்ததியைப் போன்றவள். ராமசந்திரனே! லக்ஷ்மணனுடனும் வைதேஹியுடனும் நீ எங்கே இருந்தாலும் அந்த இடம் அழகு பெறும். பஞ்சவடி மிக சுந்தரமான இடம். உணவுக்கு வேண்டிய பழமும் கிழங்கும் கிடைக்கும் இடம். அவ்விடத்தில் இருங்கள். கோதாவரி நதிக்கரையின் அழகைச் சீதை மிக அனுபவிப்பாள். சீதையையும் ரிஷிகளையும் அவ்விடம் நீ இருந்து கொண்டு ஜாக்கிரதையாகக் காப்பாற்றுவாயாக. தசரத சக்கரவர்த்தி உனக்கு விதித்த விரத காலம் முடிந்து வருகிறது. யயாதியைப் போல் தசரதனும் மூத்த மகனான உன்னால் கடைத்தேறினான்."

இவ்வாறு மகாஞானி அகஸ்தியர் ராம லக்ஷ்மணர்களையும் சீதையையும் மிக்க அன்புடன் திரும்பத் திரும்ப ஆசீர்வதித்துப் பஞ்சவடிக்கு அனுப்பினார்.

சோர்வைப் போக்கி சுறுசுறுப்பை அளிப்பது



# மைதீன் புகையிலை

காரம்·மணம் நிறைந்தது...

**E.S. மைதீன் & கோ.**
கும்பகோணம்

போன்: 41 தந்தி: "MYDEENCO"

உங்கள் பாதுகாப்புக்கு




எப்பொழுதும் கவனியுங்கள்

அசல் விக்ஸ் இன்ஹேலர் மட்டுமே அதை உடையது.

அடைத்த மூக்கைத் துரிதமாகச் சுத்தம் செய்கிறது!




விக்ஸ் இன்ஹேலர்

# இந்தியன் பாங்க், லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1907)



தலைமை ஆபீஸ்: "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்", வடக்கு பீச் ரோடு, மதராஸ்-1

தென் இந்தியாவில் எல்லா முக்கிய இடங்களிலும், பம்பாயிலும் புது டில்லியிலும் சப் ஆபீஸ்கள், கிளைகள் இருக்கின்றன.

**மூலதனம்**

| | | | |
|---|---|---|---|
| அங்கீகரிக்கப்பட்டது | ... | ரூ. | 1,00,00,000 |
| வழங்கப்பட்டது | ... | ரூ. | 72,00,000 |
| செலுத்தப்பட்டது | ... | ரூ. | 57,80,000 |
| ரிசர்வ் & இதர நிதிகள் | ... | ரூ. | 76,00,000 |
| டெபாஸிட்டுகள் | ... | ரூ. | 23·71 கோடிகள் |

எல்லாவிதமான பாங்கிங் அலுவல்களும் செய்யப்படும்

என். கோபால அய்யர், செக்ரடரி




## 12. துறவி வந்தார் !

கோயிலுக்குள் சென்று ஒளிந்து கொண்ட பிரபாகரனும் உமாவும் கோவில் தூண்களில் இருந்த சித்திர வேலைகள் அமைந்த சிற்பங்களைப் பார்த்து வியந்த வண்ணம் பிரகாரம் முழுவதும் ஒரு முறை சுற்றி வந்தார்கள். அது மிகப் பண்டைக் காலத்துக் கோவில்.

கோவிலுக்குச் சுவாமி தரிசனம் செய்ய வந்தவர்கள் எல்லோரும் விலையுயர்ந்த ஆடை அணிந்து கொண்டு அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மாதிரி யிருந்த பிரபாகரனையும் உமாவையும் பார்த்து வியந்தார்கள். ஆண்கள், பெண்கள், சிறுவர்கள், சிறுமிகள், குழந்தைகள், கிழவர்கள் இப்படிக் கூட்டம் கூட்டமாகக் கோவிலுக்குள் வந்து கொண்டிருந்தார்கள்.

"அண்ணா, இந்தக் கோவில் எவ்வளவு அழகாயிருக்கிறது, பார்த்தாயா! நம்முடைய மனசில் இருக்கும் வேதனைகள் எல்லாம் அடியோடு தீர்ந்து விட்டாற் போன்ற உணர்ச்சி உண்டாகிறது. நாம் இன்று இரவு இந்தக் கோவிலிலேயே தங்கி விட்டு நாளைக்குப் போனால் என்ன?" என்று கேட்டாள் உமா.

"உமா, நானும் அப்படித்தான் நினைத்தேன். நாம் அந்த வீட்டு வாசலில் கட்டி விட்டு வந்த இரண்டு குதிரைகளையும் இப்போது காணவில்லை, பார்த்தாயா? நம்மைத் தொடர்ந்து வந்த அந்தப் பொல்லாத குதிரைச் சேவகன் அந்தக் குதிரைகளை அவிழ்த்துக் கொண்டு மைதானத்துக்குப் போய்ச் சேர்ந்திருப்பான் என்று நினைக்கிறேன். நாம் கோவிலை விட்டு வெளியே போக வேண்டாம். மைதானத்திலிருந்து குதிரைச் சேவகர்கள் இந்த வழியாகத்தான் வருவார்கள். நாம் ஜாக்கிரதையாகத்தான் இருக்க வேண்டும்" என்றான் பிரபாகரன்.

"அண்ணா, அதோ அந்தத் தெப்பக் குளத்துக்குப் போய்க் கை, கால்களை அலம்பிக் கொண்டு வரலாமா?" என்று கேட்டாள் உமா.

பிரபாகரன், "சரி, வா போகலாம்!" என்று சொல்லி உமாவை அழைத்துக் கொண்டு குளத்தை நோக்கிப் போனான்.

அப்பொழுது சூரியன் நன்றாக அஸ்தமித்து விட்டது; இருட்டியும் விட்டது. தெரு விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. அந்தச் சமயம் கோவில் வாசலில் மூன்று குதிரைகள் வந்து நின்றன. ஒரு குதிரையின் மீதிருந்த வீரப்ப தேவன், "தோழர்களே, வழி முழுவதும் அவர்களைத் தேடிப் பார்த்தும் காணவில்லை. ஒரு வேளை இந்தக் கோவிலுக்குள் ஒளிந்து கொண்டிருப்பார்களோ என்று எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. நீங்கள் இருவரும் போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள்?" என்றான்.

இரண்டு சேவகர்களும் குதிரைகளை அங்கேயே விட்டுவிட்டு, கோவிலுக்குள்ளே போய்ப் பிரகாரம் முழுவதும் சுற்றி உமாவையும் பிரபாகரனையும் தேடினார்கள். அரசாங்க உடையுடன் சந்நிதிக்குள்ளே போய்த் தேடுவதற்கு அவர்களுக்கு மனம் வரவில்லை. கூடியவரையில் கவனமாய்ப் பார்த்துவிட்டு வெளியே வந்தார்கள். உமாவும் பிரபாகரனும் எங்குமே காணாமற் போகவே, இரண்டு சேவகர்களும் குளத்தங்கரைப் பக்கமாகப் பார்த்துக் கொண்டே போனார்கள். குளத்தின் நாலு புறமும் மின்சார விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. குளத்தங்கரைப் படிக்கட்டுகளில் பலர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். சிலர் ஆகார மூட்டைகளை அவிழ்த்து வைத்துச் சாப்





பிட்டுக் கொண்டிருந்தார்கள். சிலர் முகம், கை, கால் கழுவிக் கொண்டிருந்தார்கள்; இன்னும் சிலர் படிக்கட்டுகளில் நின்று வண்ணம் கைகூப்பி, பகவானைத் தியானம் செய்து கொண்டிருந்தனர். இம்மாதிரி ஜனக் கூட்டம் காரணமாகக் குளத்தங்கரை கலகலப்பாக இருந்தது. சேவகர்கள் குளத்தங்கரை முழுவதும் சுற்றிச் சுற்றி வந்தார்கள். அவர்கள் கிடைக்கவில்லை.

பிறகு சேவகர்கள் இருவரும் கோவில் வாசலில் இருந்த வீரப்ப தேவனிடம் சென்று, "அவர்களைக் கோவிலில் காணவில்லை. நாம் போகலாமா?" என்று பணிவுடன் கேட்டார்கள்.

வீரப்ப தேவன் மனக் குழப்பத்துடன் சம்மதித்துக் குதிரை மீது ஏறினன். சேவகர்களும் தங்கள் குதிரைகளில் ஏறிக் கொண்டு அவனுடன் புறப்பட்டார்கள். அவர்கள் வெகு தூரம் சவாரி செய்து அரண்மனை எல்லையை அடைந்தார்கள். அரண்மனையை நெருங்கியதும் வீரப்ப தேவன் அவர்களை விட்டுப் பிரிந்து அரண்மனைக்கு நேரே செல்லும் பாதையில் குதிரையைச் செலுத்தினன்.

அரண்மனையில் வீரப்பதேவன் அதிக நேரம் இருக்கவில்லை. அரசனுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, கோபமும் ஏமாற்றமும் கலந்த முகத்துடன் வெளியே வந்து குதிரையின் மீது ஏறிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டான்.

வீரப்பதேவன் போய்ச் சிறிது நேரத்துக்கெல்லாம் ராஜகுரு வித்யாசாகரர் மெதுவாக அடிமேல் அடி வைத்துக் கொண்டு அரண்மனைக்குள் நுழைந்தார்.

"வாருங்கள்! வாருங்கள்!" என்று வித்தியாசாகரரை மிகவும் அன்புடன் வரவேற்று உபசரித்தான் வீரசிம்மன். அவர் வந்து உட்கார்ந்தார்; அரசனும் அவர் எதிரில் உட்கார்ந்தான்.

"அரசே, நான் வரும்போது ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தீர்களே!" என்றார்.

"ஒன்றுமில்லை. உங்களுக்குத் தெரியாதா? எதைப் பற்றி நான் யோசனை செய்து கொண்டிருப்பேன் என்று? — பிரபாகரனையும், உமாவையும் பற்றித்தான். அவர்கள் கிழவியின் பாதுகாப்பில் வைக்கப்பட்டிருந்த பொழுது நிம்மதியாக இருந்தேன். அவர்கள் அதை விட்டுத் தப்பித்துக் கொண்டதிலிருந்து எனக்கு மன நிம்மதியே இல்லை. தினந்தோறும் அவர்களைப் பற்றித் திடுக்கிடும்படியான சமாசாரம் தான் கிடைக்கிறது!" என்றான் அரசன்.

"அரசே, எதற்காக உங்கள் மனம் நிம்மதியில்லாமல் இருக்க வேண்டும்? அவர்களைத்தான் குன்றிமணித் தோட்டத்தில் இரும்புக் கூண்டில் அடைத்தாய் விட்டது என்றும், வேறு இடத்துக்கு அப்புறப்படுத்தப் போவதாகவும் சென்னீர்களே?" என்றார் வித்தியாசாகரர்.

"அடாடா, உங்களுக்கு அதற்குப் பிறகு நடந்த விஷயங்களே தெரியாதா?"

"ஆமாம், நான் அன்று உங்களிடம் வந்ததுதான். அதற்குப் பிறகு உங்களைச் சந்திக்கச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை."

"அவர்கள் அன்று இரவே கம்பிகளை உடைத்துக் கொண்டு தப்பி விட்டார்கள். அதற்குப் பிறகு அவர்களை மறுபடியும் சிறைப்படுத்தவோ, அல்லது அவர்கள் இருவரையும் தனித் தனியாகப் பிரித்து வைக்கவோ, அவர்களிடமிருந்து அந்தத் தங்க மாம்பழத்தை அபகரிக்கவோ செய்த ஏற்பாடுகள் ஒன்றும் இது வரையிலும் பலிக்கவில்லை" என்று அரசன் சோகத்துடன் சொன்னன்.

"அது சரி, அவர்கள் எப்படிப் போனலும் போகட்டும், அந்தத் தங்க மாம்பழம் அவர்களிடம் ஜாக்கிரதையாக இருக்கிறதா?" என்றார் ராஜகுரு.

"இருக்கிறது என்றுதான் கேள்வி!"

"நம்மிடம் அந்த மாம்பழம் வந்து சேரும் வரையில் அவர்கள் அதை ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ள வேண்டுமே! தங்க மாம்பழம் தவறிக் கீழே விழுந்து விட்டால் என்ன நேரிடும் என்பது பற்றி உங்களுக்குத் தெரியும் அல்லவா?" என்றார் வித்தியாசாகரர்.

வித்தியாசாகரின் வார்த்தைகளைக் கேட்ட அரசன், "தெரியும், தெரியும்! அப்படி ஏதாவது விபரீதமாக எந்தச் சமயத்திலும், எந்தக் காரணத்தினாலும் ஏற்படக் கூடாது என்று எல்லாருக்கும் எச்சரிக்கை செய்திருக்கிறேன்" என்றான்.

"'தங்க மாம்பழமும் நம்மிடம் கிடைக்காமல் அத்துடன் அவன் கல்லறைத் தீவுக்கும் சென்று விட்டால்......!' என்று நினைக்கும் போது என் இருதயப் படபடப்பு அதிகமாகின்றது. ஆனால் அவர்கள் எப்படிப் போக முடியும்? காடுகளைத் தாண்டவேண்டும், ஏரியைக் கடக்க வேண்டும், கல்லறைத் தீவிலுள்ள நாயையும் சந்திக்க வேண்டும்! இவைகளெல்லாம் எளிதில் நடக்கக் கூடிய காரியமா? இப்படி நினைக்கும் பொழுதே கொஞ்சம் சாந்தி உண்டாகிறது" என்றான் அரசன்.

"எல்லாம் ஈசன் செயல். நடப்பது நடந்தே தீரும். நான் சென்று வருகிறேன். பிறகு வந்து பார்க்கிறேன்" என்று சொல்லி வித்தியாசாகரர் வெளியேறினார்.

* * *

தெப்பக்குளத்தில் கைகால்கள் கழுவி விட்டு மெதுவாக படிக்கட்டுகளைக் கடந்து நடந்து வந்து கொண்டிருந்த பிரபாகரனும், உமாவும் சந்தோஷமாகக் குளத்தின் மேல்படி ஒன்றில் உட்கார்ந்து காற்று வாங்கிக் கொண்டிருந்தார்கள். அடிக்கடி பிரபாகரன் தங்க மாம்பழம் ஜாக்கிரதையாக இருக்கிறதா என்று பையைத் தடவிப் பார்த்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் குளத்தங்கரைப் படிக்கட்டுகளில் உட்கார்ந்திருந்தவர்கள் ஒவ்வொருவராகப் போய் விட்டார்கள்.

"வா, உமா! நாம் ஏதாவது ஒரு இடம் பார்த்துப் படுத்துக் கொள்ளலாம்" என்றான் பிரபாகரன்.

அப்பொழுது இரவு மணி பதினொன்று இருக்கும். கோவிலில் அர்த்தஜாம பூஜை முடிந்து விட்டது என்பது கோவில் மணி 'டாண், டாண்' என்று அடித்ததிலிருந்து தெரிய வந்தது. எங்கும் நிசப்தம் குடிகொண்டது. கோவில் யானையின் கழுத்தில் கட்டியிருந்த மணி யோசையும், அடிக்கடி வௌவால்கள் இங்குமங்குமாகப் பறந்து செல்லும் சலசலப்புச் சத்தங்களைத் தவிர அப்பொழுது வேறு சத்தம் எங்குமில்லை.

கோவில் முழுவதும் நிலாவைப் போல மின்சார விளக்குகள் ஒளிவீசிக் கொண்டிருந்தன. கோவில் பிரகாரங்களிலும் மற்றைய மண்டபங்களிலும் ஜனங்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

பிரபாகரனும் உமாவும் படுத்துக் கொள்ள இடம் தேடினார்கள். பிரதான வாசல் வழிக்கு அருகிலிருந்த ஒரு சிறிய திண்ணை தான் காலியாக இருந்தது.

அந்தத் திண்ணையிலேயே இரண்டு ஓலைக் கீற்றுகள் இருந்தன. அதைக் கீழே போட்டுக் கொண்டு பிரபாகரனும் உமாவும் படுத்துக் கொண்டார்கள். அவர்கள் படுத்துக் கொண்ட கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஒரு வயோதிகர் கோவிலின் சிறிய கதவின் வழியாக உள்ளே நுழைந்தார். நரைத்த மீசையும், தாடியும் இருந்தன. தலையெல்லாம் சடை விழுந்திருந்தது. ஒரு கையில் சிறிய தடியும் மற்றொரு கையில் ஒரு கமண்டலமும் இருந்தன. அவர் ஒரு முறை படுத்துக் கொண்டிருந்தவர்களைக் கூர்ந்து கவனித்தார். அப்படியே பிரதான வாசல் பக்கம் மறுபடியும் வந்தார். அப்போது அவருடைய பார்வை திண்ணையில் படுத்துக் கொண்டிருந்த உமா, பிரபாகரன் மீது விழுந்தது. மெதுவாக அவர்கள் அருகில் போய் நின்றார்.

பிறகு, "இங்கு யார் படுத்திருக்கிறது?" என்று கேட்டார். பதில் இல்லை. மறுபடியும், உரக்கக் கூப்பிட்டார். அப்பொழுதும் பதில் இல்லை. பிறகு அவர், தம்முடைய கையிலிருந்த தடியினால் திண்ணையில் தட்டிவிட்டு "யார் படுத்துக் கொண்டிருப்பது?" என்று கேட்டார். (தொடரும்)

## வாடாத தனி மலர்!

கற்பனையே! காவியமே! கணம் ஒவ்வொன்றாய்க்
கருக்கொள்ளும் சிந்தனையே! கவின்பெற் றோங்கி
அற்புதமாம் தமிழ்மொழியே! அமுதத் தேனே!
ஆரேதான் நின்துயரை ஆற்ற வல்லார்!

பாரதியார் கவிப்பெருமை பாரில் உள்ளார்
பற்பலரும் அறிதற்குப் பணிகள் செய்தார்!
ஊரறியக் கலைஞர்களை ஊக்கி இந்த
உலகெல்லாம் அறிவித்த உண்மை யாளர்!

எத்தனையோ பெருங்கதைகள் எழுதி வைத்தும்
எண்ணரிய சிறுகதைகள் இயற்று வித்தும்
வைத்தபெரு மதிப்புலவர் வரிசை யுள்ளே
வாடாத தனிமலராய் வாழ்வார் கல்கி!

—பாரதியன்

# ஹாஸ்யக் களஞ்சியம்








"உங்களைத்தானே!...... தனி ஆவர்த்தனத்தைச் சீக்கிரம் முடியுங்கள்! எல்லோரும் போய் விட்டார்கள்!"






"இந்த அகராதியை எனக்கு அன்பளிப்பாகக் கொடுத்ததற்கு உம்மைப் பாராட்ட எனக்கு வார்த்தையே அகப்படவில்லை!"

"சாவகாசமாய் அகராதியைப் பார்த்துச் சொல்லுங்கள்!"



"எந்த வேளையில் போனேனோ அவர் அப்படியே என்னைச் சாப்பிட்டு விடுவது போல் பார்த்தார்!"

"டிபன் வேளையில் போயிருப்பீர்கள்!"





"நூறு தடவை குறுக்கே போய்விட்டு வர்றயே? கூஜாவில் தடுக்கி விழுந்தவுடன் அதை உள்ளே எடுத்து வைத்துவிடு!"


















"பேனா வாங்கிக் கொள்ளுங்க!"
"எனக்கு எழுதத் தெரியாதுங்க!"
"பரவாயில்லேங்க! இதுவும் எழுதாது. வாங்கிக்குங்க!"



"போதும்! நீங்கள் நாய்க் குட்டிக்கு இவ்வளவு செல்லம் கொடுக்க வேண்டாம்!"



"நீங்கள் மாத்திரம் அம்மாவின் காரியங்களைப் பழக்கம் பண்ணிக் கொண்டிரா விட்டால், நான் இப்படி வேலை செய்ய வேண்டியிராது!"



# நினைவுத் திரையிலே

ஆர். சூடாமணி

அந்த உயில் விஷயம் தான் குடும்பத்தில் யாருக்கும் புரியவில்லை.

வக்கீல் அன்று சமாசாரத்தைச் சொன்ன போது கற்பகத்துக்குத் தலையில் இடி விழுந்தாற்போலிருந்தது. அப்பா இப்படி ஒரு காரியம் செய்வாரென்று அவள் கனவிலும் நினைக்கவில்லை.

லட்சாதிபதி ராமநாதன் இறந்து பத்து நாட்களாயிருந்தன. அவருக்குப் பின் அவர் சொத்தெல்லாம் அவரது ஒரே சந்ததியான கற்பகத்துக்குத்தான் வருமென்று எல்லோரும் நினைத்திருந்தார்கள். ராமநாதன் உலகில் எல்லோரையும்விட அதிகமாய் விரும்பியது தம் மகளை. அடுத்தபடி அவர் ஆசை பணத்தின் மேல். இது உலகமறிந்த விஷயம்.

அதனால்தான் அவர் திடீரென்று கடைசியாகச் செய்த காரியம் எல்லோரையும் திடுக்கிடச் செய்தது. தம் ஆஸ்தியையெல்லாம் ராமநாதன் இறப்பதற்கு முந்திய தினம் தமது தங்கையின் மகள் சிவகாமிக்கு எழுதி வைத்து விட்டார்.

கற்பகம் முகத்தில் சிடுசிடுப்புடன் உட்கார்ந்திருந்தாள். எதிரில் ஒரு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த வக்கீலின் முகத்தில் ஆழ்ந்த அமைதியைத் தவிர வேறொன்றும் காணப்படவில்லை.

"உங்களுக்கு ஒன்றும் ஆச்சரியமாயில்லை போலிருக்கிறதே, ஸார்! ஒரு வேளை அப்பா உங்களிடம் முன்பே ஏதாவது சொல்லியிருந்தாரோ?" என்றாள் கற்பகம்.

"அதெல்லாம் ஒன்றுமில்லையம்மா. மிஸ்டர் ராமநாதன் கடைசியில் என்னிடம் விஷயத்தைச் சொன்னபோது எனக்கு ஏற்பட்ட ஆச்சரியம் கொஞ்ச நஞ்சமல்ல" என்றார்.

"இப்போது எனக்கு ஒன்றும் நஷ்டமாய் விடவில்லை. வயது எனக்கு நாற்பத்தைந்து ஆகிறது. இவ்வளவு நாள் அப்பா பணத்தைக் கொண்டா பிழைத்தேன்? என் புருஷரே பெரிய பணக்காரர்..."

அவள் சொன்னதைக் கேட்டு வக்கீல் விசித்திரமாகப் புன்னகை செய்தார்.

"எனக்கு ஆச்சரியமெல்லாம் திடீரென்று சிவகாமிக்குப் பணத்தை ஏன் கொடுத்தார் என்பதுதான். இவ்வளவு வருஷங்களாக அப்பா அவளைப் பற்றி அதிகமாக நினைக்கக்கூட இல்லை. ஆதியில் அவளைக் கொஞ்ச நாள் வீட்டோடு வைத்துக் கொண்டு கல்யாணம் செய்து கொடுத்தாரே, அதற்குப் பிறகு அவளை மறந்து விட்டார் என்றே சொல்லலாம். சிவகாமியும் நானும் கல்யாணமாகிப் புக்ககம் போன பிறகு அப்பா பெரிய வியாபாரத்தில் இறங்கிப் பல வருஷங்கள் வெளி தேசங்களில் இருந்து இப்போது ஒரு பத்து வருஷங்களாகத் தாம் திரட்டிய பெரிய ஐசுவர்யத்துடன் இங்கு வந்து தங்கியிருக்கிறார். இனி, சாகிற வரையில் என்னையும் என் குழந்தைகளையும் பார்த்துக் கொண்டு நிம்மதியாய் இருக்கப் போவதாய்ச் சொன்னார். சிவகாமியைப் பற்றி ஒரு கேள்வி கூடக் கேட்கவில்லை. திடீரென்று இரண்டு மாதங்களுக்கு முன் ஒரு நாள் சிவகாமி இந்த ஊருக்கு வந்திருப்பதாய்ச் சொன்னார்.



வாட்டர்மேன் பேனுக்களின் விற்பனை உரிமையாளர்களான ரைட்விட்ஸ் கம்பெனியைச் சேர்ந்த ஸ்ரீ டி. டி. வாசு இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் விரிவாகச் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டுச் சமீபத்தில் இந்தியாவுக்குத் திரும்பினார்.

அப்போதிலிருந்தே அவர் கலகலப்பு எங்கேயோ மறைந்து போய் விட்டது. இப்போதோ திடீரென்று..."

"உங்களுக்குத்தான் பணத்துக்குக் குறைவில்லை. புருஷன் மட்டுமின்றி இரண்டு பிள்ளைகள் வேறு சம்பாதிக்கிறார்கள். சிவகாமி அம்மாளுக்கோ ஐந்தும் பெண்கள். கஷ்ட தசை. அதனால் அவளுக்கு உதவி செய்ய வேண்டுமென்று..."

"இதோ பாருங்கள், ஸார்! அப்பாவை நம் இருவருக்கும் நன்றாகத் தெரியும். அவர் கெட்டவரல்லர். மனமறிந்து ஒருவரைக் கெடுக்க மாட்டார். ஆனால் பணத்தை இப்படி ஒரேயடியாய்த் தானம் செய்யக் கூடியவர் அவரில்லை......"

அந்தச் சமயம் மதுசூதனன் அறைக்குள் நுழைந்தான். அவன் சுமார் இருபத்தைந்து வயதுள்ள ஒரு அழகிய வாலிபன்.

"தாத்தா விஷயம்தானே பேசுகிறீர்கள்?" என்று கேட்டவாறே அவன் வந்து ஒரு சோபாவில் உட்கார்ந்து ஒய்யாரமாய்ச் சாய்ந்து கொண்டான்.

"அவருக்குக் கடைசி காலத்தில் திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டது, வேறொன்றுமில்லை!"

வக்கீல் சிரித்துக் கொண்டே, "பணத்தைக் கொடுப்பவன் பைத்தியக்காரன், அப்படித்தானே?" என்றார்.

"தாத்தா தம் பணத்தைத்தான் கொடுக்கவில்லையே தவிரக் குணத்தை எங்களிருவருக்கும் கொடுத்திருக்கிறார். அதில் என்ன தவறு என்று நான் கேட்கிறேன்! பணமில்லாதவன் எதற்கு உபயோகம்? அதனால்தான் தாத்தா எவ்வளவு சொல்லியும் அம்மாவின் அத்தை பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள எனக்கும் இஷ்டமில்லை; அம்மாவுக்கும் இஷ்டமில்லை" என்றான்.

கற்பகத்துக்கு அவமானத்தால் முகம் சிவந்தது. சட்டென்று வக்கீல் பக்கம் திரும்பி, "நீங்களே சொல்லுங்கள். மதுசூதனனுக்கு வேறு இடத்தில் ஏற்கனவே பெண்ணை நிச்சயம் செய்தாகி விட்டது. அப்பா அதை நிறுத்திவிடச் சொன்னால் முடியுமா? நாம் வார்த்தை தவறலாமா?" என்று கேட்டாள்.

"கூடவே கூடாது" என்றான் மதுசூதனன். "அதுவும் நிச்சயித்த பெண் விமலாவைப் போல் பணக்காரியாய் இருக்கும்போது வார்த்தையை நிறைவேற்றியே தீருவேன்."

அந்தச் சமயம் சிவகாமி வாசலில் வருவதைப் பார்த்த கற்பகம் சட்டென்று எழுந்து உள்ளே சென்று விட்டாள். மதுசூதனனும் எழுந்தான், "ராத்திரி ஒரு ஊருக்குப் போகிறேன், ஸார். சாமான்களை எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறினான்.

"அடிக்கடி ஊரை விட்டுப் போகிறாயல்லவா நீ?" என்றார் வக்கீல்.

"கம்பெனி வேலையல்லவா? வேலை விஷயமாய் அடிக்கடி நான் வெளியூர் போக வேண்டியதாக இருக்கிறது!"

சிவகாமி உள்ளே வந்தபோது வக்கீல் மட்டுமே அவ்வறையில் இருந்தார். வறுமையினாலும் அளவில்லாத துயரத்தினாலும் நலிந்து கூனிக் குறுகி நின்றாள் சிவகாமி.

"உட்காருங்கள்!" என்றார் வக்கீல்.

அவள் உட்கார்ந்து குழி விழுந்த கண்களால் அவரைப் பார்த்தாள். "ஸார், காலையில் வந்து விஷயத்தைச் சொன்னீர்களே!"

"ஆமாம், உங்கள் மாமாவின் சொத்தெல்லாம் உங்களுடையது" என்றார் வக்கீல். சிவகாமியின் முகத்தில் சோகக்குறி இன்னும் வலுப்பட்டது.

"இது என்ன பரிகாசம்? எனக்கு எதற்குப் பணமும் காசும்? கற்பகம் அவர் மகள். அவர் ஆஸ்தி அவளைத்தானே சேர வேண்டும்!" என்றாள் சிவகாமி.

"ஆனால் ராமநாதன் உங்களுக்குத்தானே கொடுத்திருக்கிறார்?"

துயரமிகுதியில் சிவகாமி முறுவலித்தாள்; "நான் என்றும் ஏழையாய்த்தானிருந்தேன். ஆனால் எங்கள் குடும்பத்தில் ஒரு நிறைவு இருந்தது. இப்போதோ..." அவள் குரல் கம்மியது. "என் குழந்தை போய் விட்டாள் ஸார். குழந்தைகள் தான் எங்கள் ஆஸ்தி. அந்த விதத்தில் நான் இப்போது ஏழையினும் ஏழையாய் விட்டேன். நீரஜாவின் பேச்சுதான் என்ன இனிமையாயிருக்கும்! அந்த இனிமைக்காகவே அவள் அப்பாவும் நானும் அவளைச் செல்லமாக "சுபாஷிணி" என்று கூப்பிடுவோம். அந்த இனிமை எங்கள் வீடெங்கும் ஒவ்வொரு மூலையிலும் கேட்பது போலிருக்கிறதே! இந்தத் துயரை

கருடனை பறவைகளுக்கு ராஜா வென்று கூறுவது வழக்கம். அது சீர வனப்புக்கும் வேகமாகப் பறப்பதற்கும் வட அமெரிக்காவில் பெயர்போனது. கருடனுக்கு அளவற்ற விசை வேகமுண்டு.

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## உங்களுக்கு விசையின் வேகத்தை... துரிதமாக அளிக்கிறது!



கடுமையான டென்னிஸ் விளையாட்டைக் காட்டிலும் தினசரி அலுவல்களுக்கு அதிகச் சக்தி வேண்டும். ஆகையால் தான் ஒவ்வொரு ஸ்திரீக்கும் தினசரி ஆகாரத்தோடுகூட வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் அளிக்கும் அதிகப்படி போஷணை தேவையாயிருக்கிறது. அது உங்களுடைய தினசரி வாழ்க்கைக்குத் தேவையான விசை வேகத்தை யளிக்கிறது.

தினசரி உட்கொண்டால், நாவிற்கினிய வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் ஓர் ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும். அது உங்களுடைய தேகம் முழுவதிலும் அதிகப்படி சக்தி உண்டாகச் செய்கிறது. களைப்பு, இருமல், ஜலதோஷம் முதலியவைகளை எதிர்க்கும் வன்மையை யளிக்கிறது. புதிய தாய்மார்களுக்கும், நோயிலிருந்து சொஸ்தமடைபவர்களுக்கும் வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் நல்ல ஆரோக்யத்தை யளிக்கிறது.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உட்கொண்டு புதிய, மகிழ்வுறும் ஸ்திரீயாயிருங்கள்... உங்கள் குடும்பத்தினர் அனைவருக்கும் ஒரு ருஜுவான ஆரோக்கிய டானிக்காகும்!




## ஆரோக்கியத்தைத் தரும் வாட்டர்பரீஸ் காம்பவுண்டை உங்களை சௌக்யமாகவைக்க உட்கொள்ளுங்கள்

NAS 267

# INDIGESTION

பிலிப்ஸ் தயாரிப்பான மில்க் ஆப் மக்னீஷியா உதவியால் அற்புதமாக நிவாரணம் பெறுங்கள். மிகவும் துரிதமாக, திறமையாக செயலாற்றும் உப்புச் சேர்க்கை கொண்ட பிலிப்ஸ், வயிற்றில் அமித அமிலத்தைச் சமனப்படுத்துகிறது. உடனே வலியையும், வேதனையையும் நிவர்த்திக்கிறது! இருந்த இடத்திலேயே நிவாரணத்திற்கு பலபேர் இனிய மணம் நிரம்பிய வில்லைகளை விரும்புகின்றனர். ஒவ்வொரு பிலிப்ஸ் வில்லையும் ஒரு தேக்கரண்டி திரவத்துக்கு சமமானதும் அதே திறமையும் வாய்ந்தது.




428

**MILK OF MAGNESIA**

A PRODUCT OF

# PHILLIPS

---

## EMPIRE'S

### REPORT OF PROGRESS

in 1953

| | | |
|---|---|---|
| NEW BUSINESS | ... ... | Rs. 3,22,06,250 |
| TOTAL ASSETS | ... ... | Rs. 11,97,50,963 |
| TOTAL CLAIMS PAID | ... | Rs. 13,99,78,843 |




Points from the Administrator's Report:

★ **Nearly 70 per cent of total Assets invested in Government Securities**

★ **Good prospects of handsome Bonus in the Valuation as at 31st December '54**

○●○

# THE EMPIRE OF INDIA
## LIFE ASSURANCE COMPANY LIMITED

(ESTD. 1897)

Head Office: EMPIRE HOUSE, D. NAOROJI ROAD, BOMBAY

BRANCHES ALL OVER INDIA

நான் எப்படி மறப்பேன்?'' என்று முகத்தைக் கைகளால் மூடிக்கொண்டு சற்று நேரம் மௌனமாய் அழுதாள் சிவகாமி. பிறகு கண்களைத் துடைத்துக் கொண்டு தலையை நிமிர்த்தினள்.

''சின்ன வயதில் அவருடன்தான் இருந்தீர்கள், இல்லையா?'' என்று வக்கீல் கேட்டார்.

கலைந்திருந்த தன் நரைமயிரைச் சரிப்படுத்திக் கொண்டே சிவகாமி பழைய சம்பவங்களில் நினைவைச் செலுத்தினள்.

''ஆமாம், என் தந்தை நான் பிறந்து சில மாதங்களிலேயே போய்விட்டார். ஐந்தாவது வயதில் தாயும் போய் விட்டாள். போகும் போது அவள் என்னை மாமாவிடம் ஒப்படைத்து 'இவளையும் ஒரு மகளாய் நினைத்துக் காப்பாற்றித் தகுந்த இடத்தில் கல்யாணம் செய்து கொடு' என்று சொன்னளாம். மாமா என்னமோ எனக்குப் பார்த்துப் பார்த்துத்தான் செய்தார். என் அதிர்ஷ்டம் இப்படியிருந்தால் அவர் என்ன பண்ணுவார், பாவம்! எனக்குப் பணம் வேண்டாம், மாமாவும் அவர் அன்பும்தான் வேண்டும்!''

அவள் உதடுகள் துடிக்க ஆரம்பித்தன. வக்கீல் அவள் மனத்தை வேறு விஷயங்களில் திருப்பும் பொருட்டு, ''எவ்வளவோ வருஷங்களுக்குப் பிறகு உங்கள் மாமாவை இரண்டு மாதங்களுக்கு முன்பு சந்தித்தீர்கள், அல்லவா?'' என்றார்.

''ஆம். இரண்டு மாதங்களுக்கு முன்பு, ஒருநாள் சந்தித்தேன்.''

சிவகாமி தரையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். இரண்டு மாதங்களுக்கு முன் ஒரு நாள். அந்த நாள் இப்போது அவள் உள்ளத்தில் மறுபடி தோன்றியது.

★

சிவகாமி அன்று தெருவில் நடந்து போய்க் கொண்டிருந்தாள். அப்போது தனக்கு எதிரே ஓர் உருவம் வருவதைக் கண்டாள்.

அது ஒரு கம்பீர உருவம். ஆறு அடி உயரமும் அதற்குத் தகுந்த பருமனும் கொண்டு முதுமையிலும் காண்பவரைக் கவரும் கம்பீர உருவம். சிவந்த நிறம். சிவப்பழம் போல் நெற்றியில் விபூதியுடன் விளங்கிய தேஜஸ்வி.

சிவகாமி சற்று நேரம் அந்த உருவத்தை உற்றுப் பார்த்தாள். பிறகு ஆவலாய் ''மாமா!'' என்று கூவினள்.

ராமநாதன் அவளைப் பார்த்தார். ''யார் அம்மா நீ?'' என்று கேட்டார்.

''தெரியவில்லையா மாமா? நான் தான் சிவகாமி'' என்றள்.

''என்ன, சிவகாமியா?'' என்று கேட்டுக் கிழவர் அவளைக் கூர்ந்து நோக்கினர்.

''ஆமாம். சிவகாமிதான், மாமா!''

''என்னம்மா இது? ஏனிப்படி கிழவி போல் இருக்கிறாய்? சௌக்கியமாயிருக்கிறாயா?'' அவர் முகம் மட்டுமல்ல, குரலும் திடுக்கிட்டது போல் இருந்தது.



''சௌக்கியம்தான், மாமா. நீங்கள்?''

''நான் சௌக்கியந்தான். நீ எங்கே இருக்கிறாய்? உன் தகவல் ஒன்றுமே தெரியவில்லையே! வீட்டுக்கு வா, உன்னோடு எவ்வளவோ பேச வேண்டும். ஏனிப்படி உரு மாறிப் போய் விட்டாய்? இந்த ஊரில் நீ இருப்பதே எனக்குத் தெரியாதே...''

''போன வாரம்தான் வந்தேன். என் பெண்ணுக்கு இங்கே மாற்றலாகியிருக்கிறது.''

''பெண்ணுக்கா?''

''ஆமாம். என் புருஷன் சாதாரண வேலையில்தானே இருந்தார்? எங்கள் இருவருக்கும் சரியாயிருந்தது. குழந்தைகள் பிறந்த பிறகு...ஐந்து பெண்கள் மாமா......அவர் மிகவும் உழைக்க வேண்டி வந்து விட்டது. இராப்பள்ளி ஒன்றில் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். ஒரு நாள் திரும்பி வரும் போது கார் விபத்தில் அகப்பட்டு அந்த விபத்தில் அவர் கால்கள் இரண்டும்......சரியான அடி...படுத்த படுக்கையாகி விட்டார். எப்படியோ கஷ்டப்பட்டு வேலைசெய்து குழந்தைகளை வளர்த்தேன். இரண்டொரு நல்ல மனிதர்கள் உபகாரம் செய்தார்கள். பெரிய பெண்ணுக்கு எப்படியோ கல்யாணம் செய்தேன். சாதாரண இடம்தான். ஏதோ இருக்கிறாள். இரண்டாவது பெண் நீரஜா—இப்போது அவள் சம்பாத்தியம்தான். பள்ளிக் கூடத்தில் சொல்லிக் கொடுக்கிறாள். மூன்று பெண்கள் படிக்கிறார்கள். அவர் படுத்தபடியே தம்மாலான கைத்தொழிலைச் செய்கிறார். நானும் உழைக்கிறேன். ஏதோ நீங்கள் ஒரு குணசாலிக்கு என்னைக் கொடுத்ததினால் குடும்பம் ஒழுங்காக நடக்கிறது...''

கிழவருக்கு என்ன வந்து விட்டது? அவள் பேசப் பேச தன் முன்னிருந்த உருவம் மாறி வருவதாக உணர்ந்தான். அந்தத் தெளிவு மறைந்து திடீரென்று ஒரு வேதனை வந்து நின்றது. அவர் கண்களில் இருந்த அமைதிக்குப் பதில் ஒரு சலனம்.

அதன் பிறகு அவர் அவள் வீட்டுக்கு வந்தார். இரண்டு அறைகள் கொண்ட ஒரு பகுதியில் அந்தப் பெரிய குடும்பம் வசிப்பதைக் கண்டார். குழந்தைகள் எலும்பும் தோலுமாய்க் கிழிந்த துணிகளை ஒட்டித் தைத்து அணிந்து நிற்கும் காட்சியைக் கண்டார். கிழவி போலாகி விட்ட தம் மருமகள் அன்போடு கொண்டு வந்து வைத்த தண்ணீர்க் காப்பி அவர் தொண்டையில் இறங்கிய போது அது அவர் தொண்டையை இறுகப் பிடிப்பது போலிருந்தது.

பிறகு அவர் அடிக்கடி அவள் வீட்டுக்கு வந்து போக ஆரம்பித்தார். அவர் கண்களில் இப்போதெல்லாம் நிரந்தரமாய்க் குடி கொண்டு விட்ட விசித்திரக் கிளர்ச்சியை ஒருவராலும் ஆழங் காண முடியவில்லை.

ஒருநாள் அவர் "சிவகாமி! நீ கவலைப் படாதே. என் பேரன் மதுசூதனனுக்கு நீரஜாவை முடித்து வைக்கிறேன்" என்றார். அவர் குரலில் பரபரப்புத் தொனித்தது.

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், மாமா. உங்கள் அன்பு ஒன்றே எனக்குப் போதும்...." என்றாள் சிவகாமி.

"அப்படிச் சொல்லாதே யம்மா! இன்னும் ஒரு தரம் எனக்குச் சந்தர்ப்பம் கொடு. ஈடு செய்கிறேன்......"

வக்கீல் முன் உட்கார்ந்திருந்த சிவகாமியின் கண்களில் மறுபடியும்கண்ணீர் நிறைந்து வழிந் தோடியது. "கடைசியில் அந்தப் பெண் யாரையும் மணந்து கொள்ளவில்லை. சுமார் மூன்று வாரங்களுக்கு முன் ஒரு நாள் மாலை நீரஜா வெளியில் போயிருந்தவள் வெகு நேரம் கழித்துத் திரும்பி வந்தாள். எங்கோ கீழே விழுந்து அவள் தலையில் ஒரு பக்கத்தில் நல்ல ஊமை அடி. உன்மத்தம் பிடித்தவள் போல் உட்கார்ந்திருந்தாள். ஒரு வார்த்தை பேசவுமில்லை, மற்றவர் பேசியதைப் புரிந்து கொள்ளவுமில்லை. நான்கு நாட்கள் அப்படியே படுக்கையில் கிடந்தாள். அதன் பின்......கண்ணை மூடி விட்டாள்!" என்று அலறினாள் சிவகாமி. "எங்கே விழுந்தாளோ, என்ன ஆயிற்றோ, கடைசியில் போய்விட்டாள்...என் இதயம் இன்னும் துடிக்கிறதே...ஓடி வந்து மாமாவிடம் சொல்லிக் கதறினேன். அவர் கைகள் இன்னும் என்னைச் சுற்றியிருப்பது போலவே தோன்றுகிறது. அவர் உடல் எப்படி நடுங்கியது! அவர் அழுகை எப்படி இதய ஆழத்திலிருந்து பீறிக் கொண்டு கொந்தளித்து வந்தது! துயர மிகுதியில் ஏதேதோ அர்த்தமில்லாமல் கதறினார். "ஐயோ குழந்தை, இந்த வேதனையைத் தாங்க முடியவில்லையம்மா...என்னை மன்னித்து விடு, சிவகாமி... மன்னித்தேன் என்று சொல்லு...பச்சைக் குழந்தை சாகிறதா! ஐயோ, ஈடு செய்ய வேண்டி சிவகாமி, இன்னொரு ஜன்மம் எடுத்து வந்து உனக்கு ஈடு செய்கிறேன்..." என்று கதறினார்.

நீரஜா வறுமையின் காரணமாக இறக்கவில்லையே, அவள் மரணம் ராமநாதனை ஏன் அவ்வளவு கடுமையாகத் தாக்க வேண்டும் என்று வக்கீல் சிந்தித்தார்.

சிவகாமி மெள்ள எழுந்தாள். "நான் போய் வருகிறேன், ஸார். கற்பகத்துக்கு என்னைப் பார்க்க இஷ்டமில்லையென்று நினைக்கிறேன். மாமாவின் சொத்து முழுவதையும் அவளுக்கே கொடுத்து விடுவதில் எனக்கு ஆட்சேபணை இல்லையென்று அவளிடம் சொல்லி விடுங்கள். இன்பமே போன பிறகு எனக்குப் பணம் எதற்கு?"

★

சிவகாமி சென்ற பிறகு வக்கீல் யோசனையில் ஆழ்ந்தவராய் ஜன்னலருகில் சென்று நின்றவாறே, வெளியே இருளடையும் வானத்தைப் பார்க்கலானார். ராமநாதன் கடைசியாய்த் தம்மிடம் சொன்ன விஷயத்திலிருந்து உயில் விவரம் அவருக்குப் புரிந்தது.

மதுசூதனன் சாமான்களை மூட்டை கட்டி விட்டு அங்கு வந்தான். வக்கீல் "ஆமாம், உனக்கு எப்போது கல்யாணம்?" என்று அவனிடம் கேட்டார்.

"சீக்கிரம்தான் நடக்கப் போகிறது. உம் பாவம், தாத்தா எனக்குக் கல்யாணம் செய்து பார்க்க ஆசைப்பட்டார். குறையோடு போனார்."

"இந்தக் கல்யாணம் அவர் குறையைத் தீர்க்காது" என்றார் வக்கீல்.

"அது வாஸ்தவம்தான். அடேயப்பா, அவர் மருமாள் பெண்ணை நான் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று எவ்வளவு குதித்தார்! இறப்பதற்குப் பத்து நாள் முன்பு இருக்கும். சாயங்காலம் நான் வெளியே சுற்றி விட்டு வீடு வந்தேன். என்னை நீசனென்றும் அயோக்கியனென்றும் பண வெறி கொண்ட பேய் என்றும் என்னவெல்லாம் திட்டினார்! அந்தக் கோபத்தில் அவரைப் பார்க்கவே பயமாயிருந்தது."

அவன் பேசுவதை நிறுத்தி விட்டு யோசனையில் ஆழ்ந்தான்.

"அந்த ஏழைப் பெண்ணை நீ மணந்து கொண்டிருக்க வேண்டும்!" என்றார் வக்கீல்.

"ஏழைப் பெண்களுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கலாம், ஸார். ஆனால் அவர்களை மணக்கக் கூடாது!"

"சொந்த அனுபவமோ?" என்றார் வக்கீல்.

மதுசூதனன் சிரித்தான். "அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்! அடேயப்பா! அன்று அவள் விடாப் பிடியாகப் பிடித்துக் கொண்டாள். எவ்வளவு சொன்னாலும் கேட்கவில்லை. அட்டை மாதிரி...."

அந்தக் காட்சி அவன் மனத்தில் அப்படியே மீண்டும் பளிச்சிட்டது.

★

"நீங்களா! இங்கேயா?" என்றாள் அந்தப் பெண்ணழகி.

"ஆமாம். இதுதான் நான் வசிக்கும் ஊர். வேலை விஷயமாய் அந்த ஊருக்கு அடிக்கடி வருகிறேனென்றுதான் உனக்குத்தெரியுமே!" என்றான் அவன்.

"என்ன அதிர்ஷ்ட சந்திப்பு! நாம் எப்போது கல்யாணம் செய்து கொள்வது?"

"அதெற்கென்ன இப்போது? வேறெதாவது சொல்......"

"என் அன்பு உங்களுக்குத் தெரியாதா? என்றுதான் நாம் இரண்டு பேரும் ஆனந்தமாய்க் கணவன் மனைவியாய்க் குடித்தனம் செய்வது?" என்றாள்.

"அதெல்லாமிருக்கட்டும், சுமுகமாய் ஏதாவது பேசு."

நேரம் கடந்தது. அவள் புரிந்து கொள்ள ஆரம்பித்து விட்டாள்.

"என்மேல் பிரியம் இருப்பதாய்ச் சொன்னதெல்லாம் பொய்தானா?"

"கல்யாணமென்பது பெரிய தொல்லை."

அந்தப் பக்கம் விமலா சென்றாள். மதுசூதனன் விமலாவை நோக்கிப் புன்னகை செய்தான். அவள் கடந்து மறைந்தாள்.

"அப்படியா விஷயம்? அந்தப் பெண்ணை நீங்கள் பார்த்த விதம் எனக்குப் புரியாதா? இது என்ன மோசம்?"

வார்த்தைகள் பலப்பட்டன.

"சீ, பிச்சைக்காரி......"

அவள் கண்கள் நெருப்பைக் கக்கின. அன்பு இருந்த இடத்தில் ரௌத்திரம் காட்சியளித்தது. "நான் ஏழை என்பதனாலா இந்த உதாசீனம்! என்ன பணத்திமிர்!"

★

"அப்பா! ராட்சஸிதான் சுபாஷிணி!" அவள் மேல் வந்த கோபத்தில் முழு பலத்தோடு சுபாஷிணியைக் கீழே பிடித்துத் தள்ளி விட்டேன்" என்றான் மதுசூதனன்.

வக்கீல் புருவங்களை உயர்த்தினார். "அவள் பெயர் சுபாஷிணியா?"

"ஆமாம். செல்லமாய் அப்பா, அம்மா கூப்பிடும் பெயர். நிஜப் பெயர் வேறொன்று, மறந்து விட்டேன். அதற்குப் பின் வீடு திரும்பினேன். அதே வழியாய் — வீட்டுக்குப் போகும் வழியாய் — தாத்தாமாதிரி யாரோ போய்க் கொண்டிருந்தார்கள். அவர்தானு என்று நிச்சயமாய்த் தெரியவில்லை. சுபாஷிணியோடு ஆத்திரமாய்ப் பேசிவிட்டு வீடு திரும்பினால் தாத்தா திட்ட ஆரம்பித்தார்."

வக்கீல் அசையாமல் நின்று கொண்டிருந்தார். அவர் மனத்தில் படம் இப்போது பூர்த்தி யடைந்தது.

"கொலை யுண்டவனின் ஆவி விடாது தொடர்ந்து வரும் கொலையாளியைப் பார்த்திருக்கிறீர்களா, ஸார்? என்னமோ தெரியவில்லை, தாத்தாவை அந்தக் கடைசி நாலைந்து நாட்களில் பார்க்கும்போது எனக்கு அப்படி ஒரு பிரமைதான் ஏற்பட்டது."

வக்கீல் இதற்கு ஒரு பதிலும் சொல்லவில்லை. மதுசூதனனின் அந்தப் பிரமையில் உண்மை அம்சம் எவ்வளவு இருக்கிறது என்பதை எண்ணித் தமக்குள்ளேயே வியந்து கொண்டிருந்தார். அந்த விஷயம் அவனுக்குப் புரியாது. அவர்கள் யாருக்கும் புரியாது. ராமநாதன் இறப்பதற்கு முந்திய தினம் — உயிலை மாற்றுவதற்கு முன்னால்—சொன்ன விஷயம் அவர்கள் யாருக்கும் தெரியாது.

வக்கீல் அந்தக் காட்சியை நினைவுப் படுத்திக் கொண்டார்.

மரணப் படுக்கையில் கிழவர் பலஹீனத்தைவிடப் பயத்தாலும் வேதனையாலும் நடுங்கிய குரல். அவர் பேச்சு வக்கீலின் காதில் ஸ்பஷ்டமாய் ஒலித்தது. "நான்தான் இதற்கெல்லாம் காரணம். பசுபதியை நான் முதலில் பார்த்தபோது அவன் தன் பணக்காரத் தந்தையுடன் சண்டை போட்டுக் கொண்டு வந்திருந்தான். பிறகு அவர்களுக்குள் சமாதானம் ஆகிவிட்டது. அவர் பணம் அவனுக்கு வரும் என்று தெரிந்தவுடன்... நான் கெட்டவனில்லை ஸார், சிவகாமியைக் கஷ்டப்படுத்த நான் விரும்பவில்லை. ஆனால் மகள்மேல் உள்ள பாசம்...கண்ணை மறைத்தது. சிவகாமிக்கு என்று பார்த்திருந்த வரனுக்கு என் பெண் கற்பகத்தைக் கொடுத்து விட்டேன்..."

★

வக்கீல் ஆழ்ந்த பெருமூச்சு விட்டார். ராமநாதன் கெட்டவரல்ல, சிவகாமிக்கு இந்தக் கதி வருமென்று அவர் எண்ணவில்லை. விஷயம் தெரிந்ததும் மதுசூதனன்—நீரஜா கல்யாணத்தால் ஈடு செய்ய முயன்றார். கடைசியில் மதுசூதனன் அவளை நிராகரித்ததைக் கண்ணால் கண்டார். எந்தப் பணத்திமிரினால் அவன் அப்படிச் செய்து அதன் காரணமாய் நீரஜா இறந்தாளோ அந்தப் பணம் முழுவதும் அவனுடையதாய் இருந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தை அவரால் தாங்க முடியவில்லை. அந்தப் பெரும் துயரம் அவர் உயிரையே கொன்று கொண்டு விட்டது. அவரது துயரமும் பச்சாதாபமும் அவர் வாழ்வில் செய்த ஒரே ஒரு தவறை மன்னித்து விட்டதென்றே வக்கீல் கருதினார்.

வெளியே வானம் நன்றாக இருண்டு விட்டது. வக்கீல், மதுசூதனனிடம் "நான் போய் வருகிறேன். சிவகாமி அம்மாள் அந்த ஆஸ்தி முழுவதையும் உன் தாயாருக்கே கொடுத்துவிடச் சித்தமாயிருக்கிறாள். ஆனால் உன் தாத்தாவின் கடைசிக் கோரிக்கை சிவகாமியே அந்தப் பணத்தை அனுபவிக்க வேண்டுமென்பதுதான். இதை உன் அம்மாவிடம் சொல்லி விடுகிறாயா? நான் போய் வருகிறேன்" என்று விடைபெற்றுச் சென்றார்.




## 31. விசித்திரத் துறவி

ஒரு மனிதன் உலகத்துக்குப் பரம விரோதியாகி விட்டான் என்றால், அவன் மனத்தில் இந்த உலகத்தையும் இந்த உலகத்தில் உள்ள ஜீவராசிகளையும் ஒழித்துக் கட்ட வேண்டும் என்ற எண்ணம் எழுவது இயல்பே அல்லவா? ஜகதீஷுக்கு முதலில் இந்த உலகத்தில் வாழும் மனிதர்கள்மீது தான் கோபம் வந்தது. எனவே, "மனிதன் சிதன் சிதளாக்கிக் கொன்று போடத் தகுந்தவன்தான் என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன்!" என்று துறவியின் வார்த்தைகளை ஆமோதித்தான். சொல்வதற்கு அவன் அப்படிச் சொல்லிவிட்டானே யொழியத் தன் வாய் மொழியாக, அறியாததொரு ஆத்மா இப்படிப் பேசுகிறதோ என்று அவனுக்கே ஐயப்பாடு உண்டாயிற்று. இதனால் கண நேரத்துக்கு அவன் தன்னிடமே அஞ்சினான், தன் நிழலைக் கண்டு தானே அஞ்சுபவனைப் போல். பிறகு தன் நிலைக்கு வந்து, "ஆனால் அம்மாதிரி எனக்குக் கொல்ல வரவில்லையே! என்ன செய்வது?" என்றான்.

"பழகப் பழகத் தானாக வந்து விடும், தம்பி! என்னோடு இரு. நான் கற்றுத் தருகிறேன்!" என்றான் துறவி சிரித்துக் கொண்டே. அவன் சிரித்த அந்தச் சிரிப்பு ஜகதீஷுக்குப் பைசாசத்தின் சிரிப்பாகப் பட்டது. அவன் துறவியைக் கூர்ந்து கவனித்தான். துறவியின் முகம் ஏற்கெனவே எங்கேயோ பார்த்த முகமாகத் தோன்றியது. அதனால் இம்மாதிரி முகத்தை எங்கே பார்த்தோம் என்று சிந்தித்தான். ஆனால் நினைவுதான் வரவில்லை. இவ்வளவு குருபமும் குரூரமும் வாய்ந்த மனிதனை எங்குமே பார்த்ததாக அவனுக்குத் தோன்றவில்லை. அதுவும் அவனுக்கு நினைவு தெரிந்தவரை இந்த உலகத்தை ஒழித்துக் கட்டி விட்டுத்தான் மறு காரியம் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் மனிதனைப் பார்த்ததாகவே நினைவில்லை. ஆனால் அவனைக் காட்டிலும் அழகானவனை, அவனைக் காட்டிலும் முகத்தில் அதிகச் சாந்தம் நிறைந்தவனை, அவனைக் காட்டிலும் பண்போடு பழகத் தெரிந்தவனைக் கண்டிருந்ததாக அவன் நினைவுத் திரையிலே நிழலாடியது. ஆனால் யார் என்னவென்று தான் இனம் விளங்கவில்லை. யோசிக்க யோசிக்க அவன் மூளைதான் குழம்பிற்றே யொழிய அவனால் சரியான ஒரு முடிவுக்கு வர முடியவில்லை.

ஆற்றங் கரையை யடுத்தாற் போலவே அந்த மணல் மேட்டுக்குச் சற்றுத் தொலைவிலிருந்து சங்கு ஊதும் சப்தம் கேட்டது.

மணல் மேட்டில் அவர்களுடன் உட்கார்ந்திருந்தவர்களில் ஒருவன், "சாமி! தீபாராதனைக்கு நேரமாகி விட்டது. போகலாமா?" என்று கேட்டான்.

"சரி, போகலாம்!" என்று சொன்ன துறவி ஜகதீஷைப் பார்த்து, "நீயும் கூட வா!" என்றான்.

மணல் மேட்டிலிருந்து எல்லோரும் கீழே இறங்கினார்கள். ஜகதீஷும் அவர்களுடன் கூடவே சென்றான். அப்பொழுது சந்திரன் தலைக்குமேல் வந்து விட்டான். அங்கிருந்து கோவில் பத்து நிமிஷ தூரத்தில் இருந்தது. எல்லோரும் நடந்து அந்தச் சிறு கோவிலை அடைந்தார்கள். அப்பொழுது அங்கிருந்த இரண்டு மூன்று துறவிகள் தீபாராதனைக்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார்கள்.

கோவிலில் கடவுளின் சிலை என்று ஒன்றும் இல்லை. ஒரு கருங்கல்லின்மேல் ஒரு துணியைப் போர்த்திக் கண்கள் இருக்கவேண்டிய இடத்தில் இரு சோழிகளைப் புதைத்திருந்தார்கள். அந்தத் தெய்வத்தைப் பற்றி அவரவர்கள் தங்கள் தங்கள் மனத்துக் கிசைந்தவாறு தனிப்பட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தார்கள்.

ஒரு காலத்தில் அதைச் சிலர் கணேசர் விக்கிரகமாக வழிபட்டார்கள். வேறு சிலர் ஹனுமாராகப் பூசித்தார்கள். இப்பொழுது எல்லோரும் அதைப் பைரவராக வணங்கி வழிபட்டு வந்தார்கள். ஜகதீஷின் கற்பனை மனம் அந்தச் சிலையை ஒரு உடைந்த நட்சத்திரத் துண்டாகவோ அல்லது கற்காலத்திய ஆயுதமாகவோதான் எண்ணியது.

தீபாராதனை முடிந்ததும் கோவிலுக்குப் பின் பக்கத்தில் இருந்த தர்ம சத்திரத்துக்கு எல்லோரும் சென்றார்கள். போலீஸார் சிறிது நேரத்துக்கு முன்பாக ஒரு தடவை

○ ✱ ○ ✱ ○ ✱ ○ ✱ ○ ★ ○ ★ ○

## தமிழ் மக்களின் பத்திரிகை

ஆசிரியர் கல்கி அவர்களின் பெயரால் தொடங்கப் பெற்ற சிறந்த பத்திரிகையான "கல்கி" எப்போதும் போல் புகழ் குன்றாமல் அவர் நினைவுக்குறியாகச் சிறந்த முறையில் வெளிவர வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்ய வேண்டும். கல்கி அவர்களின் சக்தியைத் துணை கொண்டு தொடங்கி ஒருவரும் காண முடியாத வகையில் வெற்றி கண்டு சிறந்த முறையில் போற்றி வளர்த்து வந்த "**கல்கி**" பத்திரிகையை அதன் புகழ் குன்றாமல் தொடர்ந்து நடத்தி அவர் நினைவு தமிழ் நாட்டார் உள்ளத்தில் என்றும் பசுமையாக இருக்குமாறு செய்வது நிர்வாகத்தினரின் பெரிய பொறுப்பாகும். **"கல்கி" பத்திரிகை தமிழ் மக்களின் சொந்தப் பத்திரிகை.** அதற்கு ஆதரவு தரத் தமிழ் மக்கள் எப்போதும் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

*சென்னை* — *எஸ். தருமாம்பாள்*
*8—12—54* — *மாணவர் மன்றத் தலைவர்*

○ ✱ ○ ✱ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○

அங்கே வந்து சோதனை போட்டுச் சென்றதாகப் போன பிறகு தெரிய வந்தது.

துறவி அந்த விஷயத்தைப் பெரிது படுத்தவோ பொருட்படுத்தவோ இல்லை. அங்கிருந்த துறவிகளில் உணவு அருந்த வேண்டியவர்கள் அப்பொழுது யாருமே இருக்கவில்லை. ஜகதீஷை மட்டும் தனியாக அழைத்துப் போய் அவனுக்கு அன்று மாலை அறிமுகமான மனிதன் கொஞ்சம் தின்பண்டங்களும் பாலும் அளித்தான். சித்தம் கலங்கியிருந்ததால் ஜகதீஷுக்குப் பசியின் கஷ்டம் அவ்வளவாகத் தோன்றவில்லை. இருந்தாலும் அவன் உணவு அருந்தினோம் என்று பெயர் பண்ணிக் கொண்டு வெளியே வந்தான். ஒரு புறத்தில் இரண்டொருவர் உட்கார்ந்து ஏதோ பஜனை கீதங்கள் பாடிக் கொண்டிருந்தனர். இன்னொரு புறத்தில் இரண்டொருவர் உட்கார்ந்து கண்களை மூடி ஏதோ தியானத்தில் ஆழ்ந்திருந்தனர். அருகிலிருந்த முற்றத்தில் உட்கார்ந்து வேறு சிலர் தீ மூட்டிக் குளிர் காய்ந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கு அருகிலேயே துறவி பாய் ஒன்று விரித்து உட்கார்ந்திருந்தான். ஜகதீஷ் அவனருகில் சென்று அவனுக்குப் பின்னால் பாயில் உட்கார்ந்தான்.

அப்பொழுது துறவி தன் முகத்தை விசித்திரமாக வைத்துக் கொண்டு அர்த்தமில்லாமல் என்ன என்னவோ பேசிக் கொண்டிருந்தான். ஒரு நிமிஷம் சிரிப்பான்; ஒரு நிமிஷம் கோபிப்பான். அவன் பேச்சுக்கு யாராவது எதிர்ப் பேச்சுப் பேசிவிட்டால் அவனுக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்துவிடும். உலகத்தில் இம்மாதிரியும் எத்தனையோ விசித்திரப் பிரகிருதிகள் இருக்கத்தானே செய்கின்றனர்? அவன் சிரிப்பும் கோபமும் இரண்டுமே பார்ப்பவரை வியப்பில் ஆழ்த்தின.

அந்தப் பயங்கரச் சூழ்நிலையில் அந்த விசித்திரத் துறவியைக் கண்ட ஜகதீஷுக்கு ஏற்பட்ட ஆச்சரியத்தைச் சொல்லி முடியாது. அந்தத் துறவியின் முகம் ஏற்கெனவே அறிமுகமானது என்ற எண்ணம் தான் ஆரம்பத்திலிருந்தே அவன் மனத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்ததே! அதனால் அவனிடம் எப்படியாவது பேச்சுக் கொடுத்து விவரத்தைக் கேட்டு அறிய வேண்டும் என்று எண்ணினான். அதைத் தொடர்ந்தாற் போல், 'நமக்கு ஏன் இந்த வீண் வம்பு?' என்ற எதிர் எண்ணம் அவனைப் பேசாமலிருக்கத் தூண்டியது. ஆயினும் கடைசியில் கேட்டறிய வேண்டும் என்ற அவாவுக்குத்தான் வெற்றி கிட்டியது.

அதனால், "ஏன், சாமி! உன்னை நான் முன்னால் எங்கேயாவது பார்த்திருக்கிறேனா?" என்று கேட்டே விட்டான், யாருடைய முகத்துடன் அவன் முகம் ஒத்திருக்கிறது என்பதை அறிந்தே தீருவது என்ற தீர்மானம் காரணமாக.

"என்னையா? நீ பார்த்திருக்கிறாயா? ஒரு நாளும் பார்த்திருக்க முடியாது. நான் இங்கே வந்து ஏழு நாட்கள்தான் ஆகின்றன. நீ என்னைப் பார்த்திருந்தால் நான் உன்னைப் பார்த்திருப்பேன். ஒரு தடவை பார்த்த முகத்தை அப்புறம் நான் மறக்கிறதே இல்லை. அதேபோல் நீயும் என்னை ஒரு தடவை பார்த்து விட்டால் அப்புறம் ஆயுசுக்கும் மறக்க மாட்டாய். தெரியுமா?" என்றான் துறவி.

"அப்படியானால் எனக்கு ஏன் அப்படித் தோன்றுகிறது?"

"உன் மனம் இப்பொழுது சரியாயில்லை, அதனால் அப்படித் தோன்றலாம்!"

"நீ என்ன சொன்னாலும் சரி! நான் உன் முகத்தைப் போன்ற முகத்தைக் கட்டாயம் எங்கேயோ பார்த்துத்தான் இருக்கிறேன். இதில் துளிக் கூடச் சந்தேகம் இல்லை!"

"காலிப் பயலே! என்ன பேச்சுப் பேசுகிறாய்? இன்னொரு தடவை இந்த வார்த்தையைச் சொல்லு, பார்க்கிறேன்!" என்று ஆத்திரத்தில் சீறியவாறே பக்கத்தில் கிடந்த கம்பை எடுத்துக் கொண்டான் துறவி.

ஜகதீஷுக்கு ஏற்கெனவே அறிமுகமான ஆள் மட்டும் நடுவில் குறுக்கிடாமல் இருந்திருந்தால், துறவி அந்தக் கம்பினால் ஜகதீஷைச் செம்மையாக அடித்திருப்பான்.

"சாமி! என்ன சாமி இது! இவனோ புது ஆளு. தெரியாதவன். உங்களோடு எப்படிப் பேசவேணும் என்கிறது இவனுக்குத் தெரிய நியாயம் இல்லையே!" என்றான் அவன்.

"தெரியாது என்றால் பேசாமல் இருப்பதற்கென்ன? எதற்காக இப்படி வாயைச் செலவழிக்கிறான்?" என்று கேட்டான் துறவி.

ஜகதீஷின் கண்களிலும் ரத்தம் தெறித்தது. அவன் அப்படி என்ன பேசி விட்டான்?

# கால்கேட்
# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது. வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது

சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.



### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.




CTP-58


லிப்டன்
டீ
கேர்ல்
LIPTON'S
TEA GIRL
FINEST
INDIAN DUST TEA
சிறந்த ஸ்ட்ராங் டீ
தருகிறது
LTGX 36 TM



விழுப்புரத்துக்குத் தென்கிழக்கே பழைய பிரஞ்சு இந்திய எல்லைக்கு அருகே புராணசிங்குப் பாளையம் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அக் கிராமத்தினர் செப்டம்பர் 30உ தங்கள் கிராமத்தில் ஒரு வைத்திய சாலை ஆரம்பித்தனர். அந்த வைத்திய சாலையில் தொண்டாற்றும் சிப்பந்திகளுக்காக நிர்மாணிக்க விருக்கும் 'எஸ். சுந்தரராஜ நகரு'க்குக் கல்கி ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அஸ்திவாரக் கல் நாட்டினார். கல்கி ஆசிரியர் ஸ்ரீ ரா. கி. அவர்கள் தம் வாழ்நாளில் தமிழ்த் தாயின் பாத கமலங்களில் சமர்ப்பித்த எத்தனையோ வண்ண மலர்களில், கடைசி மலரே இந்தப் பொதுநலப் பணி.

---

எதற்காகத் துறவிக்கு அவன்மேல் இவ்வளவு கோபம் வர வேண்டும்? சுட்டுப் பொசுக்கி விடுபவன் போல் கண் இமைகளை மூடாமல் பார்த்தவாறே ஜகதீஷ் துள்ளி எழுந்தான். "டேய்! என்னடா உளறுகிறாய்? ஏதாவது பேசினாயோ, இங்கேயே கொன்று போட்டு விடுவேன். ஜாக்கிரதை!" என்று சீறினான்.

இம்மாதிரி இழிவான முறையில் அவன் தன் வாழ் நாளில் இது வரை யாரிடமுமே பேசியதில்லை. கோபத்தின் உச்ச நிலை சற்றுக் குறையவே, அவனிடம் கொஞ்ச நஞ்சமிருந்த நாகரிகமும் பண்பும், 'என்ன காரியம் செய்து விட்டோம்?' என்று நாணமுற்றன. அந்தத் துறவி அலட்சியமாக ஜகதீஷின் பக்கம் திரும்பினான். ஜகதீஷைத் துறவி தடியால் அடிப்பான் அல்லது பருந்தாகப் பாய்ந்து கழுத்தைப் பிடித்து நெறிக்கத் தொடங்கி விடுவான் என்றே எல்லோரும் எண்ணினர். வேடிக்கை பார்க்கப் பலர் அங்கே கூடி விட்டனர். ஆனால் துறவி உட்கார்ந்தது உட்கார்ந்த படியே இருந்தான். அதைக் கண்ட எல்லோருக்குமே வியப்பாக இருந்தது. இன்று என்ன துறவி இப்படி இருக்கிறானே என்றே எல்லோரும் எண்ணினர்.

துறவி வந்த கோபத்தை அடக்கிக்கொண்டு வெறுப்போடு ஜகதீஷைப் பார்த்தான். பிறகு. "இவனை அழைத்துப் போய்த் தூங்க வையுங்கள். இவன் மூளை இப்பொழுது சரியாக இல்லை. தூங்கி எழுந்தால்தான் சாந்தமடைவான்!" என்று அங்கிருந்த ஒருவனுக்குக் கட்டளை யிட்டான்.

ஜகதீஷுக்கு அறிமுகமான ஆசாமி ஜகதீஷின் கையைப் பிடித்துத் தூக்கி நிறுத்தி, "சாமி சொல்கிறது சரிதான். நீ கொஞ்சம் தூங்கு!" என்று கூறித் தன்னுடன் வருமாறு அழைத்தான்.

"சாமியும் ஆச்சு. பூதமும் ஆச்சு! இந்த முரடனுக்குச் சாமி என்ற பெயர் வேண்டிக் கிடக்கிறதாக்கும்!" என்று சொல்ல நினைத்தான் ஜகதீஷ். ஆனால் மனத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "எனக்கு ஒன்றும் இப்பொழுது தூக்கம் வரவில்லை!" என்றான்.

"தூக்கம் வரா விட்டால் வேண்டாம். சற்றுக் களைப்பாறு. படுத்துப் புரண்டால்







களைப்பாவது நீங்கும்!'' என்றான் அந்த ஆள். இடிந்து போன அந்தத் தர்ம சத்திரத்தில் ஒரு பகுதி சரியாக இருந்தது. அதில் ஒரு அறை இருந்தது. அந்த அறை வழியாக வெளியே போவதற்கு ஒரு கதவும் இருந்தது. வாசற்புறமாக இரண்டு ஜன்னல்கள் வேறு இருந்தன. அப்பொழுது அவை திறந்து வைக்கப்பட்டிருந்தன. அந்த அறைக்கு ஜகதீசை அழைத்துச் சென்று அங்கு கிடந்த ஒரு ஓடிசல் கட்டிலில் அவன் ஜகதீசைப் படுக்க வைத்தான்.

''ஏன், அப்பா! உங்களுடைய இந்தச் சாமி மனிதனா, மிருகமா? ஒரு சமயம் சிரிக்கிறான்; ஒருசமயம் கோபிக்கிறான். ஒரு சமயம் அணைக்கிறான்; ஒரு சமயம் அடிக்கிறான்! இவனுக்கு என்ன வல்லடி வந்து விட்டது?'' என்று ஜகதீஷ் அந்த ஆளைப் பார்த்துக் கேட்டான்.

'இதென்ன தம்பி இப்படிக் கேட்கிறாயே! இவர் பெரிய மகாத்மா, பல நாள் யோகத்தில் ஆழ்ந்து விடுவார். அவதூத சந்நியாசி என்று சொல்லிக் கொள்கிறார்களே, அவர்கள் இப்படித்தான் இருப்பார்களாம்! இந்தச் சாமியார் ரொம்ப ரொம்ப விஷயம் தெரிந்தவர். இவருக்குத் தெரியாத விஷயமே இந்த உலகத்தில் கிடையாது. உன் மேல் இவருக்கு அபாரக் கருணை பிறந்திருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது.''

''கருணை பிறந்திருக்கிறதா? பேஷ், பேஷ்! இம்மாதிரி கருணை பிறப்பதாயிருந்தால் எனக்கு ஏழேழு பிறவிக்கும் வேண்டாம். இந்தக் கருணை பெரும் மறக் கருணையாக அல்லவா தோன்றுகிறது!'' என்று ஏகத்தாளமாகப் பேசினான் ஜகதீஷ்.

''என்ன தம்பி, நீ பேசுகிறது கொஞ்சங்கூட நன்றாக இல்லையே! துறவிகள் பின் எப்படி இருப்பார்கள்? துறவிகள் என்றால் யார் என்பது உனக்குப் பழகினால்தான் புரியும். இப்பொழுது நீ சற்றுத் தூங்கு. எதற்கும் பயப்படாதே! என்ன, நான் போய் வரட்டுமா?'' என்று சொல்லி விட்டு அந்த ஆள் வெளியே போய் விட்டான்.

ஜகதீஷ் கண்களை மூடிக் கொண்டு கட்டிலில் படுத்தான்.

ஒரு மனிதன் ஒரு காரியத்தில் வெற்றி காண்கிறான். இன்னொருவன் அதே காரியத்தில் அறிவுக் குறைவு காரணமாக வெற்றி காண்பதில்லை. அதனால் முதல்வன் மகா புருஷனாக மதிக்கப்படுகிறான். மற்றவன் பெயர் யாருக்குமே நினைவிருப்பதில்லை. அப்படியே நினைவு இருந்தாலும் நாளடைவில் நினைவுத் திரையிலிருந்து அகன்று விடுகிறது.

ஜகதீஷ் விதியின் இந்த விளையாட்டைப் பற்றி யோசித்தவாறு படுத்திருந்தான். நாளுக்கு நாள் நாட்டின் சூழ்நிலை எப்படியெல்லாம் மாறுகிறது என்பது அவன் மனத்திரையில் நிழல்படமாக ஓடியது.

கெட்டவர்கள் என்று கருதப்பட்ட எத்தனையோ மனிதர்கள் பிற்கால வாழ்க்கையில் மக்கள் சமூகத்துக்குத் தலைமை தாங்கும்

தகுதியும் திறனும் தங்களுக்கு வந்து விட்டதாக எண்ணியதை அவன் தன் கண்களால் கண்டிருக்கிறான். அவர்கள் மக்களை முன்னேறுமாறு உபதேசிப்பதையும் அவர்கள் சொல் வேத வாக்கியமாக மதிக்கப் படுவதையும் அவன் பார்த்திருக்கிறான். ஒரு காலத்தில் மிக மிகப் பிரக்யாதி பெற்றுத் தலை சிறந்த தலைவர்களாகத் திகழ்ந்த பலர் பிற்காலத்தில் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டதையும், சீந்துவார் இல்லாமல் சுற்றுவதையும் அவன் கண்டிருக்கிறான்.

பலர் மனத்திலே முளைத்த நம்பிக்கைப் பயிர் பலன் தந்திருக்கிறது. பலர் பாதி தூரம் சென்றதுமே பின்வாங்கி நின்றிருக்கின்றனர். பலர் தன்னிடமிருந்ததையும் தோற்று விட்டு ஒன்றும் கிடைக்காமல் கையைப் பிசைந்து கொண்டு நின்றிருக்கின்றனர். உலகம் போற்றும் உத்தமர் காந்தி பாரெங்கும் பரப்பிப் பாரதத்தின் பெருமையை நிலை நாட்டிக் காட்ட விரும்பிய உன்னத லட்சியச் சித்திரம் வெறும் கனவாகி விட்டது. அந்தக் கனவே புகழுக்கு அப்பாற்பட்டது. பிறரது விமரிசனத்துக்குள் அடங்காதது. அவருடைய அந்தக் கனவு நனவாகியிருந்தால் அதன் பெருமையை எடுத்துக் கூற இயலுமா? காந்தி மகான் கனவில் கருத்துடன் அமைத்திருந்த அழகிய அந்தச் சித்திரத்தை நினைவாக்கிக் காட்ட வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் யாருமே அவருடன் ஒத்துழைக்க முன் வரவில்லை என்பதை நினைத்தபொழுது அவன் மனமே அவனை முன்னாகக் குத்தியது.

உண்மையிலேயே ஒருவன் அவரது லட்சியத்தை நிலைநாட்டும் விஷயத்தில் ஒத்துழைத்திருந்தால். தேசோத்தாரணம் என்னும் உயரிய நோக்கத்துக்கு ஈடு கொடுத்துச் செயலில் இறங்கி யிருந்தால், சகலரும் நேர்மையான வழியில் தன்னலத் தியாகம் செய்திருந்தால் ஒரு வருஷத்தில் என்ன, ஒரே நாளில் அந்தக் கனவுச் சித்திரம் வெற்றி வாய்ந்த உண்மைச் சித்திரமாக உருப் பெற்றிருக்கும். ஆனால்......

அவன் எண்ணங்கள் தடைப் பட்டன. அவன் இருந்த அறைக்குள் அப்போது யாரோ வந்து கொண்டிருந்தார்கள். கண் திறந்து பார்த்த அவனுக்கு அதே துறவி தன்னை நோக்கி வருவது தெரிந்தது. உடனே அவன் எழுந்து உட்கார்ந்தான். துறவி ஒரு வேளை கையில் தடி எடுத்து வருகிறானோ என்று அவனுக்குப் பயமாயிருந்தது. ஆனால் நல்ல வேளையாக அவன் நினைத்தது போல் துறவியின் கையில் ஒன்றும் இல்லை.

"ஏன், தம்பி! நீ இன்னும் தூங்கவில்லையா?" என்று கேட்டான் துறவி.

"ஒரு பக்கம் நீ; இன்னொரு பக்கம் போலீஸ்காரர்கள். இம்மாதிரி நிலைமையில் தூங்குகிறது எங்கே?" என்றான் ஜகதீஷ்.

"என்னைக் கண்டால் உனக்குப் பயமாயிருக்கிறதா, என்ன?" என்று கேட்டான்

துறவி. அப்பொழுது அவன் முகத்தில் மகிழ்ச்சி முறுவலித்துக் கொண்டிருந்தது.

"எனக்கு அப்படியொன்றும் பயம் ஏற்படவில்லை. ஆனால் உன்னைப் பார்த்தால் ஒருவனுக்குப் பயம் ஏற்படத்தான் செய்யும்!" என்றான் ஜகதீஷ்.

"பயப்படாதே, தம்பி! பயப்படாதே! சிற்சிலசமயங்களில் எனக்கு மனிதர்களைக் கண்டால் கொன்றுவிட வேண்டும் என்று ஆத்திரம் உண்டாகிறது. அதுவும் யாராவது ஒருவன் பார்ப்பதற்கு அழகாயிருந்து விட்டால் அவனைப் புண்படுத்த வேண்டும், பிழியப் பிழிய அழ வைக்க வேண்டும் என்ற ஆசை மிகுந்து விடுகிறது!" என்று சொன்ன துறவி, "நீ களைத்திருந்தால் தூங்கு. இல்லாவிட்டால் என்னோடு வா. ஒரு வேடிக்கை காண்பிக்கிறேன்!" என்றான்.

"வாருங்கள், வாருங்கள்! நானும் வருகிறேன்" என்று சொன்ன ஜகதீஷ் எழுந்து நின்றான். ஜகதீஷ் தன்னை யறியாமலேயே துறவியுடன் மரியாதையாகப் பேசத் தொடங்கினான். துறவி அறைக் கதவைத் திறந்தான். அவ்வழியே இருவரும் வெளியே வந்தார்கள். வெளியே மின்சார விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. இருவரும் அந்த விளக்கு ஒளியில் முன்னேறினர். துறவி ஒரு கறுப்புக் கம்பளியைத் தன் உடலில் போர்த்தியிருந்தான். கொஞ்ச தூரம் சென்றதும் ஜகதீஷுக்கு ஏதோ தோன்றியது. "ஆமாம். நான் உங்களோடு வருகிறேனே! ஆனால் எங்கேயாவது போலீஸ்காரர்கள் என்னைப் பார்த்துப் பிடித்துக் கொண்டு விட்டால் என்ன ஆவது?" என்று கேட்டான்.

"நீ திருடன் இல்லை. திருடனுக்கு இருக்க வேண்டிய குண தோஷங்களும் உன்னிடம் இல்லை. திருடர்களுடைய சுபாவம் தனியாகத் தெரியும். உன்னைப் பார்த்தவுடனேயே நீ திருடன் இல்லை என்பதை நான் தெரிந்து கொண்டு விட்டேன். என்னைக் கேட்டால் உனக்கு அநுபவம் பற்றாது என்றுதான் சொல்வேன். ஏனெனில் முதலில் நீ ஒரு விஷயம் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். போலீஸ் இப்பொழுது உன்னை இரண்டே இரண்டு இடங்களில்தான் தேடிக் கொண்டிருக்கும். முதலில் எங்கே திருட்டு நிகழ்ந்திருக்கிறதோ, அங்கே தேடும். அடுத்தபடியாக உன் வீட்டைச் சோதனை போடும். இரண்டு இடங்களில் ஏதாவது ஒன்றில் தான் குற்றவாளி இருப்பான், குற்றத்துக்கான தடயங்களும் கிடைக்கக்கூடும் என்பது அதன் அபிப்பிராயம். அதனால் நீ இப்படிப் பயந்து சாக வேண்டியதில்லை. அதோடு நாம் போவதும் நேர் பாதை யல்ல. கவலைப் படாதே!" என்றான்.

ஜகதீஷுக்குத் துறவி சொன்னது சரியாகப் பட்டது. என்ன விசித்திரத் துறவி என்று எண்ணியவாறே நடந்தான். (தொடரும்)

# இலக்கியத் தென்றலே, ஓய்ந்தாயோ?

தேடிவரும் தென்றலாகத் தீந்தமிழை வளர்த்த திருவிளக்கே! ஆடிவரும் தேனுக அமுதத் தமிழிசை வளர்த்த குல விளக்கே!

அணைந்தாயோ? அமரவாழ்வு பெற்றாயோ?

இலக்கிய உலகின் இணையற்ற குலைவுகண்டு நெஞ்சு நெக்குருகுகிறோம். அணையா மணி விளக்கு அணைந்தது கண்டு விம்மித் தேம்புகிறோம்! இலக்கிய ஜோதிவானில் மின்னிய அரும்பெரும் தேன்மதி! அமரப் புகழ்பெற்ற ஆருயிர் ஆசிரியர் "கல்கி" மறைந்து விட்டீரே!

தமிழிசை வளர்த்தீர்! தமிழகத்திலே தமிழ்ப் பாடல்கள் முழங்கும் போதெல்லாம், அருமை ஆசிரியரே! நீங்களே அங்கே அமர்ந்திருப்பதாகத் துணிந்திருந்தோமே! எங்களை விழி சோரவிட்டுப் போய் விட்டீரே!

பாரதி மண்டபம் கட்டி விட்டேன் - பார்த்துக் கொண்டேயிருங்கள். பாரதியைத் தரிசிக்கப் போகிறேன் என்று புறப்பட்டு விட்டீரோ?

தமிழ்த்தென்றல் திரு வி. க. வளர்த்தெடுத்த இளம் பரிதியே - இன்னமுதான இன்பத்தமிழை - வழங்கு தமிழாக்கி வளமூட்டிய வல்லவரே! தமிழரைத் தேம்ப விட்டீரே! தஞ்சை மாவட்டத்தைத் திகைக்க விட்டீரே!

உங்கள் இதயச் சுரங்கத்திலேயிருந்து வெட்டியெடுத்துத் தமிழரான எங்களுக்குப் படைத்த புதையல்கள் ஏராளம்!

இனி வீணை பவானியைப் பார்க்க முடியுமா? அய்யம்பேட்டைத் தவுல் கந்தப்பனின் அருமைக் கதையைக் கேட்க முடியுமா? பல்லவ மகேந்திரரும், வீரர் ராஜேந்திரரும், அருண்மொழித் தேவரும் எங்களோடு உரையாடுவார்களா? சிவகாமியின் அற்புத நடனத்தை அழகுத் தமிழில் காண முடியுமா?

தமிழ்த் தாய் தேம்புகிறாளே!

"கல்கி" வெள்ளிதோறும் நாங்கள் காணத்துடித்த தீந்தமிழ்க் காவியம்!

"கல்கி" தமிழகத்தின் புயலாக—தென்றலாக—சூறாவளியாக—சண்டமாருதமாகப் போராடி மக்களரசு வாழ அமைந்த அருமைப் பூங்கா!

அந்தப் பூங்காவைப் போற்றி வளர்ப்போம். வாரந்தோறும் வரும் கல்கிப் பத்திரிகையில் உங்களைக் காண்போம். அதுதான் எங்களுக்கு ஆறுதல்.

முசிரி
8—12—54

முசிரி — கல்கி அன்பர்கள்



**·SANFORIZED·**
REGD TD MK
**SHRUNK**

**'சான்பொரைஸ்ட்' துணியில்**
**தைக்கப்படும் உடைகள்**
**உடம்புக்குப் பொருந்தாதபடி**
**சுருங்கவே செய்யாது**
**—எத்தனை முறை**
**சலவை செய்தாலும் கூட**



முக்கிய கவனிப்பு—
உங்கள்
தையல்காரரிடம்
சொல்லுங்கள்:
"இது
'சான்பொரைஸ்ட்'
துணி—உடை
தைப்பதற்குமுன்
நனைக்க
வேண்டாம்"




ஆகஸ்டு மாதம் பிரதானம் அடைந்தது போல் வேறெதுவும் பெறவில்லை. என்னென்னவோ அதிசயங்கள் இம்மாதத்தில் நிகழ்ந்திருக்கின்றன. எனவே ஆகஸ்டில் ஒவ்வொரு தேதியுமே முக்கியமானதாக விளங்குகிறது.

பூபதிக்கும் ஆகஸ்டில் ஒரு தேதி நன்றாக ஞாபகத்திலிருக்கும். ஆகஸ்டு இரண்டு! இதை அவர் மறக்காமலிருந்ததற்குக் காரணமிருந்தது. அது அவர் பிறந்த தேதி என்பது மட்டுமல்ல. ஒரு சமயம் இந்தப் பிறந்த நாள் வைபவத்தில் நிகழ்ந்த சிறு சம்பவத்தினால் அவருக்கு அந்திய காலத்தில் கூட இதைப் பசுமையாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள முடிந்தது.

* * *

தங்கையனும் சொர்ணமும் பெயரில் தாம் பெருமை கொண்டார்கள். அன்றாடம் உழைத்தால்தான் உணவுக்கே வழி உண்டு.

விதியை நினைத்து மதிமிழந்து, பிச்சைக்காரர் கூட்டத்தில் சேரவில்லை அவர்கள். வேறெந்தக் கயமைத் தொழிலிலும் ஈடுபடவில்லை தங்கையன். உழைப்பின் உயர்வை உணர்ந்தான் அவன். மானமாக வாழக் கூலி வேலையை மேற்கொண்டான். தங்கச் சுரங்கத்தில் வேலைக்கமர்ந்தான்.

சொர்ணமும் நாலுவீடு கூட்டிப் பெருக்கி மெழுகினாள்; பண்டம் பாத்திரங்களை விளக்கிக் கொடுத்தாள்; அழுக்குத் துணிகளைத் துவைத்துப் போட்டாள். அவளாலும் நாலு காசு பெருமையோடு சம்பாதிக்க முடிந்தது.

உடலுழைப்பால் இல்லாமையை விரட்டிக் கொண்டிருந்தார்கள் இவர்கள். இது நல்வாழ்வு என்றில்லா விட்டாலும் நலிந்த வாழ்வில்லை. குடும்ப லட்சுமி சொர்ணத்துக்குப் பெருமையாக இருந்தது இது. மகிழ்ச்சியை விளைவித்தது.

ஆனால் மகிழ்ச்சி நீடிக்கவில்லை.

ஒரு நாள் காலை தங்கையன் தங்கச் சுரங்கத்துக்குப் போனவன்தான். வழக்கம் போல மாலையில் திரும்பவில்லை. அகால மரணம் அவனைத் தழுவி அணைத்துக் கொண்டது. சுரங்கத்தில் எங்கோ சரிவு ஏற்பட்டது. இரையானவர்கள் தங்கையனும் மற்றும் சிலரும்.

தனித்து விடப்பட்டாள் சொர்ணம்!

ஆனால் அவள் அழுதழுது மாய்ந்து போய்விடவில்லை; ஓய்ந்து உட்கார்ந்துவிடவில்லை. சோகத்தையும் துக்கத்தையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டாள். அவ்வளவு துக்கத்தையும் தாங்கிக் கொள்ள அவளால் எப்படித்தான் முடிந்ததோ!

சொர்ணம் வாழ வேண்டும்! வயிற்றிலுள்ள குழந்தைக்காகவேனும் அவள் வாழத்தான்வேண்டும்! குழந்தை பிறந்த பின்னரும் கூட அதன் நலனுக்காக அவள் வாழத்தான் வேண்டும்! சோர்வை அகற்றினாள்; சோகத்தை நீக்கினாள். முன் போலவே உழைக்க முற்பட்டாள்.

மாதம் பிறந்தது. அவள் உள்ளத்தைப் போல் உடலும் கனத்தது. அவளால் வேலைக்குப் போக முடியவில்லை. குடிசையில் சோர்ந்து விழுந்தாள். சோர்ந்து விழுந்தவளை வாட்டிற்று உடல் வாதனை! குழந்தை இன்பத்துக்கு முன் ஏற்படும் வேதனைதான்.

விஷயம் தெரிந்ததும் அவளைச் சுற்றிப் பெண்கள் கூட்டம் நிறைந்து விட்டது. பலர் வேடிக்கை பார்க்க, சிலர் உதவினார்கள். யாரோ போய் மருத்துவச்சியை அழைத்து வந்திருந்தார்கள். ஒரு கிழவி மட்டும் கடைசிவரையில் சொர்ணத்தின்கூட இருந்து உதவி செய்தாள்.

இந்தச் சூழ்நிலையில் அவளுக்கு ஆண் குழந்தை பிறந்தது. சொர்ணம் தொல்லையை மறந்தாள். குழந்தை இன்பவாரிதியில் மிதந்து கொண்டிருந்தாள். வாழ்க்கையில் மேலும் ஒரு பிடிப்பு ஏற்பட்டது. கண்ணனை குழந்தைக்குப் பூபதி என்று பெயரிட்டாள். பெயர்கள் பொருந்தியோ, பொருந்தாமலோ ஏற்படுவதும் விந்தைதான்.

காலச் சக்கரம் சுழன்றது!

பூபதி பத்து வயதுச் சிறுவன் ஆனான். இதே சமயம் சொர்ணம் தன் தலையைக் கீழே போட்டாள். ஓய்விலா உழைப்புடன் காச நோயும் சேர்ந்து அவள் உயிரைக் குடித்து விட்டது.

இதுவரை அன்புத் தாயின் போஷணையில், கஞ்சியோ கூழோ குடித்து, கவலையின்றிப் பள்

## வாழ்க, கல்கிப் பத்திரிகை !

அருமை ஆசிரியர், தமிழ் நாட்டின் தவப் புதல்வர், கன்னித் தமிழிசையின் காவலர், "கல்கி" அவர்கள் பொன்னுடு சென்றார் என்றறிந்து நானும் எனது மனைவியும் அப்படியே கல்லாகச் சமைந்து விட்டோம்,

'கல்கி மறைந்து விட்டார். கல்கி வாழ்க!' என்று வாழ்த்துவோம். அவர் போன போதிலும் அவர் பரம்பரையில் வந்த எழுத்தாளர்கள் எத்தனையோ பேர் இருக்கின்றார்கள். அவர் ஏற்றி வைத்த விளக்கை நன்கு பிரகாசிக்கச் செய்யும் திறமை அவர்களுக்கு உண்டு. மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவமும் ஒரு பெரிய துணையாக இருக்கிறார்கள். தமிழன்பர் எல்லாரும் சேர்ந்து "கல்கி" அவர்கள் நினைவை வளர்க்க வேண்டும். கல்கி யவர்கள் நாமம் தமிழ் நாட்டில் நிலைத்து வாழக் 'கல்கி' பத்திரிகை உயர்ந் தோங்கி வளர வேண்டும்.

நாங்குநேரி
7—12—54 —கே. வி. எஸ். மணியன்

ளிக்கூடம் போய் வந்த பூபதி அநாதை யானான். உயிரை வளர்க்க உண்பதற்கும், உண்பதற்காக உயிரை வளர்க்கவும் அவன் இனி உழைத்தாக வேண்டும். பிறந்த நகரில் ஆதரவில்லை. அங்கிருந்து அகன்று வந்தான். நெடுந்தூரம் நடந்தான்.

வழியில் ஒரு அழகிய கிராமம் அவனைக் கவர்ந்தது. இங்கு ஒரு பண்ணையார் வீட்டில் வேலை கிடைத்தது. மாடு மேய்க்கும் வேலை! மூகம் கோணாது ஒத்துக் கொண்டான். மனம் சலிக்காது தனக்கிட்ட பணியைச் செவ்வனே செய்தான்.

கால ஓட்டத்தில் இப்படி ஐந்து வருஷங்கள் கழிந்து போயின.

ஒரு நாள் வழக்கத்துக்கு மாறாக, பூபதி மாடுகளை நெடிய தூரம் தள்ளியிருந்த மலைக்காட்டுக்கு ஓட்டி வந்து விட்டான். அவைகளை மேய விட்டு, அவன் மலையடியோரமாக நடந்து வந்தான். அங்கு ஓர் இடத்தில் பூமிக்கு மேல் யந்திரம் போன்று ஏதோ ஒன்று துருத்திக் கொண்டிருந்ததைக் கண்டான். கழியால் தட்டிப் பார்த்தான். 'டங், டங்' என்று சத்தம் கேட்டது. கழியாலும், கல்லாலும் பூமியைத் தோண்டினான். மண் அகல அகல, அது புதைக்கப்பட்ட செப்புக் குடம் என்பது தெரிந்தது. அதன் மூடியை விலக்கிப் பார்த்தான். உள்ளே மினு மினு என்று ஏதோ தெரிந்தது. கையை உள்ளே விட்டு எடுத்துப் பார்த்தான். பழங்கால தங்க நாணயங்கள், நவரத்தினங்கள், புராதன நகைகள் இன்னும் இவை போன்ற கண்ணைப் பறிக்கும் அபூர்வப் பொருள்களைக் கண்டான். ஆச்சரியம் கொண்டான். மறுபடியும் அதை முன் போலவே மண்ணிட்டுத் தரையை ஒழுங்குபடுத்தினான். அங்கே சில அடையாளம் வைத்து, இடத்தை ஞாபகத்தில் இறுத்திக் கொண்டான். பொழுது சாய்ந்தது!

மாடுகளை ஓட்டி வீடு திரும்பினான் அவன்.

அன்றிரவு பூபதி உறக்கம் கொள்ள வில்லை. ஏதோ சிந்தனைகள். மறுநாள் காலையில் அவன் பண்ணையார் வீட்டில் காணப்பட வில்லை.

பகல் சுமார் பன்னிரண்டு மணி யிருக்கும். பக்கத்து கிராமத்தில் மூகாம் போட்டிருந்த கலெக்டர் ஏதோ காரியத்தில் ஈடுபட்டிருந்தார். அவரைச் சுற்றிப் பலதரப்பட்ட சிப்பந்திகள். இதை எப்படியோ பூபதி அறிந்திருந்தான்! சிரமப் பட்டுக் கொண்டு வந்த செப்புக் குடத்தை கலெக்டர் முன் வைத்தான் சிறுவன் பூபதி.

"ஐயா! மலையடிவாரத்தில் புதர்களுக்கிடையே இதனைக் கண்டேன். புராதனப் பொருள்கள்! விலை மதிக்க முடியாதவை! சர்க்காருக்குச் சொந்தமாக வேண்டியவை. உங்களிடம் ஒப் படைக்கிறேன்" என்றான்.

கலெக்டர் எல்லாவற்றையும் பார்வையிட்டார். அவருக்கு வியப்பு என்றால் வியப்புதான் கால நிர்ணயம் செய்ய முடியாத சரித்திர காலத்தை சேர்ந்தவை. சரித்திர ஆராய்ச்சிக்கும் பொருட் காட்சிக்கும் சிலவற்றை வைத்துக் கொண்டாலும், மீதியுள்ளவை எத்தனையோ லட்சம் பெறும். பூபதியின் நேர்மையை வியந்தார்.

"தம்பி, நீ யார்?" என்றார்.

பூபதி தன் சோக வரலாற்றைச் சுருக்கமாகச் சொன்னான். தனக்கு ஏதாவது வேலை கொடுத்து ஆதரவளிக்க வேண்டினான்.

கலெக்டர் மிக மிக நல்லவர். நாணயமும் இரக்க சுபாவமும் உள்ளவர். "தம்பி, கவலைப் படாதே! உனக்கு வேலைத் தேடித் தரும் வரையில் என்னோடு, இரு" என்று கூறி மூகாமை முடித்துக் கொண்டு திரும்பினார்.

ஒரு மாதம் கழிந்தது.

"பூபதி! நீ கொண்டு சேர்த்த செப்புக் குடத்தையும், அதில் இருந்த பொருள்களையும் மேலதிகாரிகளுக்கு அனுப்பி உன்னைப்பற்றியும் தெரிவித்திருந்தேன். !இன்று பதில் வந்திருக்கிறது. உன் நேர்மைக்குப் பரிசாகப் பத்தாயிரம் ரூபாய் கொடுக்கவும், மற்றபடி உனக்கு வசதிகள் செய்து கொடுக்கவும் உத்தரவு வந்திருக்கிறது. உனக்கிருக்கும் படிப்பு போதும். ஏதாவது ஒரு வியாபாரத்தைத் தொடங்கு! நான் வசதி செய்து கொடுக்கிறேன்" என்றார் கலெக்டர்.

"சரி ஐயா! உங்கள் இஷ்டப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்றான் பூபதி.

* * *

கால வெள்ளம் எத்தனை எத்தனையோ மாறுதல்களைச் செய்திருந்தது!

சர்க்கார் உதவி பெற்ற பூபதி வியாபாரத்தில் முன்னேறினார். குடியும் குடித்தனமுமாயிற்று. நேர்மையான இலாபம் அவரைப் பணக்காரராக்கிற்று. ஆனால் பணத்தின் பெருமையில் அவர் இறுமாந்து போய்விடவில்லை. ஏழை, எளியவர்களுக்கு உதவினார்; தானதர்மங்கள் செய்தார்.

இப்படி யிருந்த பூபதியின் பிறந்த நாள் வைபவத்தை ஆடம்பரமாகக் கொண்டாடியதுதான் வேடிக்கை. அவரால் முன்னுக்கு வந்த மக்களின் முயற்சி இது. அவர் இதை விரும்பவில்லை. ஆனால் மக்களின் அன்புக் கட்டளைக்குப் பணிந்து அவர்கள் இஷ்டப்படியே விட்டு விட்டார்.

வருடந்தோறும் பிறந்த நாள் விழா ரொம்பவும் சிறப்பாக நடந்தது. அன்று ஒரே குதூகலம்! ஏழை எளியவருக்கு விருந்து.

* * *

பூபதியின் ஐம்பத்தோராவது பிறந்த நாள் அன்று ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இது அவரை மனிதருள் மாணிக்க மாக்கிற்று.

காலையிலிருந்தே பூபதியின் வீட்டில் கோலாகலம் நிறைந்திருந்தது. வருவோர், போவோர் எண்ணிக்கையி லடங்கவில்லை. பூபதியிடம் அன்புப் பரிசு பெற்றனர் பலர்; பூபதிக்குப் பரிசு கொடுத்துப் பெருமைப் பட்டனர் சிலர்.

அன்றிரவு தடபுடலான விருந்து! எல்லாருக்கும் சம்பிரமமான சாப்பாடு!

விருந்து முடிந்து, பத்து மணிக்குள் எல்லாரும் போய்விட்டார்கள்.

பூபதி தமக்கு வந்த பரிசுகள் வைத்திருந்த அறைக்குள் வந்தார். அவைகளைப் பார்வையிட அவருள் ஆவல் எழுந்தது. அப்பொழுது அங்கு சந்தடி எழுவது போன்று உணர்ந்தார். அவருடைய கூரிய பார்வை மூலையிலிருந்த அலமாரிக்குப் பின்னால் சென்றது. அங்கு யாரோ மறைந்திருக்க வேண்டும். அவர் இதை நிச்சயமாக உணர்ந்தார். அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து இதையும் ஊர்ஜிதப்படுத்திக் கொண்டார்.

"யாரப்பா அங்கே?" பூபதி குரல் கொடுத்தார்.

வேலைக்காரன் ஓடிவந்தான்.

"வந்த விருந்தினர்களைச் சரியாக உபசரிக்கவில்லை. இன்னும் சாப்பிட வேண்டியவர்கள் பாக்கி யிருக்கிறார்கள். உணவுப் பதார்த்தங்களைக் கொண்டுவா!" என்றார் அவர்.

வேலைக்காரன் கொண்டு வந்து வைத்தான். "யாருக்குப் படைக்க வேண்டும்?" என்றான்.

"நான் பார்த்துக் கொள்கிறேன். நீ போ!" என்று அவனை அனுப்பி விட்டார்.

"இப்படி வாருங்கள்! இங்கே அமர்ந்து இவைகளைச் சாப்பிடுங்கள். கவனக் குறைவால் உங்களை உபசரிக்காமல் விட்டதற்கு மன்னிக்கவும்" என்று பூபதி அலமாரிக்கு அருகில் நின்று சொன்னார்.

மறைந்திருந்தவன் வெளி வந்தான். அவன் ஒரு இளைஞன். அவன் உடல் நடுங்கிற்று.

அவருடைய உள்ளன்பு அவன் மனதை வாள் கொண்டு அறுத்தது. வெட்கத்தினால் அவன் முகம் சிவந்து விட்டது! அவன் வந்த காரியம் ஒன்று; ஆனால் நடப்பது ஒன்று.

பேசாமல் அமர்ந்து விருந்துண்டான் அவன். பரிதாபத்தோடு அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார் பூபதி. அவன் எண்ணம் அவருக்கு எப்போதோ புரிந்து விட்டது. பஞ்சமா பாதகத்தைச் செய்யும்படி தூண்டிவிடும் வறுமையின் கொடுமைக்கு ஆளானவன் அவன் என்பது சொல்லாமலே விளங்கிற்று அவருக்கு. அவனிடத்து அவருக்கு அன்பு தான் சுரந்தது.

"ஐயா! அன்பால் என்னை இப்படிக் கொல்கிறீர்களே! இவ்வளவு உபசாரணைக்கு நான் தகுதியுடையவன் அல்ல. ஏதோ கொடிய எண்ணம் இங்கே கொண்டு வந்து நிறுத்தி விட்டது. நான் திருடன்! நான் தண்டனைக் குரியவன்" என்று அந்த வாலிபன் கண்ணீர் பெருக்கி கதறினான்.

"தம்பி! பயப்பட வேண்டாம். வாழ்வுப் பாதையில் சறுக்கல் ஏற்படுவதும் உண்டு. நிதானித்துக் கொள்ளலாம். குற்றத்தைப் பெரிது படுத்தினால் உலகமே யில்லை. சரியான திருத்தம் தான் எப்போதும் வேண்டும். உன் மனமாசைப் பச்சாத்தாப உணர்ச்சியில் கழுவி விடு. எல்லாம் சரியாகப் போய் விடும். நல்லவனாகப் பெயரெடுக்க இன்றே உறுதி கொள். இதற்கு உறுதுணையாக என் சிறு உதவி யிருக்கட்டும்" என்று பூபதி அவ்வாலிபனிடம் நூறு ரூபாய் பணத்தைக் கொடுத்தார். வாயிற்படி வரை கொண்டு போய் விட்டு அவனை வழி யனுப்பினார்.

அவருடைய பெருந்தன்மைக்கும் பேரன்புக்கும் தலை வணங்கி நன்றி செலுத்தினான் வாலிபன்.

## வாழ்க, கல்கி!

கல்கி அமரர் ஆய்விட்டார். அவரைச் சென்ற முப்பது ஆண்டுகளாக அறிந்த எனது துயரம் பெரிது பெரிது. ஆயினும் இதனால் நாம் மனம் தளர்ந்துவிடலாகாது.

இறப்பும் பிறப்பும் இயற்கை. இறப்பு உடலுக்கேயன்றி, உயிர் நித்தியமானது. இந்த உண்மையைச் சிந்தித்து நாம் உறுதி கொள்ள வேண்டும்.

**கல்கி கிருஷ்ணமூர்த்திக்குக் 'கல்கி' பத்திரிகை சிறந்த நினைவுச் சின்னமாகும். அதனை இன்னும் வளம்பட வளர்த்துத் தமிழ் நாட்டுக்கு இன்னும் சிறந்த தொண்டு செய்யுமாறு செய்வது நமது முக்கிய கடனாகும். வாழ்க, கல்கி!**

*சென்னை 15*
*6—12—54*

பரலி சு. நெல்லையப்பன்

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஒவ்வொரு பிறந்த நாள் கொண்டாட்டத்தின்போதும் பூபதி அந்த வாலிபனை நினைத்துக் கொள்வார்.

* * *

காலை ஏடுகள் புரண்டன.

பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளுமாக அவர் குடும்பம் தழைத்தோங்கியது. அவருடைய பரோபகார சிந்தையும் புகழ்மாலை சூடி அவனியில் பவனி வந்தது.

நாள் ஆக ஆகப் பிறந்த நாள் வைபவத்தின் சிறப்புக் குன்றவில்லை. ஆண்டு தோறும் அந்த நாள் அதி விமரிசை பெற்றது.

பூபதிக்கு எழுபத்தோராவது பிறந்த நாள். எப்பொழுதையும்விட அவருக்கு நிறையப் பரிசுப் பொருள்கள் அழகழகாய் விலை மதிக்க முடியாதவையாக வந்திருந்தன. பூபதிக்கு மகிழ்ச்சியோடு பழைய நிகழ்ச்சியும் ஞாபகத்துக்கு வந்தது. அந்த வாலிபனைப் பற்றி எண்ணினார்.

கோலாகலப் பகல் கழிந்து, மனோரம்மியமான மாலைப் பொழுதும் வந்தது.

அவ்வேளை ஒரு மனிதர் பூபதியின் முன் வந்து உடல் பணிந்து, கைகூப்பி அவருக்கு வணக்கம் தெரிவித்தார்.

பூபதி எழுந்து நின்று அந்த மனிதருக்குக் கை கூப்பி வணங்கினார். தமக்கு எதிரில் இருந்த ஆசனத்தில் அவரை அமரச் செய்தார்.

புதிய மனிதர் "இதோ, என்னுடைய அன்புப் பரிசு" என்று விலையுயர்ந்த பொருள் ஒன்றை பூபதியின் கையில் கொடுத்தார்.

"ஐயா! தாங்கள் யார்?" என்றார் பூபதி.

"ஐயா, உங்கள் வீட்டில் அழைப்பின்றி வந்து விருந்து சாப்பிட்டிருக்கிறேன். அலமாரிக்குப் பின்னால் மறைந்திருந்து தங்கள் வீட்டில் கன்னமிட வந்திருந்த எனக்கு அன்னமிட்டு ஆதரவளித்தீர்கள்; அன்பொழுகப் பேசினீர்கள்; நல்லுரைகள் வழங்கினீர்கள்; பொருள் கொடுத்துப் புதிய பாதையில் திருப்பினீர்கள்" என்று கூறினார்.

"அந்த இளைஞரா நீர்! இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்றார் பூபதி.

அன்றொரு நாள் அவரிடம் பொருள் பெற்றுப் போன பின் வாழ்வில் நடந்த மாறுதலை விவரமாகச் சொல்லத் தொடங்கினார்.

"ஐயா! இங்கிருந்து போனதும், இளமைப் பருவத்தே எனக்குக் கிடைத்த இன்சொல் வழங்கிய தங்கள் அன்பு என் மடமையைக் கொன்றது. என்னிடத்து மனிதத்தன்மை புத்துயிர் பெற்று அரும்பிற்று. உழைத்து மானமாக வாழத்தான் மனம் விழைந்தது. எங்கெங்கோ எப்படியெப்படியோ சுற்றி அலைந்தேன். கூலிக்கு உழைத்தேன்; நேர்மையைக் கடைப் பிடித்தேன். சம்பாத்தியத்தை மிச்சம் பிடித்தேன். சிறுகச் சிறுக உழைப்பால் உயர்ந்து நானும் செல்வச் சீமானானேன். வறியவர்களுக்கு என்னாலான உதவி செய்தேன்; செய்து வருகிறேன். தாங்கள் என்பால் காட்டிய அன்பினைத்தான் பிறர்க்கும் நான் செலுத்துகிறேன்" என்றான் அவன்.

"தம்பி! என்னைச்சுற்றிக் குழந்தைகளும் பேரக் குழந்தைகளும் சூழ்ந்திருப்பதைக் காண்கிறாய்! இவர்களோடு நீயும் என் மகன்தான்! தந்தைக் கேற்ற நல்ல மகன்! அன்புத் தந்தை அன்பு மகனுக்கு நன்றி செலுத்துகிறார்! ஆமாம், நீதான் எனக்குக் கிடைத்த அரிய மகன்" என்று கூறி பூபதி அப்புதிய மனிதரைத் தழுவிக் கொண்டார்.

இவ்விருவருடைய வாழ்க்கையின் தத்துவத்தைக் கண்ட அங்கிருந்தவர்கள்,

"அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை"

என்ற பொய்யா மொழிக்கும் சரியான பொருளைத் தெரிந்து கொண்டனர்.

# வைதாரையும் வாழ வைத்தவர்!

சோமலெ.

தமிழ் இலக்கிய உலகில் பழைய தலைமுறை முடிந்து வருவதைக் கடந்த ஓராண்டாக உணர்ந்து வருகிறோம். திரு. வி. க., பண்டிதமணி, ரசிகமணி, கவிமணி மறைந்தனர். இத்தகைய தொண்டு கிழவர்களை ஒருவர் பின் ஒருவராகக் கொன்னை கொண்டதோடு காலன் அமைதியடைய வில்லை. அல்லும் பகலும் கடமையைச் செய்து வந்த கல்கி அவர்களையும் தன் கொடுமைக்கு ஆளாக்கி விட்டான். மறைந்தோருக்கெல்லாம் மணிமண்டபம் அமைத்த பெருமகன் மாண்டு விட்டார். அறிஞர், நடிகர், இசைப் புலவர், எழுத்தாளர் ஆகியோர்க்கெல்லாம் விளம்பரம் செய்த மேதை அமரராகி விட்டார்.

கல்கி தலைசிறந்த எழுத்தாளராக விளங்கினார். அவர் நல்ல தமிழில் எழுதினார் என்பது அதைவிட முக்கியமானது. எத்தனையோ பழந் தமிழ்ச் சொற்களையும், வழக்கொழிந்து போன பழைய தமிழ்ப் பட்டங்களையும் கையாண்டு அவற்றுக்கு உயிர் கொடுத்தார். அவருடைய நாவல்களிலும் கதைகளிலும் மேற்கோள்களாகப் பழைய பாடல்களைச் சுவைபடக் கூறினார். "முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள் மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்" என்ற தேவாரத்தைச் சிவகாமியின் சபதத்தில் தெரிவித்திருப்பது யார் மனத்தையும் விட்டு அகலாது.

வெறும் எழுத்தாளராக மட்டும் அவர் திகழ வில்லை. கல்கியை இந்தியாவிலேயே அதிகமாக விற்பனையாகும் வார இதழாக ஆக்கினார். இலங்கை வாழ் தமிழர்களின் பிரச்னைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து, அவர்களுடைய நிலையை நாடறியச் செய்த பெருமையும் கல்கிக்கு உண்டு. இலங்கையில் கல்கி அவர்களுக்கு இருந்த செல்வாக்குக்கு நிகரே யில்லை எனலாம். அந்தச் செல்வாக்கின் பயனாகத்தான் யாழ்ப்பாணத் தமிழ் விழா பெரு வெற்றியாக முடிவடைந்தது.

கல்கி அஞ்சா நெஞ்சர். தமக்குச் சரியென்று தோன்றியதை வன்மையாக ஆதரிப்பார். தவறு என்று அவர் மனத்தில் படுவதை எதிர்த்தே தீருவார். அவருடைய தமிழ் இசைத் தொண்டு வரலாற்றில் முக்கிய இடம் பெறும்.

கல்கியின் குணங்கள் மிகச் சிறப்பானவை. எளிய வாழ்வு வாழ்ந்தார். அவருடைய செல்வாக்குக்கு அவர் ஆடம்பரமாக வாழ்ந்திருக்கலாம். அவர் அவ்வாறு செய்ய வில்லை. சில மாதங்களுக்கு முன்னர் அவருடைய படத்தைக் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் திறந்து வைக்கும் பேறு எனக்குக் கிடைத்தது. அந்த நிகழ்ச்சிகளை நான் சொல்ல விரும்பினேன்! அவர் என்னை வாய் திறக்க விடவில்லை. வேறு செய்திகளைத் தெரிந்து கொள்ளவே ஆவலாக இருந்தார்.

கல்கி மாயவரத்துக்காரர். அவ் வூரிலேயே கல்வி பயின்றவர். மாயவரத்தைப் பற்றிப் பெருமிதத்தோடு பேசுவார். "ஆயிரம் ஆனாலும் மாயவரம் ஆகுமா!" என்று அடிக்கடி சொல்லுவார். எனினும், அவ்வூரில் தவறான செயல் ஒன்று நடைபெற்றதாகத் தாம் கருதியபோது, தம் கையாலேயே தம் ஊரைப்பற்றிக் கண்டித்து எழுதவும் அவர் தயங்கவில்லை.

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவர் என்ற முறையில் அவருடைய பொறுப்பு அதிகமாக இருந்தது. பணம் இல்லாத சங்கம். கட்சிப் பிரதிகட்சிகள் நிறைந்த சங்கம் — இதற்குத் தலைமை ஏற்பது எளிதா! அவருடைய செயல் திறமையும், ராஜ தந்திரமும் கோபக்காரர்களைத் தம் வயப்படுத்தி நிலைமையைச் சமாளித்துக் கூட்டத்தை இனிது நிறைவேற்றி வைக்கும் அவரது ஆற்றலும், தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர்க்கு மட்டும் தெரிந்த ரகசியம்.

நூல் வெளியீட்டு விழா, அரசியல் மாநாடு, இலக்கியத் திருவிழா, பள்ளிக்கூட ஆண்டுவிழா— எந்த நிகழ்ச்சியாக இருந்தாலும், சில வாரங்களுக்கு முன்னரே கல்கியைச் சந்தித்து அவருடைய ஆதரவைப் பெற்றுவிட்டுப் பிறகுதான் ஏற்பாடுகளைத் தொடங்குவது என்ற மரபு தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் இருந்து வந்தது. இதற்குக் காரணம் தம்முடைய செல்வாக்கு அனைத்தையும் அவர் நல்ல காரியங்களுக்குப் பயன்படுத்தி வந்ததே ஆகும். ஆக்க வேலைகளில் அவருக்கு அத்தனை ஈடுபாடு!

இத்தனைக்கும் மேலாக அவரிடம் வைதாரையும் வாழ வைக்கும் பெருங் குணம், சிறந்த பண்பு தலைதூக்கி நின்றது. எதிர்க் கட்சிக் காரராயிருந்தாலும் தக்காரைத் தாங்கும் இயல்பு அவரிடம் நிறைந்து இருந்தது.

தமிழ் வளர்ச்சிக் கழகத்துக்கு அவர் உறுதுணையாக இருந்தார்.

அவரைப் பிரிந்து நிற்கும் அன்பர்களுக்குத் தமிழ் நாடு ஆறுதல் கூறும்; ஆதரவும் தரும்.

# வாழ்க, கல்கி!

❖ பாரதன் ❖

இருபத்தைந்து வருஷங்கள்; நேற்றுப் போல் இருக்கிறது. திருச்செங்கோட்டுக்கு அருகில், ஒரு பொட்டல் காட்டில், ஓர் ஆசிரமம், பாலைவனத்து நடுவில் உள்ள பசுந்திடல் போல். புதுப்பாளையம் என்ற சிறு கிராமத்தில் அமைந்த இந்த ஆசிரமத்தின் மாமுனிவர் அந்தக் காலத்தில் 'ஆச்சாரியார்' என்று மரியாதையுடன் அழைக்கப்பட்ட ராஜாஜி அவர்கள். இந்த ஆசிரமத்தைப் பார்க்கச் செல்லும் பாக்கியம் மாணவாசிரமத்திலிருந்து உத்தியோகப் படலத்தில் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த எனக்குக் கிடைத்தது. ஆசிரமத்தில் ஓரிரண்டு நாள் தங்கும் வாய்ப்பும் கிடைத்தது. தங்கின அந்தக் குறுகிய காலத்தில் ஆசிரமவாசிகளின் பரிச்சயமும் ஏற்பட்டது. அவர்களில் ராஜாஜியின் அபிமானத்துக்குப் பாத்திரமான ஒரு சீடர் எனக்கும் என் நண்பருக்கும் ஆசிரம விருந்தளித்தார். அவர் பெயர் ரா. கிருஷ்ணமூர்த்தி என்றறிந்தோம். ராஜாஜி அப்பொழுது ஈடுபட்டிருந்த மதுவிலக்கு இயக்கத்தைப் பிரசாரம் செய்யும் "விமோசனம்" பத்திரிகையை ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி நடத்தி வந்ததாக அறிந்தோம். அன்று எனக்கு அன்னமளித்தவர் பிற்காலத்தில் எனக்குத் தமிழ்ப் பாலூட்டி வளர்க்கப் போகும் குருநாதர் ஆகப்போகிறார் என்பதை அப்போது நான் நினைக்கவில்லை.

சில வருடங்களுக்குப் பிறகு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சென்னையில் வந்து குடியேறியதும், ஆசிரமத்தில் ஆரம்பித்த நட்பு தொடரப்பட்டது. பல சந்தர்ப்பங்களில் அவரைச் சந்திக்கவும் நேர்ந்தது. ஸ்ரீ வாஸனுடன் சேர்ந்து அவர் "ஆனந்த விகட"னைப் பிரபலமாக்கினார். அந்தப் பத்திரிகையில் அவர் எழுதும் கட்டுரைகளையும் கதைகளையும் படிப்பது ஒரு தவிர்க்க முடியாத வழக்கமாகி விட்டது. அது முதல் தமிழில் சுவை ஏற்பட்டது. கலாசாலைப் படிப்பிலும் ஆங்கில பத்திரிகைகள் புத்தகங்கள் மூலமும் கற்றறியாத பல விஷயங்களைக் கல்கியின் கட்டுரைகள் மூலம் எளிதில் அறிந்து கொண்டேன். சிறிது காலத்துக்குள் இது ஒரு புது ஊக்கத்தைக் கிளறி விட்டது. தமிழில் நாமும் எழுத வேண்டும் என்ற அவாப் பிறந்தது. ஆனால் அதற்குத் தகுந்த தமிழ்ப் படிப்பும் இலக்கண ஞானமும் இல்லாததால், தயக்கமும் அச்சமும் குறுக்கிட்டன. கடைசியில் ஒரு நாள் தைரியமாகப் பேனாவை எடுத்து ஒரு கட்டுரையை வரிந்து தள்ளி விட்டேன்; அதை "ஆனந்த விகடன்" ஆசிரியருக்கும் அனுப்பி விட்டேன். அனுப்பிய பிறகு பரீட்சை எழுதி விட்டு வந்த மாணவன் போல் தத்தளித்தேன். எழுத்தில் எவ்வளவு பிழைகளோ! எவ்வளவு குற்றங்களோ! கட்டுரை பிரசுரமாவதற்கு யோக்கியதை உண்டென்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. அதிசயம் ஆனால் உண்மை — அந்தக் கட்டுரையைப் பத்திரிகையில் போட்டே விட்டார் ஆசிரியர் கல்கி! அதோடு மட்டுமில்லை. மறுமுறை அவரைப் பார்த்த போது என் கட்டுரையைப் புகழவும் ஆரம்பித்து விட்டார்; உற்சாகமும் ஊட்டினார்.

இது அவருடைய மேன்மையான குணங்களில் ஒன்று என்பதற்கு என்னுடைய அநுபவத்தில் உதாரணம்.

மேற்கூறிய என்னுடைய தமிழ் அரங்கேற்றம் நடந்த சிறிது காலத்திலேயே என் வாழ்க்கையிலேயே ஒரு பெரும் மாறுதலுக்குக் காரணமாக இருந்தவர் கல்கி. என்னைச் சட்டத் தொழிலுக்குப் படிக்க வைத்தனர் என் பெற்றோர்கள். ஆனால் என் உள்ளந்தரங்கத்தில் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட என் இளம் மனம் ஏங்கிக் கொண்டிருந்தது. என்றாலும், தமிழ் எழுத்தாளனாக ஆகக்கூடும் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. அந்தக் காலத்தில் கதர் இயக்கத்தில் சற்று ஈடுபட்டிருந்த என்னை, "ஆனந்த விகடன்" பத்திரிகையில் சேரும்படி அழைத்தார் கல்கி. அதை ஓர் எதிர்பாராத அதிர்ஷ்டமாகக் கருதிய எனக்குச் சம்மதிக்க என்ன ஆட்சேபனை இருக்க முடியும்? உடனே ஒப்புக் கொண்டேன். என் கனவு நனவாகியது.

* * *

சிலருக்கு ஒரு தனி கைராசி உண்டு; வைத்தியர்களுக்கு இதை அதிகம் சொல்வார்கள். மற்றத் துறைகளிலும் இவ்வாறு கைராசியுள்ளவர்கள் உண்டு. இந்தக் கைராசி கல்கிக்கு இருந்தது. அவரிடம் பயிற்சி பெற்ற எழுத்தாளர்கள் பலர் பிரபலமடைந்திருப்பதைக் கண்டு களித்தார் அவர்.

இந்தக் கைராசி அவருக்கு இலக்கியத் துறையில் மட்டுமல்ல; கலைத் துறையிலும் இருந்தது. "கர்நாடக" கலை விமர்சனங்கள் தனி பொக்கிஷம் என்பது மட்டுமல்ல. அவற்றால் பயனடைந்தவர்கள் கலைத் துறையில் இன்று அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறார்கள். இளம் கலைவாணர்கள் மட்டுமல்ல; பிரபலமடைந்த வித்துவான்கள்கூட அவருடைய விமரிசனங்களால் பயனடைந்திருக்கிறார்கள் என்பது உண்மை.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியவர்களின் கலை விமர்சனங்கள் தனிப் பெருமை வாய்ந்தன என்றிருந்தாலும், அவர் அத்தகைய விமர்சனக் கலையைத் தம் தனி உரிமையாகக் கொண்டாடவில்லை. ஒரு சமயம் சென்னைக்கு வட இந்தியாவிலிருந்து ஒரு பிரசித்தி பெற்ற நடன மாதும் அவரது கோஷ்டியும் வந்திருந்தனர். வழக்கம் போல் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அந்த நடனக் கச்சேரிக்கு விமரிசனம் எழுதுவார் என்று எதிர்பார்த்

தேன். ஆனால் அவர் "இந்த விமரிசனத்தை நீங்களே எழுதுங்கள்" என்றதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "நான் எப்படி எழுதுவது? கலையில் நான் நிபுணன் இல்லையே!" என்றேன். "அதனால்தான் சொல்கிறேன். நான் மட்டும் நிபுணனா? நமக்கு வேண்டியது நிபுண விமரிசனம் இல்லை" என்று கூறினர். ஆசிரியர் சொல் தட்ட முடியாமல் மறு நாள் ஏதோ ஒரு விமரிசனத்தை எழுதிக் கொடுத்தேன். "பேஷாக இருக்கிறது. இப்படித்தா னிருக்கவேண்டும்" என்று அதை அப்படியே பத்திரிகையில் போட்டு விட்டார். அவர் கொடுத்த உற்சாகம் எனக்குத் தன்னம்பிக்கை ஊட்டியது.

"கர்நாடக" விமரிசனங்கள் கலை ரஸிகர்களுக்கு மட்டும் உகந்ததோடில்லாமல் பெரும்பாலும் பாமரர்களுடைய அபிப்பிராயத்தையும் பிரதிபலித்தன.

* * *

கல்கியின் பிரசித்தி பெற்ற ஹாஸ்யச் சுவை அவருடைய எழுத்தில் மட்டுமல்ல; பேச்சிலும் பொங்கிக் கொண்டிருந்தது. அவருடைய பிரசங்கங்களைக் கேட்பவர்களைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைப்பார். ஆனால் அது "வெத்து ஹாஸ்ய"மாக இராது. விஷயத்துக்குப் புறம்பாகவும் ஓடாது. விஷயத்தை நன்ருகப் பதியும்படி செய்யும் ஹாஸ்யம் அது. சமீபத்தில் கவிமணி மறைவு சம்பந்தமாக நடந்த கூட்டம் ஒன்றில் அவர் எதிர்பாராத ஒரு ஹாஸ்யத்தை வெளியிட்டார். அப்போது, அந்த துக்கத்தில் ஆழ்ந்து அங்கு கூடி யிருந்தவர்களைக்கூட அது சிரிக்க வைத்தது. ஆனால் இவ்வளவு சீக்கிரம் அது எல்லோரையும் அழ வைக்கும் ஹாஸ்யமாக மாறும் என்று யார் எதிர்பார்த்திருப்பார்கள்! கவிமணி மறைவு அனுதாபக் கூட்டத்தை அவசரமாகக் கூட்டியதற்குக் காரணம் கூறுகையில் "ஏன் இவ்வளவு அவசரமாக இந்தக் கூட்டம் கூட்டுகிறீர்கள்? கொஞ்சம் தள்ளிப் போடக் கூடாதா என்று என்னைக் கேட்டார்கள். ஆனால் காலம் போகிற போக்கில் எது எப்படியாகுமோ என்றுதான் உடனேயே கூட்டம் போட்டோம். திரு வி. க. போய் விட்டார்; டி.கே.சி. போய் விட்டார்; கவிமணி போய் விட்டார்; குமாரசாமி திடீரென்று போய் விட்டார். இப்படித் திடீர் திடீர் என்று எல்லோரும் போய்க் கொண்டிருப்பதைப் பார்த்தால் நமக்கு ஏதாவது நேருவதற்கு முன் நமது கடைசி மரியாதையை நாம் செலுத்திவிட வேண்டும் என்றுதான் இந்தக் கூட்டத்தை அவசரமாகப் போடச் சொன்னேன்" என்ருர். அவர் சொன்ன வாக்கு இவ்வளவு சீக்கிரம் இந்தமாதிரிப் பலிக்கும் என்று அன்று சிரித்தவர்களுக்கு எப்படித் தெரியும்!

* * *

வாக்கில் மன்னன் கல்கி; வசன நடையோடு மட்டும் அவரது திறமை நின்றுவிடவில்லை. பாட்டுக் கவனம் செய்வதிலும் அவருக்குத் திறமை யுண்டென்பது பலருக்குத் தெரியாதிருக்கலாம். மதுவிலக்குப் பிரசார நாட்களிலிருந்தே இந்தத் திறனை அவர் பயன் படுத்தினர். சென்ற சில ஆண்டுகளில் அவர் இயற்றிய பாட்டுக்கள் பல (அவருடைய பெயர் தெரியாமலே) சங்கீதக் கச்சேரிகளில் பிரபலமாகி இருக்கின்றன; வெள்ளித் திரையிலும், நாட்டிய மேடையிலும் பிரகாசித்திருக்கின்றன; ஒலித் தட்டுகளிலும் ஒலிக்கின்றன.

மாலைப் பொழுதினிலே, வண்டாடும் சோலைதனிலே, காற்றினிலே வரும் கீதத்தை நமக்குக் கொடுத்த கல்கி வான ஜோதியில் கலந்து விட்டார்.

நாட்டுக்கும், தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் பெரும் சேவை செய்த இந்த வாக்கு வேந்தனின் மறைவை நாம் எப்படி ஈடுபடுத்த முடியும்? மன்னன் மறைந்ததும் நாடு சூன்னியமாகிறது; மக்கள் அநாதைகளாகிருர்கள். ஆனால் அரசன் மாண்டால், "மாண்டான் மன்னன்; வாழ்க மன்னன்" என்று பிரகடனம் செய்வது ஒரு மரபு.

கல்கி தம் பெயரையே தம் பத்திரிகை மூலம் நமக்கு அரிய சொத்தாக வைத்துப் போயிருக்கிருர். அந்தப் பத்திரிகை என்றும் அவருக்கு ஓர் அழியா ஞாபகச் சின்னமாகத் தமிழகம் பூராவும், ஒவ்வொரு தமிழன் இல்லத்திலும் உள்ளத்திலும் அமையும்படி, தொடர்ந்து நடக்க வேண்டும். இது நமது பொறுப்பு; ஆனால் நம்மைப் பொறுத்த வரையில் பளுவானதல்ல; எளியதுதான். இதுவரை தமிழ் மக்கள் கொடுத்து வந்த ஆதரவை இன்னும் பன்மடங்காகப் பெருக்கிக் கொடுக்க வேண்டும். பத்திரிகையை நடத்தும் பாரமோ, பொறுப்போ திறமையுள்ள கைகளில் தானிருக்கிறது.

கல்கி அவர்கள் இந்தப் பத்திரிகை ஆரம்பிப்பதற்கு ஊக்கமும் உற்சாகமும் உதவியுமளித்த அவரது நண்பர் ஸ்ரீ சதாசிவம் இருக்கிருர். சென்ற முப்பது வருஷ காலமாகக் கல்கியின் நெருங்கிய நண்பராக இருந்திருப்பவர். அவருடன் விடுதலைப் போர்களில் சிறை சென்றிருப்பவர். கடைசியாக மகாத்மாவின் தலைப்பட்ட சத்தியாக்கிரக இயக்கத்தில் கல்கி சிறை செல்வதற்கு முன் இந்தப் பத்திரிகை ஆரம்பிப்பதற்குத் தைரியம் கொடுத்து, "நீங்கள் சிறைக்குப் போய்த் திரும்பி வருவதற்குள் நான் பத்திரிகைக்கு ஏற்பாடு செய்து வைத்திருக்கிறேன்" என்று கொடுத்த வாக்கை நிறைவேற்றியவர். பதின்மூன்று வருஷங்களாகக் கல்கி பத்திரிகையை வெற்றிகரமாக நடத்துவதற்கு மூலகாரணமாக இருந்திருப்பவர். ஸ்ரீ சதாசிவமும் அவரது சகாக்களும் கல்கியின் ஞாபகார்த்தமாகப் பத்திரிகையைத் தொடர்ந்து நடத்துவார்கள் என்பதில் சந்தேகமில்லை; ஆகவே அதைப் பற்றிக் கவலையில்லை. வாழ்க, கல்கி!

# "கல்கி" என்னும் காந்த சக்தி



## தேவன்

இன்று 'தேவன்' என்ற பெயரில் நான் எழுதி வருகிறேன் என்றால், அந்தப் பெயரை எனக்குச் சூட்டியவர் "கல்கி" அவர்களே. பத்திரிகை உலகிலே என்னை வருமாறு அழைத்தவரும் அவர்களேதான். "கல்கி" எழுதிய இரு கடிதங்கள் என்றென்றும் என்னிடம் பொக்கிஷங்களாக இருக்கின்றன. விளையாட்டாக நான் ஒரு கட்டுரை "மிஸ்டர் ராஜாமணி" என்ற தலைப்பில் 'ஆனந்த விகட'னுக்கு எழுதி அனுப்பி, அதை யாரும் கவனிக்க மாட்டார் என்று அசிரத்தையாக இருந்த சமயத்தில் ஆசிரியர் கல்கி அவர்களிடமிருந்து முதலில் கடிதம் வந்தது.

அன்புடையீர் !

உங்கள் கட்டுரை மிஸ்டர் ராஜாமணியை "விகட"னில் பிரசுரிக்க உத்தேசித்திருக்கிறோம். உங்களுடைய கட்டுரைகளின் நடையும் போக்கும் "விகட"னுக்கு ஏற்றதாக இருக்கின்றன. சாதாரணமாகக் காணப்படும் இலக்கணப் பிழைகளை நீக்கி எழுதப் பயிலுவது தங்களுக்கு நலம். தங்கள்.

ரா. கிருஷ்ணமூர்த்தி

இதற்கு ஆறுமாதங்களுக்குப் பிறகு நான் பட்டமளிப்பு விழாவுக்குச் சென்னைக்கு வந்திருந்தேன். 'ஆனந்த விகடன்' காரியாலயத்தில் "கல்கி" என்பவர் எப்படி இருப்பார் என்று பார்க்கவே காரியாலயத்தினுள் நுழைந்தேன். பார்வைக்கு மிக எளிமையுடனும், பேச்சில் வெகு சௌஜன்யமாகவும் இருந்த "கல்கி"யைக் கண்டு, "இவரா இத்தனை அற்புதமாக எழுதுகிறார்!" என்று நான் ஆச்சரியப்பட்டது உண்மை. நான் அறிமுகம் செய்து கொண்டதும், என்னை உட்காரச் சொல்லி அவர் முதல் முதலாகக் கேட்ட கேள்வி எனக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது. "கட்டுரை எழுதினீர்களே! அது நீங்களேதான் எழுதினதா! உங்கள் தகப்பனார், மற்றும் யாராவது உதவி செய்தார்களா!" என்று அவர் கேட்டார்.

"நானேதான்!" என்று சற்றுக் கடுமையாகவே பதில் சொல்லியதும், அவர் சிரித்துக் கொண்டே, "எதற்குக் கேட்டேன் என்றால், இந்த ஊரில் இருந்து கொண்டே எழுதலாமா என்பதற்குத் தான்!" என்றார்.

அதற்கு மறு நாள் அவர் கைப்பட எனக்கு ஒரு கார்டு வந்தது. நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை அதை. 'தங்களுக்கு "விகடன்" காரியாலயத்தில் சேர்ந்து சேவை செய்யச் சம்மதம் இருக்குமானால் புதன்கிழமை காலை பதினொரு மணிக்கு வரவேணுமாய்க் கோருகிறேன்' என்ற விஷயம் அதில் வந்தது. அது முதல் ஒன்பது வருஷங்கள் நான் "கல்கி" அவர்களின் அருகிலே இருந்து பணி செய்யும் பெருமை பெற்றேன். என்னைப் போன்று விளக்கும் எழுத்தாளர்கள் தமிழ் நாட்டில் எத்தனை எத்தனையோ பேர் இன்று இருக்கலாம். எனினும், அன்றுடம் அவரிடம் பயிற்சி பெற்ற பாக்கியம் எனக்கு அந்த நாளில் கிட்டியது.

"கல்கி"யின் மிகப் பெரும் சக்தி என்னவென்று என்னைக் கேட்டால், பிறரிடம் அவர்களே அறியாது உள்ள திறமையை அறிந்து கொள்வது தான். "கல்கி" என்னை எழுத்தாளன் என்று சொல்லியிரா விட்டால், இன்று நான் இந்தத் துறையில் நிச்சயமாக இருக்க மாட்டேன். அவருடைய உத்ஸாகம் அளிக்கும் முறையே விசித்திரமாக இருக்கும்.

"கல்கி" அவர்கள் ஆசிரியர் ஸ்தானத்திலே அமர்ந்திருந்தார். எனினும், அவருக்குத் தெரியாத அலுவல் காரியாலயத்திலே நடக்காது. தெரிந்து கொள்ள வேண்டும் என்று பிடிவாதமாகவும் இருப்பார். இந்தச் சமயத்தில்தான் எனக்கு அவருடைய மனோதர்மத்தின் நிடத்தைத் தெரிந்து கொள்ள முடிந்தது. முக்கியமான தலையங்கம் எழுதிக் கொண்டிருப்பார். இடையே ஒரு 'டெலிபோன்' வரும். பேசிவிட்டுத் தொடங்குவார்! ஒரு நண்பர் அல்லது பிரமுகர் வருவார்; அவரை அனுப்பி விட்டு மேலும் தொடர்ந்து சிறிது எழுதுவார். அப்போது சித்திரக்காரர் படத்தைக் காட்டுவார். ஒரு கண்ணோட்டத்தில் இருபது அபிவிருத்திகள் சொல்லிவிட்டுத் தொடங்குவார்......இது போன்ற அநேக தடைகளினாலும், அவர் எண்ண ஓட்டம் பாதிக்கப் பட்டதில்லை.

அவருடைய மனோதர்மத்தை ஒரு ரேடியோவுடன் ஒப்பிட்டுச் சொல்லலாமா என்றுகூடத் தோன்றியிருக்கிறது. ஒரு ஹாஸ்யக் கட்டுரை எழுதி முடித்திருப்பார்; உடனே தொடர் கதையை எடுத்து வைத்துக் கொள்வார்; ஒரு அரசியல் சம்பந்தமான சிறு தலையங்கம் அடுத்தபடி எழுதி விட்டுத் 'துக்கடா'க்களில் கவனம் செலுத்துவார். அப்புறம் ஒரு சங்கீதக் கச்சேரி விமர்சனமும் நடந்து விடும். ஒவ்வொன்றும் ஒவ்வொரு நடை, ஒவ்வொரு பாணி! ரேடியோவிலே வெவ்வேறு 'ஸ்டேஷன்'களைத் திருப்பி, சட் சட்டென்று விதம் விதமான நிகழ்ச்சிகளைக் கேட்பது போலவே, அவருடைய பேனா அற்புதமான சக்தி பெற்று இயங்கியது

ஒரு 'புரூப்' பார்ப்பதில் கூட, "கல்கி"யின் கைபட்டு வந்தால் ஒரு விசேஷம் உண்டு. நிறையத் திருத்துவார்; திரும்பத் திரும்பத் திருத்துவார்; மாற்றுவார்; அடிப்பார். ஆனாலும்,




அதிலே எல்லாம் ஒரு கணக்கு இருக்கும். திருத்தம் மிக இருப்பதுபோல் காணப்பட்டாலும், அந்தந்த இடத்தில் அப்படி அப்படி விஷயம் போய் உட்காரும் ஒரு ஜாலம், அதிலே உண்டு. தமிழ்ப் பத்திரிகைகளுக்கு ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளைப் பற்றி எவ்வளவோ சொல்லலாம். எழுத்துப் பிழை இலக்கணப் பிழை, இன்றிப் பத்திரிகையைக் கொண்டுவர முடியும் என்று நிரூபித்துக் காட்டியவர் "கல்கி". தமிழ் மொழிக்குச் செய்த ஒரு பெரிய சேவை அது.

இன்று தமிழ் நாட்டில் ஏராளமான எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு ஒரு சிலரே பத்திரிகைகளுக்கு எழுதினார்கள். "கல்கி" அந்த நாளில் இளம் எழுத்தாளர்களுக்கு எண்ணற்ற கடிதங்கள் எழுதியிருக்கிறார். ஏதேனும் ஒரு கதையில் கட்டுரையில் எங்கேனும் ஓர் அம்சம் நன்றாக இருந்தால், ஒரு கடிதம் எழுதி மாற்றி அமைக்கச் சொல்வார். அல்லது, அவரே திரும்ப எழுதிப் பிரசுரித்தும் உத்ஸாக மூட்டியிருக்கிறார். மிக மிகக் கிறுக்கல் எழுத்துக்களில் எழுதப்பட்ட கட்டுரைகள் எனினும், அவரே பிடிவாதமாக வாசிப்பதுண்டு. 'எழுத்து நன்றாயில்லை என்றால், விஷயம் இராதென்று ஒத்துக் கொள்ள முடியாது!' என்று கையெழுத்துப் பிரதிக்கு மரியாதை கொடுத்தவர் "கல்கி". அப்படியெல்லாம் எழுத்தாளர்களை வளர்த்தார். ஒரு சமயம் ஒரு எழுத்தாளரின் கதையின் முன் பகுதி நன்றாக இருந்தது. "பின் பகுதியை உங்கள் இஷ்டப்படி மாற்றிக் கொள்ளுங்கள்" என்று அவர் சொல்லிவிட்டார். "கல்கி" அதை ஒரு "பாதிக் கதைப் போட்டி"யாக வைத்து, சிறந்த முறையில் பின்பகுதியை முடிப்பவருக்கு ஒரு பரிசும் வழங்கினார்.

"கல்கி"யிடம் என் பக்தி ஒரு புறம் இருக்க, ஒரு பயமும் உண்டு. 'இத்தனை பெரிய எழுத்தாளரிடம் எப்படி நாம் எழுதுவதை வைப்பது!' என்று நான் அஞ்சியிருக்கிறேன். ஒரு சமயம் இப்படித்தான் பயந்து கொண்டு, "எங்கள் ஊர்ச் செய்திகள்" என்று ஒரு கட்டுரையை வைத்து விட்டு, கீழே அச்சாபீஸுக்குள் அடைக்கலம் புகுந்து கொண்டேன்.

சற்று நேரத்துக்கெல்லாம் கல்கி கூப்பிட்டார். போனேன். என் கட்டுரையைக் கையில் சுருட்டி வைத்துக் கொண்டு, "இதை நீயா எழுதினே!" என்றார். "ஆமாம்!" என்று சொன்னேன். "நீ போகலாம்!" என்றார்.

சற்று நேரத்துக் கெல்லாம் "கல்கி" ஒரு உபய குசலோபரி எழுதிக் கொண்டிருந்தார். 'ஷீட்' 'ஷீட்'டாக அச்சகத்துக்கு வந்து கொண்டிருந்தது. நான் படித்துப் பார்த்தேன். "இந்த இதழில் 'எங்கள் ஊர்ச் செய்திகள்' என்றொரு கட்டுரை பிரசுரமாகியிருக்கிறது. நேயர்கள் அதை மிகவும் ரஸிப்பார்கள் என்று நான் அறிவேன். அதை எழுதியவர் இருபது வயது நிரம்பாத ஓர் இளைஞர் என்றால் எத்தனை ஆச்சரியப்படுவீர்கள் என்றும் நான் அறிவேன்......" இதைப் படித்தபோது—இன்றுபோலவே—அன்றும் நான் கண்ணீரைக் கொட்டி விட்டேன். எத்தனை பெரிய அறிமுகம்!

ஹாஸ்ய எழுத்தாளர் மட்டும் இல்லை "கல்கி." வாழ்க்கையிலும் ஹாஸ்யத்தை அனுபவிக்கக் கூடிய பண்பு உண்டு. அப்போது நடந்த ஒரு சம்பவம் ஞாபகம் இருக்கிறது. ஒரு சிறுவர்—படப் போட்டி "விகட"னில் பிரசுரமாகி, ஒரு குழந்தைக்கும் பரிசு அறிவிக்கப்பட்டது. அதன் பின் ஒருவர்—40 வயதிருக்கும்.—வெகு கோப

மாகக் காரியாலயத்துக்கு வந்தார். "ஆசிரியரைப் பார்க்க வேண்டும்! உடனே பார்க்க வேண்டும்! என் குழந்தை போட்ட படத்துக்குப் பரிசு கொடுக்காமல், வேறு யாருக்கோ கொடுத்ததற்குப் பதில் சொல்லட்டும்!" என்று கூச்சல் போட்டார். அப்போது பாலர் பகுதி பூராவும் நானே கவனித்துக் கொண்டேன். எனக்கு மனத்துக்குள் நடுக்கம்; அந்த ஆசாமியின் குரலே பயங்கரம்.

ஆசிரியர் வந்தார், குறிப்பிட்ட படத்தை எடுக்கச் சொன்னார். எடுத்துக் கொடுத்தேன்.

"ஆமாம்! இந்தப் படத்தைவிட வேறு யாரும் நன்றாகப் போட்டிருக்க முடியாது என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றார் ஆசிரியர்.

"அப்படியா! இதைவிட நன்றாக யாரால் போட முடியும்? இதை நானே போட்டிருக்கிறேன்!" என்றார் ஆசாமி.

"கல்கி" சிரித்து விட்டு, "இது ரொம்ப நன்றாக இருக்கிறது. அதனால்தான் இதற்குப் பரிசு கொடுக்கவில்லை!" என்றார்.

"ஏன்?"

"இதை நீங்களே அல்லவா போட்டதாகச் சொல்கிறீர்கள்! போட்டி பன்னிரண்டு வயது நிரம்பாத குழந்தைகளுக்கல்லவா வைத்தோம்!" என்று சொன்னார் கல்கி.

அந்த ஆசாமி நாலைந்து முறை வாயைத் திறந்து மூடினார். குரல் வரவில்லை. அங்கிருந்து எழுந்து வேகமாக வெளியேறினார்.

எந்த இடத்தில் தவறு என்று தெரிந்து கொள்வதில் "கல்கி"க்கு நிகர் அவரேதான். எங்கே தவறு நேரிடும் என்று எதிர்பார்க்கும் திறன் அவரிடம் இருந்தது. பிறருடைய தவறை எடுத்துக் காட்ட அவர் தயங்கியதில்லை. சர்ச்சைகளில் இறங்கி விட்டால், பேனா வாள் வீச்சுகளை நிகர்த்து ஓடும்; பறக்கும்; அந்தப் போர்க்களத்தில் தலை காட்டினால் அம்புமாரி பொழியும். அதே பேனா அமுதத்தை நிரப்பிக் கொண்டு அன்பையும் சொரியும். அவருடைய விமர்சனங்களினால், புத்தக சாலைகள் நிரம்பியிருக்கின்றன; சங்கீத நடன சபைகள் ஓங்கியிருக்கின்றன.

துவேஷ மனப்பான்மை என்பது "கல்கி"யிடம் காண முடியாத ஒரு பொருள். காலையில் அவர் வந்தவுடன் பார்ப்பதற்கு மேஜையின்மீது எல்லாப் பத்திரிகைகளும் இருக்க வேண்டும். அச்சிட்டு வந்த எந்தப் பத்திரிகையானாலும், அவர் படிக்காமல் இருப்பதில்லை; தாமும் படிப்பார்; இதரர்களையும் படிக்கத் தூண்டுவார்; "ஒரு எழுத்தாளன் முதலில் கற்றுக் கொள்ள வேண்டியது, மற்றவர் எழுதுவதைப் படிப்பதுதான்!" என்று எங்களுக்குப் புத்திமதி சொல்லியிருக்கிறார்.

சுமார் மூன்று மாதங்களுக்கு முன் என் அதிபர் பங்களாவில் ஒரு நாட்டியக் கச்சேரி நடந்தது. அன்று கல்கியும் வந்திருந்தார். விருந்துக்குப் பின் ஹாலுக்கு வந்தபோது என்னைக் கவனித்தார்.

"மகாதேவன்! உன் பிரயாணக் கட்டுரைகள் தவறாமல் படித்துக் கொண்டு வருகிறேன். நிறைய விஷயம் சேர்த்துக் கொண்டு வந்திருக்கிறாய்!... பேஷ்!...கல்கத்தாவின் மேல் வருவதுடன் 'டக்' கென்று நின்று விட்டாய்!......இன்னும் ஒரு வாரம் வரும் என்று நான் எதிர்பார்த்தேன்."

நான் நன்றிப் பெருக்கினால் நின்று கொண்டு இருந்தேன். 'கல்கி' மற்ற எழுத்தாளர்களின் எழுத்தைப் படிப்பதை நிறுத்தவில்லை என்று நான் அறிந்து கொண்டேன்.

'கல்கி' ஒரு காந்த சக்தி. அந்த சக்தி எழுத்தாளர் உலகத்திலே என்றும் இருக்கும்.




பொன்னி நதியின் கரையிலே தோன்றிய கல்கி ஆசிரியர் தம் வாழ்நாள் முழுதும் பொன்னி நதியின் சிறப்பை எழுதி எழுதி மகிழ்ந்தார். பொன்னி நதி உணவூட்டிப் பாலித்த பழம் சோழப் பேரரசர்களைப் பற்றி நீண்ட தொடர் கதைகளை எழுதி மகிழ்வித்தார். அந்தப் பொன்னியின் அருமைப் புதல்வர் கல்கியின் புனித அஸ்தி அந்தப் புண்ணிய நதியில் கரைக்கப்பட்டது!

"கல்கி" அவர்களின் அஸ்தியில் ஒரு பகுதியைக் காவேரி நதியில் இடுவதற்காக அவருடைய உறவினர் ஸ்ரீ கோபாலன் அவர்கள் சென்ற 10-12-54ல் மாயூரத்துக்குக் கொண்டு சென்றார். மாயூரம் நகர சபைத் தலைவர் ஸ்ரீ வரதாச்சாரியார், சட்ட சபை உறுப்பினர் ஸ்ரீ நாராயணசாமி நாயுடு, ஸ்ரீ வெங்கு செட்டியார், ஸ்ரீ ஆர். கே. சுப்ரமணிய பிள்ளை, திருவெண்காடு சுப்ரமணிய பிள்ளை முதலியவர்கள் அஸ்திக்கு மாலையிட்டு மரியாதையுடன் வரவேற்றனர். பின்னர் பொதுக் கூட்டம் நடக்கும் இடமான காவேரி துலாக் கட்டத்துக்குக் கல்கி அவர்களின் அஸ்தியை ஊர்வலமாக எடுத்துச் சென்றனர்.

ஸ்ரீ கனகசபைச் செட்டியார் அவர்கள் தலைமையில் பொதுக் கூட்டம் நடந்தது. "கல்கி" அவர்களின் அரசியல் சேவையையும், எழுத்துச் சேவையையும் பல்வேறு துறைகளில் அவர் ஆற்றிய தொண்டுகளையும் தலைவர் விவரமாக எடுத்து விளக்கிய பின்னர், ஸ்ரீ இஸ்மாயில், ஆசிரியர் கோவிந்தசாமி பிள்ளை, ஸ்ரீ ஹரி கிருஷ்ணசாமி நயினார், பிரபல மளிகை வியாபாரி கே. எஸ். அருணாசலமய்யர் முதலியவர்கள் "கல்கி" அவர்களின் சேவையைப் பெரிதும் பாராட்டிப் பேசினார்கள்.

பின்னர் ஸ்ரீ ஜி. நாராயணசாமி நாயுடு அவர்கள் தமக்கும் கல்கிக்கும் உள்ள நீண்ட நாள் தொடர்பைப் பற்றிப் பேசினார். 1932-ல் கல்கி அவர்களும் 'கல்கி' மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவம் அவர்களும், சிறு சிறு புத்தகங்களை வெளியிட்டு, எப்படி அரசியல் விழிப்பை உண்டாக்கினார்கள் என்பதையும், 1941-ல் தனி நபர் சத்தியாக்கிரஹத்தில் தாம் உத்தேசித்த இடத்தையும், தேதியையும் 'கல்கி' அவர்கள் தம்மைக் கேட்டதையும் விளக்கினார். 'கல்கி' இந்நகரில் பிறந்து இந்நகருக்கே ஒரு தனிப் பெருமையை அளித்துள்ளார் என்பதையும் கல்கி அவர்களின் ஒரே ஞாபகச் சின்னமான 'கல்கி' பத்திரிகையை ஆதரிக்க வேண்டியது மக்களின் கடமையெனவும், அப்பத்திரிகையைத் தரம் குன்றாமல் நடத்த வேண்டிய பொறுப்பு அவருடைய பேரன்பர் ஸ்ரீ சதாசிவம் அவர்களுடையது என்றும் கூறினார். பிறகு அனுதாபத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது!

இதற்குப் பிறகு கல்கி அவர்களின் அஸ்தி காவேரியில் கலக்கப்பட்டது! "பொன்னியின் செல்வனை" நமக்குத் தந்த கல்கி அவர்கள் பொன்னியில் கலந்த செல்வரானார்.

கல்கி அஸ்தி காவேரியில் கலக்கப்பட்ட நிகழ்ச்சியை மேலே படத்தில் காணலாம்.

[போட்டோ: எம். பி. எஸ். மணியன்.]




தேசத்தின் பல பகுதிகளிலிருந்து அனுதாபச் செய்திகள் வந்து கொண்டிருக்கின்றன!

தேசமெங்கிலும் உள்ள பெரியோர்கள் சிறுவர்கள், ஆடவர்கள், பெண்கள், கலைஞர்கள், கலாரஸிகர்கள், இலக்கிய அன்பர்கள், அரசியல் நிபுணர்கள், சித்திரக் கலைஞர்கள், எழுத்தாளர்கள், வாசகர்கள், முதலாளிகள், தொழிலாளர்கள், சங்கீத வித்வான்கள், கடலுக்கு அப்பால் வெளிநாடுகளில் உள்ளவர்கள், சங்கங்கள், சபாக்கள், பள்ளிக்கூடங்கள், கல்லூரி ஸ்தாபனங்கள் 'கல்கி' ஏஜண்டுகள்—இப்படிப் பல இடங்களிலிருந்து நமக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன.

அவற்றில் சில நமது நேயர்களின் பார்வைக்கு அளிக்கிறோம். எல்லோருக்கும் பொதுவான இந்தத் துக்கத்தில் ஒருவருக் கொருவர் அந்தத் துக்கத்தைப் பரிமாறிக் கொள்வதில் ஓரளவு ஆறுதல் இருக்கிறதல்லவா!

●

ஸ்ரீ டி. சதாசிவம் அவர்களுக்கு,

அன்பும் ஆசியும். ஓம் நமோ நாராயணா. இவ்வுலகை விட்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நீத்த செய்தி எனக்குக் காண்பிக்கப் பட்டது. நமது நாகரிக வளர்ச்சிக்காகவும் பண்பாட்டுக்காகவும் அவர் இவ்வுலகில் இடையறாது உழைத்து இவ்வுலகத்தவர் அனைவருடைய அன்புக்கும் பாத்திரமாகி விட்டார்.

மரணம் என்பது எப்பொழுதும் உடலுக்குத்தான் உண்டு. ஆத்மாவும் உடலும் ஒன்றெனக் கருதி மிருகப் பிராயமாக வாழும் மனிதனே சாவு நேரும்போது உண்மையாக இறப்பவன். ஆனால் நம் ஒப்பற்ற கிருஷ்ணமூர்த்திக்குச் சாவு ஏது! கிருஷ்ணமூர்த்தி இந்தப் புது யுகத்தின் உள்ளமும் உணர்ச்சியும் அல்லவா! அவரது ஆத்ம சக்தி என்றென்றும் நம்மிடை நிலைத்து நிற்கும். அப்படியே அவருடைய பெயரும் நிலைத்து நின்று, பின் வரும் பலப்பல ஆண்டுகளுக்கு அவருடைய வாழ்க்கை மற்றவர்களை ஊக்கப் படுத்திக் கொண்டேயிருக்கும்.

நம்மைப் பிரிந்து சென்ற அந்த ஆன்மாவுக்குச் சாந்தி அளிக்கப் பிரார்த்தித்து நாம சங்கீர்த்தனை செய்தேன்......

ரிஷிகேசம், சிவானந்தா
ஹிமாலயம் 8—12—54

●

அன்பார்ந்த சதாசிவம் அவர்களுக்கு,

உங்களுக்கு எவ்வளவு பெரிய தூக்கம் ஏற்பட்டிருக்கிறது என்பதை என்னால் சுலபமாக ஊகித்துக் கொள்ள முடிகிறது. தமிழ் இலக்கியத்துக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் நிறைவுபடுத்த முடியாததாகும். எனினும் உங்களுடைய அபாரமான சமயோசித புத்தியினாலும், திறமையினாலும் 'கல்கி' கொடி என்றும் வானில் வெற்றிகரமாகப் பறக்கச் செய்து கொண்டிருப்பீர்கள்.

பங்களூர் கே. சம்பத்கிரி ராவ்
7—12—54 பிரின்ஸிபல், தேசியக் கல்லூரி

அடியேனை அறியாக் காலத்தில், இருபது ஆண்டுகளுக்கு முன்னர், 'வாழ்வும் தாழ்வும்' என்ற கட்டுரையால் ஆட்கொண்டார். அவரது தூய ஆன்மா, இறைவன் குஞ்சிதபாதத்தில் என்றும் இணைப்புற்றிருப்பதாக.

அண்ணாமலை நகர் ஜே. எம். சோமசுந்தரம்
10—12—54 பி. ஏ., பி. எல்.

●

நண்பர் சதாசிவம் அவர்களுக்கு,

எனது உத்தம நண்பர் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி, திருவிதாங்கூர் தமிழர்களின் நம்பிக்கையின் ஊற்று. சொல்லாலும், செயலாலும், எழுத்தாலும் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி திருவிதாங்கூர்த் தமிழர்களுக்குச் செய்த சேவையை நாங்கள் என்றுமே மறக்க முடியாது. "தாய்த் தமிழகத்துடன் சேருவோம்" என்று திருவிதாங்கூர்த் தமிழ்நாடு காங்கிரஸ் லட்சியம் வகுத்துச் செயற்பட ஆரம்பித்த சமயத்தில், எங்கள் மத்தியில் வந்து எங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளித்த உத்தமத் தலைவர் அவர்.

லட்சியப் பாதையிலே எங்களுக்கு ஏற்பட்ட துயரச் சுமைகளை அகற்ற அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளும், அதற்காக "கல்கி"யிலே அவர் எழுதிய கட்டுரைகளும், அவரை என்றும் எங்களுக்கு நினைவுபடுத்திக் கொண்டிருக்கும்.

திருவிதாங்கூர்த் தமிழர்களுக்குச் சோதனை மிகுந்திருக்கும் இந்த வேளையில், திருவிதாங்கூர்த் தமிழ்நாடு காங்கிரஸ், ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் உதவிக் கைகளை அதிகமாக நம்பிக் கொண்டிருந்தது. அவரது பிரிவு எங்களுக்கு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும்***

நாகர்கோயில்
7—12—54 ஏ. நேசமணி எம். பி.

●

ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் என் தமையனார் காலமான செய்தி கிடைத்தவுடன் எவ்வளவு துக்கம் ஏற்பட்டதோ அதே மாதிரி இன்று காலைப் பத்திரிகையில் 'கல்கி' அவர்களின் மறைவைப் பற்றிப் படித்தவுடன் தாங்க முடியாத அதிர்ச்சி ஏற்பட்டது. ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அவர்களின் உடல் நிலை குணமாகிக் கொண்டு வருவதாகத் தங்கள் கடிதத்திலிருந்தும், சென்ற வாரக் 'கல்கி'யிலிருந்தும் படித்து மனம் சாந்தியடைந்த தருணத்தில் இம்மாதிரி துக்க சம்பவத்தைச் சமாளிக்க ஈசுவரன்தான் நமக்கெல்லோருக்கும் தைரியத்தையும் பலத்தையும் அளிக்க வேண்டும்.

கல்கத்தா
6—12—54 டி. எஸ். ஸ்ரீபதி

●

'கல்கி' பத்திராதிபர் அவர்களுக்கு,

"கல்கி"யின் பேனா முனையின் காரணமாக நாதஸ்வரக் கலைக்குத் தனிச் சிறப்பும், முதன்மை ஸ்தானமும் ஏற்பட்டன என்பதை நாதஸ்வர வித்வான்கள் யாவரும் என்றென்றும் மறப்பதற்கில்லை. அன்னாரின் தொண்டினால்

நாதஸ்வரக் கலை மட்டுமல்ல, இசைக்கலையும், நாடகக் கலையும் அபிவிருத்தி அடைய முடிந்தது. அன்னாரின் மறைவினால் தமிழ் நாட்டுக்கு அளவிட முடியாத நஷ்டம் என்பதைத் தெரிவித்துக் கொள்வதோடு, அன்னார் விட்டுப் போன பல காரியங்களைப் பூர்த்தி செய்வதுதான் அன்னாருக்கு நாம் செய்யும் மரியாதையாகும்.

குளிக்கரை
8—12—54
கே. எஸ். பிச்சையப்பா

●

ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

நம் தமிழ்நாடு ஒரு தன்னலமற்ற தியாகியை இழந்து விட்டது. தாங்கள் தங்களுடைய சுய தைரியம் கொண்டும், கல்கி நேயர்களும் நண்பர்களுமான எங்கள் தைரியம் கொண்டும் கல்கியை நடத்தக் கோருகிறேன்.

கூத்தூர்
10—12—54
கே. எஸ். கணபதி அய்யர்

●

அன்புள்ள சதாசிவம் அவர்களுக்கு,

தமிழ்த் தாய் தன் உத்தமப் புதல்வனை இழந்து வாடுகிறாள். எனக்கு வேறு ஒன்றும் எழுதத் தோன்றவில்லை.

கடையம்
6—12—54
தங்கம்மாள் பாரதி

●

எனது பேரன்புக்குரிய நண்பர் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களின் மறைவைக் கேட்டுத் திடுக்கிட்டேன். இது தமிழகத்துக்குப் பெரு நஷ்டம்.

அபிராமபுரம்
சென்னை - 18
ஜி. என். பாலசுப்ரமணியம்

●

ஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

கல்கி அவர்களைப் பற்றி நினைக்க நினைக்க நெஞ்சு குமுறுகிறது. இன்னும் நெடுங்காலம் வாழ்ந்து பணி செய்ய வேண்டியவர். பிறருக்கெல்லாம் ஒரு ஆதர்சமாக வாழ்ந்த மகா புருஷர், அவரையும் விதி இப்படிச் சதி செய்து விட்டதே! இந்தப் பிரளயமான மகா துக்கத்தைத் தாங்குவதற்குக் கடவுள்தான் உங்களுக்குச் சக்தியைக் கொடுக்க வேணும். வேறு என்ன எழுதப் போகிறேன்!

நெல்லிக்குப்பம்
8—12—54
குகப்ரியை

●

தமிழ் கூறும் நல்லுலகம் அத்தனையும் ஒன்று சேர்ந்து செய்த பாவத்தின் விளைவுதான் அவருக்கு இந்த அகால மரணத்தை உண்டாக்கிவிட்டது போலும். ஆண்டவன் ஐம்பத்தைந்து வயசு தானா அவருக்குக் கொடுத்திருக்க வேண்டும்? ஐந்நூறு வயதுவரை அவர் வாழ்ந்திருந்தாலும் வற்றாத தமிழ் வளமும் கற்பனை ஊற்றும் நிறைந்த பிரதேசமல்லவா அவருடைய திருமேனி. அதை அழித்து விட்டானே பாவி யமன்!

கெடுவாய் நமனே கெடுவாய்—கற்பகப்பூங்
காவெட்ட லாமோ கரிக்கு.

என்று அந்த யமனை நாம் சந்திக்கும் வரைக்கும் மனமாரத் திட்டிக் கொண்டிருக்க வேண்டியதைத் தவிர வேறு என்ன செய்ய!

புதுக்கோட்டை
9—12—54
வேலம்மாள்

●

பிரபல காங்கிரஸ் ஊழியரும், காவல் ஆசிரியரும், தன்னிகரில்லாத் தலைவரும், பத்திரிகை நற்பணியின் ஒப்பற்ற சீர்திருத்தச் சிறப்புடையாரும், "அமரன் கருப்பையா" என்ற தலைப்பிட்டு, தம் பத்திரிகை இதழில் எழுதி, எங்கள் போன்ற ஏழைக் காங்கிரஸ் உண்மை ஊழியர்களுக்கு ஊக்கம் தந்து, மேலும் நல்ல தொண்டாற்ற நற்பெயரும், புகழும் தேடித் தந்த திரு ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) அவர்கள் காலமானார் என்ற செய்தி கேட்ட நாங்கள் இடிவிழுந்த சுவராயிருந்துவிட்டோம்.

மதுரை
10-12-54
மா. ஓ. குருசாமி
காங்கிரஸ் ஊழியன்.

●

ஏழெட்டு ஆண்டுகளுக்கு முன், முன்பின் எழுதிப் பழக்கமில்லாத என் அரசியல் துணுக்குகளைக் 'கல்கி'யில் பிரசுரம் செய்ததுடன், தன்னைச் சென்னையில் வந்து பார்ப்பதற்கான வழிச் செலவையும் கொடுத்து உதவினார். என்னைப் போன்று எத்தனையோ எழுத்தாளர்களுக்கு உதவி செய்தவர் மறைந்து விட்டார்!

கணியூர்
6—12—54
ரா. கு.

●

நேற்று மாலை வீட்டில் யாரு மிருக்கவில்லை. அதனால் தற்செயலாக ரேடியோவைத் திருப்பினேன். எனக்காகவே காத்திருந்தவர்போல, செய்தி அறிவிப்பாளர் வருத்தத்துடன் செய்தியைச் சொன்னார். அத்துடன் அவர்களது உணர்ச்சியும் அன்பும் மிகுந்த சொற்கள் என் உள்ளத்தைத் துளைத்தன. இருபதாண்டுகளாக எதிலும் வேறுபட்ட நோக்கமில்லாமல் பின்னிக் கிடந்த



ஆசிரியர் கல்கி அவர்களுக்கு 'கல்கி' ஏஜண்டுகளிடம் மிருந்த அன்பும் மரியாதையும் உண்டு. ஒருசமயம் அவர்கள் இலங்கைக்குச் சென்றிருந்தபோது யாழ்ப்பாணம் ஏஜண்டு ஸ்ரீ தம்பித்துரையுடன் சேர்ந்து ஒரு படம் எடுத்துக் கொண்டார்.

---

உள்ளங்கள் பலவந்தமாகப் பிரிக்கப் பட்டு விட்டன. தன்னைச் சேர்ந்தவர்களை உயர்த்தி விட்டுக் கொண்டே தன்னையும் உயர்த்திக் கொண்ட ஒரு ஜோதி மறைந்து விட்டது. நியதி, விதி என்ற சொல்லை நம்பி ஆறுதல் அடைவதைத் தவிர வேறு வழி இல்லை.

பம்பாய்
6—12—54 ஸ்ரீமதி ஆர். வி. சாஸ்திரி

●

'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி மறைவுக்கு என் அனுதாபம். அன்னார் ஆத்மா சாந்தியடைய ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றேன். கல்கி மறைவு தாயை இழந்த கன்றைப் போல் ஆகி விட்டது. 'கல்கி' பத்திரிகைக்கு ஆண்டவன் துணை இருந்து ஓங்கி வளர அருள் புரிவாராக.

திரிகோணமலை
சிலோன் வை. பழனியாண்டி

●

அன்பார்ந்த சதாசிவம் அவர்களுக்கு,

இன்று காலைப் பத்திரிகைகளில் ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி காலமான செய்தி படித்துத் திடுக்கிட்டேன். பல்லாண்டுகள் அவருடன் நெருங்கிப் பழகிப் பல நல்ல காரியங்கள் செய்துள்ள தங்களுக்கு இப் பிரிவு மிகவும் தாங்க முடியாததாக இருக்கும். ஆனால் வாழ்க்கையில் பலமுறை இவ்வாறு கருக்கென்று தைக்கும் முறையில், நாம் எவ்வளவு முயன்றாலும், நமது வாழ்க்கையை வேறு ஒரு பெரிய சக்தி உருவாக்கி வருகிறது என்று உணர்த்தப் படுகிறோம். எனது ஆழ்ந்த அனுதாபங்களை ஏற்றுக் கொள்ளுங்கள்.

கோலாலம்பூர்
மலேயா ஆர். ரமணி

●

அன்புடையீர் !

கல்கி அவர்களின் மறைவைக் கேட்டேன். என் காதுகளையே என்னால் நம்ப முடியாமற் போய் விட்டது. அவர்களது மறைவுச் செய்தி என்னைத் துயரக் கடலிலே ஆழ்த்தி விட்டது. அவரது பிரிவு தமிழ் நாட்டுக்கு மட்டுமல்லாது தமிழ் பேசும் சுமநாட்டுத் தமிழர்கள், முஸ்லிம்களாகிய எங்கள் எல்லோருக்கும் பெரு நஷ்டம்; எல்லோருக்கும் கவலை. ஆண்டவன் அழைப்பை எவர்தான் மறுக்க முடியும்! அந்தோ! கல்கி ஆசிரியர் அவர்களும் ஆண்டவன் அழைப்பை ஏற்றுக் கொண்டு போய் விட்டார். அவர் தமிழை வளர்க்கச் செய்த சேவைகளும் நேயர்களை மகிழ்விக்கவும் அறிவு வளர்க்கவும் அவர் வரைந்த கதைகளும் மறக்கவே முடியாதவைகள்.

ரம்புக்கனை, இலங்கை
8—12—54 எஸ். ரபியா

●

என் முதல் கட்டுரை அவர் தூண்டியதால் எழுதப் பெற்று "நம் போர்ப் படைகள்" என்னும் புத்தகமாக ராஜாஜி மண்டபத்தில், சென்னை சேனாபதியாயிருந்த ஜெனரல் ஸ்ரீ ருத்ரா முதலிய பெரியோர்கள் முன்னிலையில் (நான் அச்சமயம் அங்கிருக்க இயலவில்லையாயினும்) விமர்சன விழாவுடன் வெளியாயிற்று.

இதற்குக் காரணம் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அவர்களே என்று நான் சொல்ல வேண்டியதில்லை. என் போன்று இன்னும் பலரைத் தமிழில் எழுதத் தூண்டி, முன்னுக்குக் கொண்டு வந்தது தமிழுலகம் அறிந்ததே. அத்தகைய பெரியார் மறைந்து விட்டார். அவர் நாமம் என்றும் நின்று நிலவுவதாக!

ராஞ்சி, பிஹார் லெப்டினண்ட் கர்னல்
9—12—54 ஆ. நீ. க. மூர்த்தி பி. ஏ. பி. எல்.

●

நமது ஏஜண்டுகள் ஆழ்ந்த அநுதாபத்துடன் அனுப்பியுள்ள கடிதங்களில் சில பகுதிகள்:

மானேஜிங் டைரக்டர் டி. சதாசிவம் அவர்களுக்கு,

தங்களுடன் இத்தனை நாளும் இசைந்து இருந்த கல்கியைத் தமிழ்நாடு மட்டுமின்றிப் பிற இடங்களிலும் பரவச் செய்த உங்கள் அருந் துணைவர் கல்கி அவர்களின் பிரிவு தனிப்பட்ட முறையில் உங்களுக்கும் சிறப்பாகக் 'கல்கி' காரியாலயத்திற்கும், குறிப்பாகத் தமிழ் நாட்டுக்கும் தாங்க முடியாத துயர் என்பது கண்டு மிக வருந்துகிறோம். இந் நிலையில் 'கல்கி' ஒன்றே அவருடைய அழியாத நினைவுச் சின்னமாக விளங்கி நிற்கிறது. அதன்மூலம் தமிழகத்திற்கு இன்பமும் அறிவும் அவர் புகட்டிவந்த முறையில் இனியும் முயலுவதே நாம் எண்ணிச் செய்தற்குரிய செயலாகும்.

கோபி ஜி. ஆர். கிருஷ்ணமூர்த்தி
8—12—54 (கோபி கல்கி ஏஜண்டு)

●

இன்றைய வானொலி மூலம் 'கல்கி' மறைந்த செய்தி கேட்டு உள்ளம் உடைந்தோம்... கலையுலகிற்கு ஈடற்ற நஷ்டம் ஏற்பட்டுள்ளது.

திண்டுக்கல் ச. ஆதி நாராயணன்
ஆ. சங்கர நாராயணன்

●

நமது காரியாலயத்திற்கும் தமிழ் நாட்டிற்கும் ஈடுசெய்ய முடியாத பெரு நஷ்டம் ஏற்பட்டுள்ளது. 'கல்கி' ஆத்மா சாந்தியடைய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

கோலாலம்பூர்
மலேயா பி. சிவகுரு

பொதுவாக மக்கள் என்பவர்கள் மறைய வேண்டியவர்களே. ஆனாலும் அவர்களில் சிலர் என்றென்றும் மறையாமல், அவர்கள் தங்கள் செய்கைகள் மூலம் அமரத்துவம் பெற்று விடுகிறார்கள். ஸ்ரீமான் கிருஷ்ணமூர்த்தி பின் சொல்லப்பட்ட சிலரில் ஒருவராகும். இந்த உயர்ந்த எண்ணமே, அவர் என்றும் நம்முடன் இருப்பார் என்ற எண்ணமே, அவர் மறைந்தார் என்றசெய்தி கேட்டு ஏற்பட்ட அதிர்ச்சியிலிருந்து என்னை, எழுப்பி இக்கடிதம் எழுதச் செய்திருக்கிறது.......

வெலிங்டன்
கொழும்பு — எஸ். வைஸ்

●

நாம் ஒரு பெரிய எழுத்தாளரை, சிந்தனையாளரை, தேச பக்தரை இழந்து விட்டோம்.

நாகபட்டினம்
7—12—54 — பி. வெங்கடராமன்

கல்கி அவர்கள் சீக்கிரம் குணமடைய வேண்டும் என்று பிரார்த்தனைகள் நடத்தினோம். கடவுளின் விருப்பம் வேறாக இருந்திருக்கிறது. அவருடைய திருவிளையாடல்களை யாரே அறிவர்!

கும்பகோணம்
7—12—54 — ஆர். எஸ். எஸ். மணி

●

கல்கியின் பிரிவைத் தாங்க எல்லாம் வல்ல ஈசன் நமக்குச் சக்தி கொடுக்கப் பிரார்த்திக்கிறேன்.

அம்பா சமுத்திரம்
6—12—54 — ஜே. ராம்சிங்

●

...அவர் உடல் மறைந்ததே தவிர அவரும் அவருடைய தமிழும் எல்லோரிடமும் இருந்து அவருக்கு அமர வாழ்வு அளித்துவிடும்.

திருவனந்தபுரம்
6—12—54 — எஸ். ஆர். அய்யர்



நியூயார்க் வார்னர் - ஹட்தட் இன்டர்நேஷனல் ஸ்தாபனத்தின் உப தலைவர் ஸ்ரீ எப். ஸி. க்ளிர், காரியதரிசி ஸ்ரீ ஆர். பி. க்ளார்க் ஆகியோர் சென்ற 7-ம் தேதியன்று T. W. A. விமானம் மூலம் பம்பாயில் வந்து இறங்கியபோது பல நண்பர்கள் அவர்களை வரவேற்றனர். படத்தில் (இடமிருந்து வலம்): ஸ்ரீ ஹரிஷ் ஸி. ஜெயின் (நேஷனல் அட்வர்டைஸிங் ஸர்வீஸ் லிமிடெட் - டைரக்டர்) ஸ்ரீ ஆர். பி. க்ளார்க், ஸ்ரீமதி மீகர், ஸ்ரீமதி கோயிலிங், ஸ்ரீ எப். ஸி. க்ளிர், ஸ்ரீ டி. ஸி. மீகர் ஆகியோரைக் காணலாம்.

---

நமது கல்கி அவர்கள் விரைவாகக் குணமடைந்து வருகிறார் என்ற செய்தியைப் படித்துச் சந்தோஷமடைந்த எனக்கு இவ்வாறான திடீர் செய்தி நம்பத் தகுந்ததாக இல்லாததோடு வாய்மொழியால் விவரிக்க முடியாத வருத்தம் தருகிறது.

கூடலூர்
6—12—54

எஸ். வி. ரமணி

●

மேலே வந்த அநுதாபக் கடிதங்களைப்போல் இன்னும் பல நேயர்களும் எழுதியிருக்கிறார்கள்:

ஸ்ரீமான்கள் :—கே. எம். குருசாமி ரெட்டியார், அத்தியூர்; ஆர்.எம். சுப்பிரமண்யம், மணமேல்குடி; எஸ். வி. ரங்கராஜன், நாமகிரிப்பேட்டை; பி. ராமதுரை, திருச்செங்கோடு; வி. கே. ராமசாமி, வாய்த்தலை கூடலூர்; கே. சீனிவாசய்யங்கார், நாச்சியார் கோவில்; கே. ஏ. வி. சர்மா, சிவகாமி, திருவையாறு; சு. ரா. செ. சோமசுந்தரம் செட்டியார், நாட்டரசன்கோட்டை; பி. கோவிந்தசாமி, ஆலங்குடி; ஜோஸி பிரதர்ஸ், ஜபல்பூர்; சரோஜினி அம்மாள், பொன்னேரி; ஸி. கே. கோபாலன், கண்ணனூர்; என். ஆர். ரங்கசாமி, கூடலூர்; எஸ். தங்கவேலு முதலியார், குறிஞ்சிப்பாடி; கே. ஆர். அப்புசுவாமி முதலியார், ஜவுளி வியாபாரம், காவேரிபுரம்; என். எஸ். குல்கர்ணி, பூனா; ஏ. அபூபக்கர் ஷா ராவுத்தர், ஆடுதுறை; ஜி. சுந்தரராஜ அய்யங்கார், கீழசிவல்பட்டி; ஸி. எஸ். ஆச்சார்யா சோளிங்கபுரம்; ஜி. ஆர். ராமசாமி, கல்கத்தா; டி. ஜி. கோபால் செட்டியார், துறையூர்; அ. ராஜகோபால செட்டியார், ஊரூர்; ஸி. என். கோபாலகிருஷ்ணய்யர், கொச்சி; எஸ். சங்கரய்யர், கரிவலம் வந்த நல்லூர்; டி. வரதாச்சாரி, சேர்மாதேவி; எஸ். ராமசாமி, தென்காசி; செ. கு. ஜயப்பிரகாஷ், ஒட்டன்சத்திரம்; கே.எம். அப்துல் சத்தார், கிருஷ்ணகிரி; வி. ஜயராமன், ஊஞ்சலூர்; ஆர். எம். கருப்பண்ண செட்டியார், மோகனூர்; டி. எஸ். சீனிவாசன், மேட்டுப்பாளையம்; பி. எஸ். சந்திரராவ், மசூலிப்பட்டணம்; கே. ஆர். வெங்கடாசலம், குனியமுத்தூர்; கே. நடராஜன், கல்யாண்; ஏ. ஆர். திருப்பதி நாடார், கடம்பூர்; ஏ. எம். பிள்ளை, சாத்தூர்; எம். கே. லக்ஷ்மணன், திருப்பத்தூர்; பி. கே. பாலகிருஷ்ணன், ஜோலார்ப்பேட்டை; எஸ். வேதராமய்யர், திருப்பராய்த்துறை, வி. வி. எஸ். நாயுடு, பெரியகுளம்; வி. எஸ். டி. வேல்சாமி, பெரம்பலூர்; எச். கஜபதி, வாரங்கல்; வி. பாலசுப்பிரமணியம், விளாத்திகுளம்; ஆர். ஆண்டி, புதூர்; எஸ். நாகசுப்பிரமணியம், வத்ராயிருப்பு; ஜி. ராஜகோபால், குளிக்கரை; ஏ. வேலுசாமி, திருப்புவனம்; ஸி. எம். சீதாராமன், கம்பம்; எஸ். எஸ். மணி, திருமங்கலம்; ப. ரத்தினம், கடுவகளப்பாள்; மூ. மூ. இத்துருஸ், கீழக்கரை; கே. ஆர். கிருஷ்ணன், காங்கேயம்; கே. ஆர். பழனியப்பச் செட்டியார், குளூர்; கே. எஸ். சொக்கலிங்கம், கொடுமுடி; க. ந. து. தங்கவேலு செட்டியார், அதிராமபட்டணம்; எஸ். ராமலிங்கம் பிள்ளை, ஈசனக்குடி; எஸ். அம்மையபிள்ளை, ஆச்சான் புரம்; பி. கே. எஸ். மணி அய்யர், கந்தர்வ கோட்டை; மா. கோவிந்தராஜன், ஒரத்தநாடு; முனுசாமி, விருத்தாசலம்; ஸி. எஸ். ராமநாதய்யர், பாலக்காடு; டி. மாரியண்ணன், கோனுபேட்; பி. ராமநாதன், குளித்தலை; கே. பொன்னுசாமி நாயுடு, போத்தனூர்; ஜி. சுந்தரராஜன், சிவகங்கை; எஸ். இராமசாமி, நாமக்கல்; கா. ஆ. கோவிந்தசாமி, திருக்கோவலூர்; எம். ஆர். ஆராவமுது, நீடாமங்கலம்; வி. என். சுந்தரராஜ அய்யங்கார், வாங்கல்; ஏ. சம்பத் நரசிம்மன், ராணிப்பேட்டை; பி. நாகலிங்கம், மாப்பிள்ளைக்குப்பம்; கே. ஏ. ராவ், நாகபுரி; ராம. கண்ணப்பா, குன்றக்குடி; எஸ். ரத்தினம், கிழையூர்; கே. ராதாகிருஷ்ணன், முசிரி; எல். ஸி. லக்ஷ்மிநரசிம்மன், தின்னனூர்; எஸ். வி. மணி, தமூகூர்; என். ஆனந்தம் பிள்ளை, சிவகிரி; எஸ். நடராஜன், அருப்புக்கோட்டை; பி. கே. நரசிம்மன், குப்பம்.

* * * * * * * *

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No. 20, Dr. Guruswamy Mudaliar Road. Kilpauk. Madras-10.

# இந்த அழகான, நால்வர் செல்லும் வண்டியில்
# மேலும் ஒருவருக்கு
# இடமிருக்கிறது



புதிய பியட் "1100" மோட்டார் அமைப்பிலும் உழைப்பிலும் மட்டுமல்ல, வசதியிலும் புதியது. விசாலமான சாளரங்களுடன், உள்ளே நிறைய இடமிருக்கிறது - ஐவர் சௌகரியமாகப் பிரயாணம் செய்யலாம். வேறு பல சிறப்புக்களுடன், ஸ்டீரீம் லைன் அமைப்பு; உல்லாசமான குஷன் யாத்திரைக்கான விசேஷ, அதிர்ச்சியைத் தவிர்க்கும் ஸ்பிரிங்குகள்; பாதையில் நேர்த்தியாக ஓடுவதற்கான பிரத்யேக அமைப்பு; பொங்கிவரும் வேக சக்தி; காலனுக்கு அதிகப்படியான மைல் சவாரி. புதிய பியட் "1100" மோட்டார் உங்களுக்குப் பெருகிய திருப்தி, வசதி, இன்பம் அளிக்கிறது.

முன்னேற்றத்தோடு
தயாரிப்பவர்கள்

**தி பிரிமியர்
ஆடோமொபைல்ஸ் லிட்.**



# பியட் புதிய 1100

விலை : ரூ 9730/- (எக்ஸ் - பாக்டரி, வரிகள் வேறு)

விற்பனையாளர்:—

டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ், லிட்.
"டி. வி. எஸ். பில்டிங்", மேற்கு வேலி தெரு, மதுரை
சுந்தரம் மோட்டார்ஸ் லிட்., மவுண்ட் ரோட், மதராஸ்

